# அவிநயம்



'மூவுலகு உணர்ந்த மூர்த்தி'

மகாவீரரின் 2573 ஆவது

பிறந்த நாள் நினைவு வெளியீடு

Lord Mahavira's

Commemorative Publication

Published on

2573rd Jayanthi of Lord Mahavira

வணக்கத்திற்குரிய

மைசூர், ஓம்புச ஜைன மடாதிபதி

அறந்தகு சாருகீர்த்தி அடிகளாரின்

இணை அடிகளுக்கு

*Dedicated to*

**Swasthi Shri Shri**

**Charukeerthi Swamiji,**

**Sri Jain Mutt**

**Hombuja, Mysore**

ஜைன இளைஞர் மன்ற வெளியீடு-6

# அவிநயம்

## மூலமும் உரையும்



உரையாசிரியரும், பதிப்பாசிரியரும் :
க. ப. அறவாணன்
M.A., B.O.L., M.Litt.

வெளியீட்டாளர் :
ஜைன இளைஞர் மன்றம்
சென்னை-600 017

AVINAYAM WITH COMMENTARY (IN TAMIL) 

Commented and Edited by
K. P. ARAVAANAN, M.A., B.O.L. M. Litt.
Assistant Professor of Tamil
Pachaiyappa's College
Madras 600030

*Publisher*:
JAIN YOUTH FORUM
1-A, Boag Road
Madras 600 017

First Edition: 24th April 1975

Price: Rs. 9 $ 2.00 £ 1.00

*Printers*:
Srēmati Printers, Madras-600 002

*Copies can also be had from*:
The South India Saiva Siddhantha
Works Publishing Society Ltd.
Broadway, Madras-600 001

Paari Nilayam
Broadway, Madras-600 001





# பதிப்புரை

மெய்ப்பொருள் காட்டி உயிர்கட்கு அரணுகி
துக்கம் கெடுப்பது நூல்

இலக்கியங்களின் வளர்ச்சியைத் தெள்ளிதின் காட்டும் காலக் கண்ணுடி இலக்கணங்களே யாகும். அகவைக்கு அகப்படாத நம் தமிழ் மொழிக்கண் தோன்றிய இலக்கியங்களின் நெடிய வளர்ச்சியை நேரிதாகக் காட்டத் தோன்றிய இலக்கண நூல்கள் மிகப் பலவாகும். அவற்றுள் பல—நெடிய பல—காலதேவனின் கைபட்டும், சமயக் காழ்ப் பாளர் சினம் பட்டும் வாழ்வை இழந்தன. ஆனால், அவை தமிழரிடையே வாழ்ந்த காலத்துப் பதித்த அடிச்சுவடுகளை, இன்றும் உரையாசியர்கள் உரை வழியாகக் காணுகிறோம். அங்ஙனம் கண்டெடுத்துத் தொகுத்த அடிச்சுவடுகளின் தொகுதிதான் அவிநயம் என்ற இந்நூல்.

தமிழ் இலக்கணம், இலக்கிய வளர்ச்சிக்கு ஏற்ப, காலந்தோறும் விரிவடைந்து வந்திருக்கிறது. இன்றைக்கு இருக்கின்ற இலக்கண நூல்களுள் காலத்தால் முந்தியது தொல்காப்பியமே. அத் தொல் காப்பியம், தமிழ் இலக்கணத்தை எழுத்து, சொல், பொருள் என மூன்ருகப் பகுத்துக்கொண்டு ஆராய்கிறது. ஆனால், அதற்குப் பின்னே எழுந்த இலக்கண நூல்கள் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐந்தாகப் பகுத்துக் கொண்டு ஆய்ந்துள்ள நிலைமையை அறிகிறோம். யாப்பும் அணியும் தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் அடக்கப்பட்டிருந்தாலும், பிற்காலத்தே, அவை தனித் தனி நூல்களாக ஆராயப்படும் நிலைமைக்கு, அளவில் விரிவு பெற்று விட்டன. இங்ஙனம், ஐந்து இலக்கண நெறி கால்கொண்ட நிலையில் அவற்றை ஒரு சேர ஆராய்ந்த அறிஞர்கள் இருந்தனரோ என்ற ஐயம் தோன்றுகிறது. பார்புகழும் பவணந்தி பஞ்ச இலக்கணங்களையும் ஆராய்ந்தார் என்பர். ஆனால் நன்னூலில் எழுத்தும் சொல்லுமே கிடைத்துள்ளன. அவிநய நூற்பாக்களை ஒருங்கு திரட்டி வைத்துப் பார்க்கும் பொழுது அவிநயனார் ஐந்து இலக்கணங்களையும் எழுதி இருக்கலாம் எனக் கருதத் தோன்றுகிறது. ஆயினும், இது மேலும் ஆராய வேண்டிய ஒன்ருகும்.

கடல்படு முத்துகளைப் போல உரைகளுக்கு இடையே மறைந்து கிடந்த அவிநய நூற்பாக்களை ஒன்று திரட்டித் தொகுத்துத் தந்ததுடன் அந் நூற்பாக்களுக்கு விரிவான உரையினையும் எழுதித் தந்தார் திரு. க. ப. அறவாணன், எம்.ஏ., பி.ஓ.எல்.. எம்.லிட். உரையைப் பதவுரையாக மட்டும் நிறுத்தி விடாமல் எளிய இனிய நடையில் விரிவுரையாகத் தந்துள்ளார். நூலைத் தொகுப்பதற்கு அவர் உழைத்த உழைப்பும் உரை தருவதில் அவர் காட்டியுள்ள அறிவுக் கூர்மையும் அறிஞர் பெருமக்களின் பாராட்டைப் பெறும் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. தற்கால மொழி நூல் ஆய்வாளர் கருத்துகளோடு அவிநயனார் கருத்துகளை இணைத்துக் காட்டும் இடங்களில் அவருடைய நுண்ணிய மொழியியல் அறிவைக் காணுகிறோம். மொழி ஒப்பீடு ஒரு தனிக்கலையாக வளர்ந்து வரும் இக்காலத்தில், தொல்காப்பியருக்கு ஒத்தவராக வைத்துப் போற்றப்பட்டுள்ள அவிநயனார் எழுதிய அவிநயம், மொழியியல் ஆய்வாளர்களுக்கு ஒரு கருவூலமாகும். இத்தகு சிறப்பு மிகுந்த இலக்கண நூலை,

பகவான் மகாவீரர் 2573ஆவது பிறந்த நாள் நினைவு வெளியீடாக இன்று (24—4—75) தருவதில் ஜைன இளைஞர் மன்றம் பெருமை கொள்கிறது.

இந்நூலை அழகாக அச்சிட்டுக் கொடுத்த ஸ்ரீமதி அச்சகத்தார்க்கு அன்பு கலந்த நன்றியை உரிமையாக்குகிறது ஜைன இளைஞர் மன்றம்.

அறிஞர் உலகும், அறிவார் உலகும் ஏற்றுப் போற்றி வாங்கி இன்னன போன்ற நன்னெறித் தமிழ்ப்பணியில் எம்மை ஊக்குவிக்க வேண்டுமென வேண்டுகின்றோம்.

முக்குடையான் தாள் வாழ்க!

ஜைன இளைஞர் மன்றத்தார்

# INTRODUCTION

Tamil language is so rich in her literature as well as in grammar. Jains' contribution to Tamil is outstanding. Especially in grammatical field Jains bear a major part. Avinayam is one of it. Avinayan is the name of the author. In Tamil, Tolkāppiyam is the oldest grammar. Next to that Avinayam is so important one. Unfortunately the full text of Avinayam is not available to-day. In medieval time, Vedic people were trying to destroy the Jains' work. They did. Avinayam too met the same fate. Anyhow, Avinayam had a dominant role even in 14th Century A.D. Mayilaināthar—an ancient Commentator of Nannūl, belonging to 14th Century A.D.—mentioned and quoted the sutrās of Avinayam very often. Nearly eleven famous authors quoted or mentioned this work.

**Age of Avinayam :** Gunasākarar, the only Commentator of Yāpparunkalam quoted the sutrās of Avinayam frequently. His period is 1015-1040 A.D. Therefore, we may conclude Avinayam was written before 10th century A.D. Ādhiulā (ஆதிஉலா) is a kind of genre in Tamil. This belongs to 9th century i.e. 825-850 A.D. This is the first 'Ulā' genre. So it was called as "Ādhi Ulā" Ādhi means first. Avinayam speaks about the definitions of 'Ulā' genre, (Sutrā 121). Usually, grammar or definition was written only after the concerned literature. So Ādhiulā was followed by Avinayam. It means Avinayam was composed only after 840 A.D. Therefore it was written between 840 A.D. and 1015 A.D.

The social circumstances also confirms this view. A very great work like Avinayam should have been written only in calm atmosphere. In the history of Tamilnād, there was no such situation for Jains before 8th century A.D. From 881 A.D. onwards, Later Cholas established their empire in whole of South India. Side by side with Vedic religion Jainism had a fair following and enjoyed the patronage of the princes and people. Tamil literature was greatly enriched by the writings of Jain

authors. Number of inscriptions of Chola period contain noteworthy references to Jain centres in the Tamil land. Mādhava, the son of Venkatarya and Sundari, lived in a village on the south bank of the 'Kāviri' (காவிரி) and composed an extensive bhasyā, on the Rig-Vedā. He says that while writing his great work, he lived in comfort in the country of the most renowned warrior of the world :

*'Jagatām ekavīrasya visaye nivasan sukham'*

This statement implies that he flourished under royal patronage.[1] This 'sukham' is not only to Vedic-brahmin but also to Jain. More references of "pallicandam" (பள்ளிச்சந்தம்)—the land of the Jains' temple was a recognised category of tax free land-known to the revenue accounts of this time. Therefore during this period it was more convenient to write more books. At the same period Avinayanār composed his famous grammar.

**Two Tolkappiyars concept:** In this Chola's period, countless literatures flourished. Truly next to the Sangam age a second golden age appeared. Parents chose the names from Sangam period and named their children as Kābilan, Avvai, Sāttan etc. as to day. At this time the name Tolkāppian took a second rise. In this way Tolkāppiyar II was born in 8th or 9th century A.D. Tolkāppiyar II too wrote some grammars. This grammarian was one amongst the twelve 'sisyās' of Agattyā.

The Pothuviyal Thinai (பொதுவியல்திணை) and Purappuram (புறப்புறம்) are not available in Tolkāppiyam I, (5th century B.C.). These two are available only in Purapporul Venpāmālai (9th Century A.D.) and Nambi Akapporul. But, the commentator of Yāpparunkalam quoted a sutrā of Tolkāppiyar with 'Pothuviyal thinai' and 'Purappuram'.

'வாகை பாடாண் பொதுஇயல் திணைஎனப்

போகிய மூன்றும் புறப்புறப் பொருளே'

என்றார் தொல்காப்பிய அகத்தியம் உடையார்[2]

1. Nilakanta Sastri, Prof. K. A., Cholas P. 687.
2. Yapparungalaviruthi, P. 571.

Therefore this sutrā surely belongs to Tolkāppiar II, not Tolkāppiar I. Please note here, Akatthiar also linked with Tolkāppiar only next to him. It will show, Akattyā and twelve sisyyā's story only belongs to 8th or 9th century A.D. The same way, the commentator of Navanīthapāttiyal, quoted a sutrā in the name of Tolkāppiyar.

'மேவிய செய்யுளின் முதற்சீர்க் கண்ணே
விலங்கின் கதியும் நரக கதியும்
பாவியல் பாடப் பழியது முடியும்

என்றார் தொல்காப்பியனார்'[3]

In this sutrā, according to him, Tolkāppiyar mentioned Mruga gati and Naraga gati (மிருக கதி, நரக கதி). These two are not available in Tolkāppiyam I. These are of the later origin. Therefore this sutrā was written only by Tolkāppiyar II.

'Pannirupatalam'-a primary book (முதல்நூல்) of Puraporul Venpāmālai-was written by these twelve 'sisyas'. Tolkāppiyar II and Avinayanar are the two authors of two 'Patalams' (Chapters).

The commentator of Nēminatham (10th Century A.D.) a grammatical work in Tamil, mentioned the names of Tolkāppiyar and Avinayan by the by (Eluthu 23, Col. 24). Pannirupatalam was followed by Purapporul Venpāmālai. According to the experts, it belongs to 9th Century A.D. Therefore, Avinayanar, the author of Avinayam and Pannirupatalam also belongs to this same period.

Ilampūranar, a commentator of Tolkāppiyam refuted that Pannirupatalam was not written by Tolkāppiyar. Tolkāppiyar is the first disciple of Akatthiyar. Therefore, he wrote the first chapter of Pannirupatalam i.e. Vetchipatalam. Tolkāppiyar's concept of 'Purathinai' (புறத்திணை) is seven only. How he wrote 'Vetchipatalam' one among the twelve? He did not accept the classification of twelve. Is it that Tolkāppiyar contradicted himself ? Never. Therefore Ilampūranar questions the authorship of the first chapter in Pannirupatalam by Tolkāppiyar I.

3. நவநீதப் பாட்டியல் உரை 21.

"In the history of Tamil literature. various authors have the same proper names, for example Nakkirar, Kallātar and Avvaiyār. One has to assume therefore that there was an earlier Tolkāppiyar and a later Tolkāppiyar, that the latter alone was the disciple of Akatthiar written the first chapter in Panniru-patalam. The name of sage Akatthiya known to traditional scholars, by the time of the Vēlvikkudi grant, another Akattiya, the patron saint and teacher of Tamil is known. The Jains and the Buddhists along with the Hindus vied with each other in claiming Akattiya the Tamil teacher and the saint to their respective folds".[4]

**Gatis concept:** Another important point must be noted here. Gati concept is originally constituted by Jains. Gati (கதி) means birth (பிறப்பு). There are Four births i.e. Mruga gati, Naraga gati, Manusa gati and Dēva gati (மேருமந்தர புராணம் 71, 72, 78). Soul should leave these four through the following of Ratna thraiya. This concept is represented symbolically by the Swastik symbol. The four folds of Swastik symbol denotes the four gatis. In this four, Tolkāppiar II used the two in the above sutra. *Therefore, Tolkāppiar II belongs to Jaina-community.*

**Name of the author:** The book was named after the author. Tamil tradition is this i.e. from author to book. But Sanskrit tradition is vice versa. i.e. book's name to author's name. The name Avinavam is the echo of the author's name as like Tolkāppiyan > Tolkāppiyam.

The meaning for the name 'Avinayan' is still unlocked. But two interpretations are possible. One is that the word Avinayam means unwanted qualities to achieve 'Samyag-Darshan'. Arungalachcheppu–a Jain's work for family men and women–used this word [from 39-42]. Aranerichāram also used this same word (60). Many literatures written by Jains used this word frequently. A name Vinaiyamalā-mother of Gunamalā is also available in Jiivaga Chinthamani (1053). Author of Avinayam also followed the same manner.

4. Meenakshisundaram T.P., Foreign Models in Tamil Grammar 1974—P. 2.

Another interpretation is that the term 'Vinayam' means Blind worship.[6] It is one among the five false beliefs i.e. five mityāthvam[6]. Ēkāntham, Vibarītham, *Vinayam* Samsayam and agngnanam. It may be useful to remind here the term "Panchamiththar" (பஞ்சமித்தர்) used in Appāndainathar Ulā by Anandha Vijaya[7]. The term denotes the believers of these five false beliefs. Vinyam means one who blindly worships all the 'Devas' or 'Gods' without knowing their qualities. If you add 'a' the negative prefix, to the word 'Vinayam' the word 'Avinayam' formed as like Avirōthiāzhvār. In this context, the word Avinayam means non-worship of false gods. Therefore Avinayan means, a man who worships the true god knowing all his qualities. The second interpretation is more convincing. Therefore, Avinayan means-A worshiper of true god. This may be the more suitable interpretation for this name.

**The Religion of Avinayanar:** His name itself showes his affinity with Jainism. Even in his grammatical work, he used the Jaina philosophy. He mentioned the theory of 'atom' in his chapter on phonemics (Avinayam 8). According to him Karma (theory) is the basic reason for pure love.

முன்செய் வினையது முறையா உண்மையின்
ஒத்த இருவரும் உள்ளகம் நெகிழ்ந்து

Avinayam 40.

The above reasons confirmed that Avinaynār was a Jain.

**Contents of Avinayam:** Avinayanār deals with phonology, morphology, Prosody, Love-life and War-life. For prosody only, he composed three books individually i. e. Avinaya yāppu, Avinayappurathinai and Avinayanār pāttival. But Tolkaappiyar I dealt only one chaptar called Cheyyuliyal (செய்யுளியல்). In phonology and morphology also Avinayanār gave different and developed ideas. Pavanandhi, the author of Nannūl blindly

5. I am very thankful to Mr. Adinathan, Editor of Mukkudai for this information.

6. Nemichandrar, Drivya Sangraham, Chap. 2, Sutra 30.

7. Appandi Nathar Ula, Kanni 600, Ed. M. Shanmugam Pillai.

followed the footpath of Avinayam. Unfortunately the whole text of Avinayam is not in our hands. If it is available in full, it may be the biggest grammatical work in Tamil.[8]

According to the commentator of Yāpparungalam, Avinayam was divided into number of chapters i. e. iyal. He himself included itai iyal (இடையியல்) and Uri iyal in his morphology[9] But to-day even a single sutra is not available about particles (இடைச்சொல்) or root words (உரிச்சொல்).

In Avinayam number of new ideas are introduced. Selected ideas are listed here.

1. Noun and verb are the major classification.
2. Āl and ān are the case markers for the third case.
3. He divided phonology into seven head.
4. He counted the secondary letters as 228.
5. Shortened U (குற்றியலுகரம்) is divided into seven division (not as six in Tolkaappiyam).
6. Māthra of Ai is $1\frac{1}{2}$ or 1.
7. 'C' (ச) will follow by all vowels.
8. 'nga' (ஙு) will occur as initial.
9. The plural suffix 'kal' is common to both genders (thinai).
10. In love and war, a classification called 'Akappurathinai' is introduced.
11. In prosody 100 'varnās' are used.
12. ஃ (Āytham) was introduced in between the vowel and consonant.
13. He is the first man to introduce A+V (அ+வ்) for ஔ.

8. A text Kannakkiyal (கணக்கியல்) was written by Avinayanar Rf. Yapparunkala Viruthi, Kazhagam P. 69.

9. Yapparungala Viruthi, Kazhagam P. 571.

14. He is the first man to list the orralapetai (ஒற்றள பெடை) with āytha alapetai.

15. Y (ய) is an allophone of the aytham. This is an important note in the history Tamil phonology.

16 He is the first man to define the morpheme (S 115).

17. He called the verb as 'Kālakkilavi' (a word with time).

18. He is the first man to select the special letters for Tamil (S. 114).

**Avinayanar's Knowledge of Sanskrit :** In the commentary of Nannūl, Mayilaināthar mentioned the ideas of Avinayanār for the signification of each Compounds. (தொகைச்சொல், பொருள் சிறந்து நிற்கும் இடம்)[10] The signification of each Compound is indicated by the first or second word, or by both the words in the compound, or else by the other words suppressed at the end. This explanation is an echo of Pathanjali's Sanskrit work. According to Kielhorn, the passage of Pathanjali is as follows:

"iha Kas'ct samāshah pūrvapadā rthapradhānah, kas'cidat-tara—padārtha krs'cidemya pacārtha—pradhānah, kas'ci dubhaya—padārtha—pradhānah"[11]

Pathanjali lived before 2nd Century A.D. Therefore, Avinayanār followed and mastered the Pathanjali's work. The above mentioned passage proves it. Here another point is also noteworthy. Avinayanār himself wrote a commentary for his grammatical work. This is a special feature in the history of Tamil literature. The above passage was a commentary of Avinayar. A poem was quoted in Yāpparungalakkārigai by its commentary in this following words "Avinayanār quoted this song".[12]

10. கால்வாய், அடைகடல் என்பன வாயை உடைய கால், கடலினது அடை என முன்மொழிப் பொருள் குறித்தன. வேங்கைப்பூ, கருங்குதிரை என்பன பின் மொழிப் பொருள் கருதின. இவை ஈரிடத்திற்கும் அவிநயனுர் காட்டினவை. நன்னூல், 869. அவிநயம் 86.

11. Kielhorn. Systems of Sanskrit Grammar. I. P. 378-379.

12. 'கோழியும் கூவின......' என்பது அவிநயனுர் காட்டிய பாட்டு. யாப்பருங் கலக் காரிகை, 43. அவிநயம் 96. அவிநய உரை என்ற தலைப்பையும் பார்க்க.

Examples or quotations are the parts of a commentary. Avinayanār used both. So he himself a commentator of his work as like Kaiyanār and Aiyanārithanār.

**Commentary of Avinayam:** Raja Pavithra Pallavatharaiyan was the commentator of Avinayam. Mayilainathar a commentator of Nannūl pointed out that this learned man was the commentator. Through his name, we may understand that he may be the king of small region.

அவிநய நூலுள்
தண்டலம் கிழவன்
தகைவரு நேமி
எண்திசை நிறை பெயர்
இராச பவித்திரப் பல்லவ தரையன்

These are the titles given by Maiyilainathar.

A king wrote a commentory to Avinayam. This is the highest tribute to Avinayanār. A commentary written by a king is an unusual feature in the history of Tamil literature. Generally for Jain work in Tamil, the commentary may be written in the author's lifetime itself. Therefore, this commentary also belongs to 9th Century A. D.

Nearly 130 + 11 sutras collected from different commentaries (10th—17th centuries A.D.) These sutras will picture the tremendous work done by Avinayanār. In this edition all the scattered sutras are collected, classified, edited and commented by me.

For this publication I am very grateful to the office bearers of Jain Youth Forum. Especially, I want to acknowledge to Thiru Pulavar Siva. Adinathan who is entirely incharge of proof reading.

**K. P. ARAVAANAN**
*24th April, 1975*

# உள்ளுறை

———

# ஆராய்ச்சி முன்னுரை

தமிழ் இலக்கணக் கோட்பாடுகள் இரு கிளைகளாகப் பிரிந்து வளர்ந்தன. தொல்காப்பியத்தை ஒட்டிய கோட்பாடாக ஒன்றும், தொல்காப்பியத்தை வெட்டிய கோட்பாடாக மற்றொன்றும் கிளைத்தன. தொல்காப்பியர்க்கு மாறான கோட்பாடுகளுள் அவருக்கு அடுத்துத் தோன்றியது அவிநயக் கோட்பாடே என்று கருத இடமிருக்கிறது. தொல்காப்பியர் நெறியினின்று வேறுபட்ட இலக்கணச் செய்திகள் நன்னூலிலும், யாப்பருங்கலம், யாப்பருங்கலக் காரிகையிலும் பிற இலக்கண நூல்களிலும் ஆங்காங்கு இடம் பெற்றுள்ளன. இடம்பெற்ற இச் செய்திகள் பலவற்றிற்கு மூலம் அவிநயம் என்றே தெரிகிறது. இவ்வாறு தனிப்பெரும் இலக்கணக் கோட்பாட்டைத் தன்னகத்துக் கொண்ட இந்நூல் இன்று முற்றும் கிடைக்கவில்லை. எனினும், (1) யாப்பருங்கல விருத்தி, (2) யாப்பருங்கலக் காரிகையுரை, (3) வீரசோழிய உரை, (4) நேமிநாத உரை, (5) நன்னூல் மயிலைநாதர் உரை, (6) சங்கரநமச்சிவாயர் உரை, (7) தக்கயாகப் பரணி உரை, (8) நவநீதப் பாட்டியல் உரை, (9) பன்னிரு பாட்டியல் (10) திருக்குறள் நுண்பொருள் மாலை உரை ஆகிய நூற்களில் அவிநயம் என்ற நூற் பெயரும், அவிநயனார் என்ற நூலாசிரியர் பெயரும், அவிநய நூற்பாக்களும் எடுத்தாளப்பட்டிருக்கின்றன.

**நூலாசிரியர் பெயர் :** அவிநயம் என்ற தனி இலக்கண நூலின் ஆசிரியர் பெயர் அவிநயனார் என்று தெரிகிறது. சில இடங்களில் 'அவினையனார்' என்றும் பாட பேதம் காணப்படுகிறது.[1] அவினயனார் என்றும் இவர் குறிக்கப்படுகிறார்.[2] பல இடங்களில் **'அவிநயனார்'** என்றே குறிக்கப்படுவதாலும், நூற்பெயர் எங்கும் **'அவிநயம்'** என்றே சுட்டப்படுவதாலும் அவிநயனார் என்பதே இவர் பெயராதல் வேண்டும்

**நூலாசிரியர் பெயர்க்காரணம்:** அவிநயனார் என்று எதனால் பெயரிடப்பட்டார்? என்பது விளங்கவில்லை. 'ஆர்' என்ற மதிப்புப் பன்மை விகுதியை விலக்கி விட்டால் எஞ்சி நிற்கும் அவிநயன்

1. மயிலைநாதர் நன்னூல் உரை, 149 ஆம் நூற்பா.

2. யாப்பருங்கலக் காரிகை உரை, 4, ஆம் காரிகை.

என்பதே இவர் பெயராதல் வேண்டும். 'அவிநயன் நூல்' என்றே மயிலைநாதர் ஓரிடத்தில்[3] சுட்டுவதால் இது மேலும் உறுதியாகிறது. இப்பெயர் எதனுல் வந்தது?

**அவிநயம் என்பது சைன சமயக் குறியீடு :** சைன சமயத்தில் ஒன்பது பொருள்கள் கூறப்படுகின்றன. சீவனும், அசீவனும் ஏழு நிலைகளில் தொடர்பு கொள்ளுகின்றன. இந்த ஏழு நிலைகளுடன், சீவன், அசீவன் என்ற இரண்டையும் சேர்த்து ஒன்பது பொருள் கூறப்படும். இவை நவபதார்த்தங்கள் எனப்படும். அவை பின் வருமாறு:[4]

(1) சீவன்—உயிர் உள்ளது—(ஆன்மா) (2) அசீவன்—உயிர் இல்லாதது—(சடப்பொருள்) (3) புண்ணியம்—நல்வினை (4) பாவம்-தீவினை (5) ஆசிரவம்—ஊற்று (6) பந்தம்—காட்டு (7) சம்வரை—செறிப்பு (8) நிர்சரை—உதிர்ப்பு (9) மோட்சம்—வீடு.

மேற் கூறிய நவபதார்த்தங்களின் உண்மையைத் தெரிந்து கொள்வது **நல்லறிவு** எனப்பெறும். இவற்றின் தன்மையை ஐயமின்றி உணர்ந்து **நம்புதல் நற்காட்சி** எனப்பெறும். நல்லறிவு நற்காட்சி இரண்டையும் ஒருதன்மைத்தாக உள்ளத்தில் கொண்டு ஒழுகுவது **நல்லொழுக்கம்** எனப்பெறும். இம் மூன்றையும்[5] அருங் கலங்கள் மும்மை என்றும், **இரத்தினத் திரயம்** என்றும், **மும்மணி** என்றும் சைனர் குறிப்பர். சைனத்தில் இறுதி நிலை வீடுபேறே. இவ்வீடுபேற்றை அடைதற்கு மேற்கண்ட மும்மணிகளும் மிக முதன் மையானவை.

**நற்காட்சி :** மும்மணிகளுள் நற்காட்சி என்பது ஒன்று. இதுவே மற்றவற்றினும் முதன்மை வாய்ந்தது. 'சம்யக் தரிசனம்' எனப்பெறும் நற்காட்சிக்கு முதலிடம் தரப்பட்டுள்ளது. ஏனெனில், நல்லொழுக்கமாயினும், அது தவறுன நம்பிக்கைகளுடன் கூடிய தாயின் தன் மதிப்பைப் பெருமளவில் இழந்துவிடும். 'நற்கடைப்பிடி' (Right faith) எனப் பெறும் நற்காட்சி சைன சமய நூல்களிலும் அவற்றின் உரைகளிலும் கொண்டுள்ள அசைக்க முடியாத 'நம்பிக்கை' யாகும். இது குறிப்பாக, ஆன்மிய வளர்ச்சியைத் தடுக்கும் ஐயத்தைப் போக்கும் நோக்கம் உடையது.

3. மயிலைநாதர், நன்னூல் உரை, 359 ஆம் நூற்பா.

4. மேருமந்தர புராணம், செய்: 68.

5. 'அருங்கலங்கள் மும்மை அழிவகை யொன்று இன்றி' ஜீவ ஸம்போதனை-6

நற்காட்சியை எவ்வாறு பெறுவது? அதனுடைய பயன்கள் எவை? அதன் இன்றியமையாமை என்ன? என்பன போன்ற வினுக்களுக்குச் சைன அறத்தைப் பயிற்றும் அருங்கலச் செப்பு (கி.பி. எட்டாம் நூற்ருண்டு) விரிவாக விடையளிக்கிறது. அவிநயம் ஆறையும் விலக்குதலே நற்காட்சி எனக் குறிப்பிடுகிறது அந்நூல்.

### நற்காட்சி

அ(வ்)விநயம் ஆறும் அகன்றது நற்காட்சி
செவ்விதின் காப்பார் இடை

### அவிநயம்

நல்லறத்தின் தீர்ந்த வணக்கத்தை, நல்லோர்கள்
சொல்வர் அவிநயம் என்று.

### அவிநயத்தின் ஆறுவகை

மிச்சை இலக்கியர், நூல், தெய்வம், அவாவிஞேடு
அச்சம், உலோபிதத்தோடு ஆறு.

### அவிநயம் அகலாதார்

இவ்வாறும் நோக்கி வணங்கார் அவிநயம்
எவ்வாறும் நீங்கல் அரிது.[6]

அருங்கலச் செப்பின் குறிப்புகளால் நற்காட்சி வேண்டுமெனில் அவிநயம் என்ற தீக்குணங்கள் அகல வேண்டும் என்று விளக்கமாகிறது. சைன சமயத்தில் திரிரத்தினக் கொள்கை முதன்மையானது. அதனுள் நற்காட்சி முதன்மையானது. அந் நற்காட்சியைப் பெற **அவிநயம்** என்பதனை அகற்றல் முதன்மையானது. இவ்வாறு சைன சமயத்தில், பரவலாகக் குறிக்கப் பெறும் 'அவிநயம்' என்பதன் அடிப்படையிலேயே அவிநயன் என்ற நூலாசிரியர் பெயர் அமைந்திருத்தல் வேண்டும். அழித்தலைச் (சங்கரிப்பு) செய்பவன் என்ற பொருளிலேயே சங்கரன் என்று சிவபெருமான் பெயரும் அமைந்திருத்தல் காண்க. நற்குணம் அமையாதாரைச் சேகர் என்பர். (சூளாமணி, துறவு 133 நீலகேசி–83) 'சித்தம் தெளிவிலர் சீலம்

6. அருங்கலச் செப்பு 39 —42; மிச்சை இலக்கியர்—இலிங்கியர் என்பது பாடபேதம். அறியாமை வாய்ந்த முனிவர்கள் அல்லது இலிங்க வழிபாட்டினர், நூல், தெய்வம் இவற்றைப் போற்றல், ஆசை, அச்சம், கருமித்தனம் ஆகியவற்றைக் கொள்ளல் அவிநயம் எனப்படும் என்பது (41) கருத்து.

அமைவிலர் செத்த அறிவினர்' என்று சூளாமணியில் குறிக்கப்படும் 'சேகர்' என்ற பெயரைச் சைனர், இப்போதும் தம் குடும்பத் தினர்க்குப் பெயரிட்டுப் போற்றுவர்.

**அவிநயனூர் பெருமை :** அவிநயனார், பல நூல்களைக் கற்றுத் துறை போய பெருமைக்குரியவர் என்பது **'அளவறு புலமை அவிநயனார்'** என்று மயிலைநாதர் சுட்டுவதால் துலக்கமா கிறது.[7] அவரே, அவிநயம் என்ற நூலும், அவிநயன் என்ற நூலா சிரியரும், உலகச் சான்றோர்களால் புகழப்பட்ட புலமைக் குரியவர் என்பதைப் **'புவிபுகழ் புலமை அவிநய(ன்) நூல்'** என்று பிறிதோரிடத்தில் குறிப்பிடுகிறார்.[8] அன்றியும், அவிநயன் என்று வறிதே குறிக்காமல் **'அவிநயனார்'** என்று மதிப்புப்பன்மை இட்டுக் குறிப்பதும்,[9] **ஆசிரியர் அவிநயனார்** என்று குறிப்பதும்,[10] அவிநயனார் மீது மயிலைநாதர்க்கு இருந்த பெருமதிப்பையும், பெரு மதிப்புப் பெறத்தக்க அளவிற்கு அவிநயனார் பெற்றிருந்த மாட்சி மைகளையும் காட்டுகின்றன. மயிலைநாதரைப் போன்றே வீரசோழிய உரையாசிரியர், யாப்பருங்கலக் காரிகை உரையாசிரியர், யாப் பருங்கல உரையாசிரியர், நேமிநாத உரையாசிரியர், நவநீதப் பாட் டியல் உரையாசிரியர் ஆகியோரும் **'அவிநயனார்'** என்று மதிப் போடு குறிப்பிடுகின்றனர். இவரால் எழுதப்பட்ட பாட்டியல் நூலை **'அவிநயனார் கலாவியல்'** என்றே போற்றுகின்றனர். அவர் எழுதிய யாப்பை, **'அவிநயனார் யாப்பு'** என்றே குறிப்பிடு கின்றனர்.

யாப்பருங்கல விருத்தியுரை, இலக்கண உரைகளில் தனிப்பெரும் சிறப்பு உடையது. இவ்வுரையில், அவிநயனார் நூற்பாக்களே நிரம்பக் காட்டப்பட்டுள்ளன. இதனால் அவிநயனார், அக்காலத்திருந்த தமிழ்ப் பேரறிஞர்களால் ஒப்புக் கொள்ளப்பட்ட பேராசிரியராய் இருந்தார் என்று அறிய முடிகிறது. **இலக்கண உலகில் தனியதி காரம் (Authoritative) வாய்ந்த ஒருவராக,** அவிநயனார் காட்டப்படுவது, அவிநயனாரின் அறிவுலக ஆட்சியை நிறுவுவதாகும்.

7. மயிலைநாதர், நன்னூல் உரை, நூற்பா. 180.

8. மே. கா. நூ. நூற்பா, 359.

9. மே. கா. நூ, 180, 149, 263, 359, யா., விருத்தி, கழகப் பதிப்பு., 1973. 4, 21, 25, 27, 29, 30, 35, 45, 47, 47, 69 முதலாயின, யாப்பருங்கலக் காரிகை, 4.

10. மயிலை, நன். உரை, 149, 263.

**அவிநயனாரின் காலம் :** அவிநயனார் என்ற பெயரையும், அவர் எழுதிய நூலையும், நூற்பாக்களையும் எடுத்துக் காட்டுவதில் மிகப் பழமை வாய்ந்தது யாப்பருங்கல விருத்தியே. இவ்வுரையின் காலம், கி பி. 1015-1040 ஆகும். இவ்வுரையாசிரியர் காலத்தில் அவிநயம், செல்வாக்கு மிக்க நூல்களுள் ஒன்றாக இருந்திருத்தல் வேண்டும். அதனால்தான், மற்ற நூல்களை எடுத்துக் காட்டுவதை விட, அவிநய நூலை மிகுதியாக எடுத்துக் காட்டுகிறார். இந்தப் பெயரை, யாப்பருங்கல உரையாசிரியர்க்கு முன்பே, அவிநயனார் பெற்றிருத்தல் வேண்டும். அதாவது கி. பி. பத்தாம் நூற்றாண்டின் நடுப்பகுதியிலேயே அவிநயம் இப் பெருமையைப் பெற்றிருத்தல் வேண்டும். ஒரு நூல் பெரும் புகழ் பெற வேண்டுமானால் அக்காலச் சூழ்நிலையில் ஐம்பது ஆண்டுகளாவது ஆகும். அவ்வாறெனில் கி. பி. பத்தாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில், அவிநயம் சிறப்புப் பெறுகிறது என்றால், கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியாலாவது எழுதப்பட்டிருத்தல் வேண்டும்.

அருங்கலச் செப்பு என்ற சைனநூல் கி. பி. எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்தது. அந் நூலில் '**அவிநயம்**' என்ற சொல் மும்முறை எடுத்தாளப் பட்டிருக்கிறது.[11] இச் சொல் செல்வாக்குப்பெற்றிருந்த காலத்திலேயோ அதனை ஒட்டியோ இச் சொல்லையே பெயராக உடைய இந் நூலாசிரியரும் தோன்றி இருத்தல் வேண்டும்.

தொல்காப்பியர்க்குப் பின் சமசுக்கிருதத்தைச் சார்ந்தும், சாராமலும் இலக்கணப் பேரெழுச்சி ஒன்று, பிற்காலச் சோழர் காலத்திலேயே நிகழுகிறது. பிற்காலச் சோழர் காலத்தில் இருந்த அமைதியான சூழலும், அக்காலத்திலும், அக்காலத்திற்கு முன்பும் எழுந்த இலக்கியங்களுமே இதற்குக் காரணங்கள். அன்றியும், இவர் காலத்திலேயே, பாண்டியர், பல்லவர், காலத்தில் இருந்த சமயச் சண்டைகள் ஓய்ந்து, சமயப் பொதுமை நிலை உருவாகி இருந்தது. சோழ மன்னர்கள் பலரும், சைன, பௌத்தங்களை ஒடுக்க முனையவில்லை. இத்தகு சோழரின் ஆட்சி ஒன்பதாம் நூற்றாண்டில்தான் உருவாயிற்று, ஆகவே, சைன சமயத்தினரான, **அவிநயனாரும் இக்கால அளவிலேயே–கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டிலேயே. தம் இலக்கண நூலை எழுதி இருத்தல் வேண்டும்.**

**உலா இலக்கணம் :** அவிநயனாரால் எழுதப்பட்ட அவிநயனார் கலாவியலில் உலாவைப் பற்றிச் சில இலக்கணங்கள் கூறப்

11. அருங்கலச் செப்பு, 39, 40, 42.

பட்டிருக்கின்றன. பெண்களுக்கு ஏழு பருவம் கூறப்படுதல் போல, ஆணுக்கும், ஏழு பருவங்கள் கூறப் பெற்றுள்ளன. (அவிநயனுர் கலாவியல் 121. அடிக்குறிப்பைப் பார்க்க). இது பெண்களுக்கு ஏழு பருவம் கூறுதலை ஒட்டி எழுந்த கூற்ருகும். உலா அமைப்பும், ஏழுபருவப் பாகுபாடும் இடம் பெற்ற முதல் உலா நூல் சேரமான் பெருமாள் நாயனுரால் எழுதப்பட்ட ஞான உலாவே ஆகும். இதுவே தமிழில் எழுந்த முதல் உலா நூல். ஆதலால் அந்நூல் ஆதியுலா என்றே அழைக்கப் பெறுகிறது. இந்நூலை இயற்றிய சேரமானின் காலம் கி.பி. 825—850 ஆகும். இலக்கியம் கண்டதற்கு இலக்கணம் எழுதுதல் என்ற மரபிற்குத் தக, ஞானவுலா அமைப்பும், அவ் வுலாவில் இடம் பெற்ற ஏழுபருவப் பகுப்புமே, பிற்கால இலக்கண ஆசிரியருக்கு இலக்கியங்கள் ஆகும். அங்ஙனமெனில், இவ்விரண் டையும் பற்றிப் பேசும் அவிநயனுரும், மேற்கண்ட ஞானவுலா ஆசிரியரை அடுத்தே வாழ்ந்தவராதல் வேண்டும். இதனுலும், அவிநயனுர், கி.பி. ஒன்பதாம் நூற்ருண்டினர் என்பது தெரிய வருகிறது.

**புறப்பொருள் வெண்பாமாலையும் அவிநயமும் :** புறப் பொருள் வெண்பாமாலை, அவிநயனுர் உள்ளிட்ட அகத்தியரின் பன்னிரு மாணுக்கர்கள் எழுதிய பன்னிருபடலத்தைத் தழுவி எழுதப் பட்டது. இதனைப் புறப்பொருள் வெண்பாமாலைப் பாயிரம் குறிப்பிடு கிறது. இதனுல், புறப்பொருள் வெண்பாமாலை இயற்றப்பட்ட காலத் திலேயே அவிநயம் செல்வாக்குப் பெற்றிருந்தது எனத் தெரிகிறது. புறப்பொருள் வெண்பாமாலையின் காலம் கி.பி. ஒன்பதாம் நூற் ருண்டு. எனவே, அவிநயனுரின் காலம் அதே காலமாதல் தெளிவு. கி.பி. ஒன்பதாம் நூற்ருண்டின் முற்பகுதியில், அவிநயனுர் தம் நூலை எழுதி இருத்தல் வேண்டும் என்று கொள்ளலாம்.

**அவிநயனுரின் சமயம் :** இவர் பெயராலும், இவர் எழுதிய நூலாலும், இவர் சைனரே என்பது தெரிகிறது. இவர் சைனர் என்பதற்கு முதன்மைக் காரணங்கள் வருமாறு :

1. **அவிநயம்** என்ற பெயர் சைனசமயத்து முதன்மைக் கோட்பாடான '**நற்காட்சி**' என்பதனேடு மிகத் தொடர்புடையது. இத்தொடர்பைச் சைனநூலாகிய அருங்கலச் செப்பு, தெளிவாகக் குறிப்பிடுகிறது. சைனசமய நூலில் பரவலாகக் குறிப்பிடப்படும் 'அவிநயம்' என்பதையே தன் பெயராக இவர் வைத்திருப்பதால், இவரது சமயம் சைனம் என்ருகிறது.

2. **அணுக் கொள்கை :** அணுவே அனைத்திற்கும் தோற் றிடம்; அணுவை அழிக்க முடியாது; என்றும் நிலைபெற்றது.

ஆகையால், அணு என்பது படைக்கப்பட்ட பொருள் அன்று. இப் பரமாணுக்கள்தாம் அசீவ உலகின் ஒடுக்கம். இப்பரமாணுக்களி லிருந்து (அவை பற்பல வகைகளில் ஒன்றுடன் ஒன்று சேர்வதனுல்) உலகம் யாவும் தோன்றுகின்றன. நமது மனம், பேச்சு, மூச்சு யாவுமே இவ்வணுக்களால் ஆனவை. இவ்வடிப்படையை வைத்துப் பார்த்தால், மொழிக்கு மூல காரணம் அணுவே என்பது வெளிப்படை. சைன நூலாசிரியராகிய பவணந்தி,

**'மொழிமுதல் காரணமாம் அணுத்திரள் ஒலி எழுத்து'**
என்று குறிப்பிட்டார்.[12]

'அணு என்னும் சொல் சமசுகிருத உபநிடதத்தில் காணப்படு கிறது. ஆயினும், அணுக் கொள்கை வேதாந்தத்திற்குப் புறம்பான தாகவே உளது. சைனக் கருத்து மிகப் பழமையானதாகவும் கூடும்'[13]

என்று குறிப்பிடுகிருர் தத்துவப் பேராசிரியர் கிரியண்ணு. இதனுல், அணுக் கொள்கை, சைன சமயத்தார்க்கு உரிய தனிக் கொள்கை என்பது புலப்படும்.

**சைவரின் கொள்கை :** மொழிக்கு மூலகாரணம் அணு அன்று, **நாதமே** என்பர் சைவர். சைவ ஆதீனப் புலவராகிய வைத்தியநாத தேசிகர், தம் 'இலக்கண விளக்கம்' (கி.பி. 17. நூற்) என்ற நூலில்,

> மொழிக்காரணமாம் நாத காரிய ஒலி
> எழுத்து; அது முதல்சார்பு என இருவகைத்தே [இ.வி. 3.]

என்று எழுதுவர். தாமே எழுதிய உரையில், பவணந்தியின் அணுக் கொள்கையை மறுத்தும் எழுதுவர்.

அன்றியும், அணுவே மொழிக்கு அடிப்படை, என்ற சைன மதக் கொள்கை, வைதிக சமயத்தார்க்கு உடன்பாடு இல்லை என்பது சைவசமயத்தைச் சார்ந்த சங்கர நமச்சிவாயர் உரையாலும் தெரிய வருகிறது. அவ்வுரையாவது:

> அனுதி காரணமாகிய மாயையினை (நாதம்) ஈண்டுக் கூருது ஆதி காரணமாகிய செவிப் புலனும் அணுத்திரளை முதற்காரணம்

12. நன்னூல், எழுத்தியல், 3.

13. Hiriyanna, H., Outlines of Indian Philosophy, 1966, Translation. P. 178.

என்றூர். இவ்வாசிரியர்க்கு (பவணந்திக்கு) மாயை உடன்பாடு அன்று. அணுத்திரள் ஒன்றுமே துணிவு. எனின், **பிறிதொடு படான் தன் மதம் கொளல்** என்னும் மதம்படப் (பவணந்தி) கூறினூர் என்றுணர்க.[14]

வைதிக சமயத்தார்க்கு மொழி அடிப்படை அணு அன்று. மாயையே என்பது'திருவிளையாடல் புராணம்' என்ற சைவ நூலாலும் தெளிவாகிறது.

> ''பதினெண் தேய மாந்தரும் கிளந்த சொல்திரட்சிதான்
> தூய, மாய காரிய ஒலி'' (திருவிளையாடற் புராணம். நகர. 67)

என்பது காண்க.[15] இவற்றூல் இரு செய்திகள் தெளிவாகின்றன.

1. மொழிக்கு அடிப்படை அணு என்பது சைனக் கொள்கை.
2. மொழிக்கு அடிப்படை மாயை (நாதம்) என்பது சைவர் கொள்கை. இவற்றுள் முதலாவதாகிய சைனக் கொள்கையைப் பின்பற்றி, அவிநயனூர், மொழிக்கு முதற்காரணம் அணு என்கிறூர்.[16]

> ஆற்றல் உடை உயிர் முயற்சியின் அணு இயைந்து
> ஏற்றன ஒலியாய்த் தோன்றுதல் பிறப்பே

இந்நூற்பாவை சைன, உரையாசிரியராகிய மயிலைநாதர், சைன நூலாகிய நன்னூல் உரையில் எடுத்துக் காட்டுகிறூர்.[17]

இதனை நோக்க சைனக் கொள்கையாகிய அணுக் கொள்கையை அவிநயனூர் பின்பற்றுவது தெளிவாகிறது. அதனூல் இவர் சமயம் சைனமே என்பது உறுதியாகிறது.

3. **கர்மாக் கொள்கை :** கர்மம் சீவனுட் சென்று ஓயாது செறிந்து கொண்டிருக்கிறது. தொடர்ந்து வந்துகொண்டே இருக்கும் புதுவினைகளைத் தடுத்தல் வேண்டும் (சமுவரம்). முன்பே சேர்ந்த பழ வினைகளை அழித்துக் கொண்டே இருத்தல் வேண்டும் (நிர்ச்சரம்). வாழ்க்கையின் குறிக்கோள் இக் கர்மாவினின்று விடுதலை பெறுவதே ஆகும்.

14. நன்னூல், எழுத்தியல். 3.

15. ''அணுத்திரள் என்றது நாதம்; ஒலி என்றது அதன் காரிய ஒலி, அணு என்றது ஒலி நுட்பத்தை'' என்பர் இராமாநுச கவிராயர்—நன்னூல், விருத்தியுரை சூத். 56.

16,17. மயிலைநாதர்., நன். 73. என்னை? ஆற்றல் உடை......பிறப்பே என்றூர் ஆசிரியர் அவிநயனூரும் எனக் கொள்க.

எல்லை இல் இன்பம், உணர்வு, வலி, காட்சி
புல்லும்—வினை வென்றவர்க்கு.

என்று கூறும் அருங்கலச் செப்பு.[18]

கர்மாவைப் பற்றிய சைனக் கருத்து, பிறவற்றினின்றும் வேறு பட்டுள்ளது. ஈண்டு கர்மா, சடத்தன்மை உடையதாகவும், சீவர்களுக்குள் முற்றிலும் ஊடுருவிச் சென்று அவற்றை உலகியல் நிலைக்குத் தாழ்த்தி விடுவதாகவும் கருதப்படுகிறது. சூடு, இரும்போடும், நீர் பாலோடும் ஒன்றுபடுவது போலக் கர்மாவும் ஆன்மாவுடன் ஒன்றுபடுகிறது. அவ்வாறு கர்மாவுடன் ஒன்றுபட்ட ஆன்மா, கட்டுண்ட ஆன்மா (Soul in bondage) அல்லது சம்சார ஜீவன் [மே. புராணம் 69] என்று வழங்கப்படுகிறது.[19]

கர்மாவின் பந்தத்தால் தொடரும் பிறப்பினைத், துன்பங்களைச் சைன அறநூல்கள் விரிவாக எடுத்துரைக்கின்றன.[20] அவற்றுள் ஒன்றாகிய அறநெறிச்சாரம் (60) பிறப்பின் தொடர்ச்சியைப் பின் வருமாறு கூறுகிறது.

இறந்த பிறப்பில்தாம் செய்த வினையைப்
பிறந்த பிறப்பால் அறிக! பிறந்திருந்து
செய்யும் வினையால் அறிக! இனிப்பிறந்து
எய்தும் வினையின் பயன்.

ஆக மேற்காட்டிய சான்றுகள், கர்மா என்ற வினைக் கொள்கை, சைன சமயத்தில் எத்துணை அளவு ஊடுருவி இருக்கிறது என்பதையும், ஆதியில் சைன சமயத்திற்கே அது உரித்தான கொள்கை என்பதையும் எடுத்துக் காட்டுகின்றன. இத்தகு சைனக் கொள்கையை அப்படியே அவிநயனார் ஒரு நூற்பாவில் எடுத்துக் கூறுகிறார். அறிமுகம் இல்லாத ஆண், பெண் இருவர் இடையே காதல் முகிழ்க்கிறது. முன்னுறவு, ஒட்டு, பழக்கம், பந்தம் எதுவும் இல்லாமல், 'யாயும் ஞாயும் யாராகியரோ? எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்'? என்று எவ்வாறு இக்காதல் திடுமெனத் தொடங்குகிறது. அவிநயனார், தன் அகப்பொருள் இலக்கணத்தில் இதற்கு விடையளிக்கிறார். முற்பிறப்புத் தொடர்ச்சியே இப்பிறப்புக் காதலாகத் தொடருகிறது என்கிறார்.

18. அருங்கலச் செப்பு. 158.
19. Hiriyanna., Outlines of Indian Phliosophy, P. 187.
20. மேருமந்திர புராணம், செய். 71., நீலகேசி 74.

முன்செய் வினையது முறையா உண்மையின்
ஒத்த இருவரும் உள்ளகம் நெகிழ்ந்து[21]

என்பது அவிநயனார் காட்டும் அகப்பொருள் நூற்பா.

சைனசமயக் கொள்கைகளின் தாக்கம் (Influence) பெற்ற தொல்காப்பியமும்

ஒன்றி உயர்ந்த பாலது ஆணையின்
ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப[22]

என்று களவுறவைக் காட்டுதல் காண்க.

இதனால், சைன சமயக் கொள்கையை ஒட்டிக் காதலை, அவிநயனார் விளக்குதல் வெளிப்படை. ஆக,

(1) அவிநயம் என்ற சைனக் குறியீட்டைப் பெயராக வைத்திருத்தல்.

(2) அணுவே அனைத்திற்கும் அடிப்படை என்ற சைனக் கோட்பாட்டை உட்கொண்டு, மொழிக்கு அடிப்படை அணுவே என்று குறிப்பிடுதல்.

(3) சைன சமயத்தின் முதன்மைக் கொள்கைகளுள் ஒன்றான கர்மக் கொள்கையை, களவுக் காதலுக்கு அடிப்படையாக எடுத்துரைத்தல்.

இம் மூன்று காரணங்களாலும் அவிநயனாரின் சமயம் சைனமே என்பது உறுதியாகிறது.

**அவிநயம் என்ற நூற்பெயர் :** அவிநயன் என்ற நூலாசிரியர் பெயரே ஆகுபெயராய் ஈறு திரிந்து அவிநயம் என்று குறிக்கப்பட்டது. தொல்காப்பியன் என்ற ஆசிரியன் பெயரே, திரிந்து தொல்காப்பியம் என்று வழங்குதல் போல, அவிநயம் > அவிநயன் என்று வழங்குகிறது. நேமிநாத உரையாசிரியரும் இக்கருத்தினரே. நேமி. எழுத்ததிகாரம் 24ஆம் நூற்பாவுரையில் இதனைக் குறிப்பிடுகிறார். அது பின்வருமாறு :

வந்து உறழும் அன்ன வ ய ந ல க் க ள் என்பதனால் தொல்காப்பியன் என நிறுத்தி, இவனால் செய்யப்பட்டது யாது எனக் கருதின பொழுது தொல்காப்பியம் எனக் குறிக்க அவிநயம் என்பதும் அது.

நேமி. சொல்லதிகாரம் 23ஆம் நூற்பா ஆகுபெயரைப் பற்றிப் பேசுகிறது.

21 யாப்பருங்கல விருத்தி, ஒழிபியல் 95 மேற்கோள். II. 576.

22. தொல்காப்பியம். களவியல், 2.

ஒன்றன்பேர் ஒன்றற் குரைப்பதாம் ஆகுபெயர்;
சென்றவைதாம் தம்முதலிற் சேர்தலோ—டொன்ருத
வேறென்றிற் சேர்தல் எனஇரண்டாம்; வேற்கண்ணுய் !
ஈறு திரிதலுமுண் டிண்டு.

இவ் வெண்பாவின் இறுதியில் உள்ள 'ஈறு திரிதலும் உண்டு ஈண்டு' என்பதை விளக்கும் போது நேமிநாத உரையாசிரியர், அவிநயம் என்ற பெயர், அவிநயன் என்பதன் ஈற்றுத்திரிபு என்கிருர். அவர் விளக்கமாவது :

தொல்காப்பியம் **அவிநயம்** வில்லி வாளி என்பன ஈறு திரிந்து வந்தன [28]

இவற்றை நோக்க, அவிநயன் என்ற ஆசிரியன் பெயரே அவி நயம் என்று வழங்கி இருக்கிறது என்பது தெளிவாகிறது.

**அவிநயத்தை எடுத்துக்காட்டும் நூல்களும் உரைகளும்:** அவிநயத்தைப் பதினெரு நூல்கள் மேற்கோளாக எடுத்துக் காட்டுகின்றன. நூற் பெயரை மட்டும் எடுத்துக்காட்டுவன; நூலாசிரியர் பெயரை மட்டும் எடுத்துக்காட்டுவன; பெயரோடு அவிநய நூற்பாக்களை எடுத்துக்காட்டுவன; பெயரின்றி நூற்பாக்களை மட்டும் எடுத்துக் காட்டுவன; நூற்பாவின் உரையை மட்டும் எடுத்துக் காட்டுவன என்று அவை அமையும். அந் நூல்களைப் பின் வருமாறு வரிசைப்படுத்தலாம்.

| எண் | நூற்பெயர் | நூலாசிரியர்/ உரை யாசிரியர் பெயர் | எடுத்துக்காட்டப் பெறும் இடங்கள் |
|---|---|---|---|
| 1. | யாப்பருங் கல விருத்தி | குண சாகரர் | மொத்தம் : 67 இடங்கள்<br>கழகப்பதிப்பு பக்க எண் : 21, 25, 27, 29, 30, 35, 45, 47, 55, 63, 67, 68, 69, 70, 84, 95, 117, 119, 132, 158, 166, 169, 175, 188, 190, 197, 221, 225, 228, 238, 243, 246, 250, 253, 258, 261, 263, 267, 270, 272, 274, 276, 283, 288, 291, 293, 300, 306, 324, 325, 341, 349, 350, 351, 357, 360, 363, 368, 374, 411, 434, 438, 439, 441, 573, 576, 579. (67) |

28. வச்சணந்திமாலை உரையாசிரியரும் இக்கருத்தினரே.

| எண் | நூற்பெயர் | நூலாசிரியர் உரை யாசிரியர் பெயர் | எடுத்துக்காட்டப்பெறும் இடங்கள் |
|---|---|---|---|
| 2. | யாப்பருங் கலக் காரிகை உரை | குண சாகரர் (?) | பாயிர உரை, காரிகை எண் 4, 19, 23, 40, 43, 43, (7) |
| 3. | நேமிநாத உரை | உரையா சிரியர் பெயர் (?) | கழகப் பதிப்பு (1945) வெண்பா எண்: 1, 3, 5, 5, 5, 9, 22, 23, 23, 24 சொ. 2, 2, 4, 6, 10, 11, 15, 19, 23, 37, 37, 40, 46, 49, 49. பாயிரம். ப. 3, 3, 3 (28). |
| 4. | வச்சணந்தி மாலை உரை | ,, | இந்நூல் பார்க்க : வச்சணந்தி மாலை உரை—பா. 45. |
| 5. | வீர சோழிய உரை | பெருந் தேவனார் | சொல். கிரியா பதப்படலம், வேற்று மைப்படலம், 6. யாப்பதிகாரம், 19 (3). |
| 6. | நன்னூல் உரை | மயிலைநாதர் | நூற்பா. 59, 59, 59, 73, 101, 124, 127, 130, 149, 263, 319, 359, 369, (13) |
| 7. | நன்னூல் உரை | சங்கர நமச் சிவாயர் | நூற்பா. 95, 320 (2) உ. வே. சா. பதிப்பு. V. XIV. |
| 8. | பன்னிரு பாட்டியல் | தொகுப் பாசிரியர் (?) | கழகப்பதிப்பு. 19-14, 98-74, 135-94, 135-95, 135-96, 97, 98, 99, 100 (9). |
| 9. | நவநீதப் பாட்டியல் | பழைய உரை | உ. வே. சா. நூலகப் பதிப்பு. 96, 96. (2) |
| 10. | தக்க யாகப் பரணி உரை | ,, | 153 தாழிசை. (1) |
| 11. | நுண் பொருள் மாலை | ,, | 571 (1) |

## அவிநயனரின் நூல்கள்

அவிநயனரின் நூல் 'அவிநயம்' என்ற நூல் ஒன்றே என்று கருதப்படுகிறது. இக் கருத்து முற்றும் சரியன்று. அவரெழுதிய நூல்கள் பின்வரும் ஐந்து ஆகும்.

| | | |
|---|---|---|
| 1 | அவிநயம் | —எழுத்து, சொல், பொருள் அடங்கியது. |
| 2 | அவிநயனர் யாப்பு | —யாப்பதிகாரத்தை மட்டும் உள்ளடக்கியது. |
| 3 | அவிநயப் புறனடை அல்லது நாலடி நாற்பது | —அவிநயனர் யாப்பிற்குப் புறனடை நூலாக, நாற்பது வெண்பாக்களில் எழுதப்பட்ட நூல் |
| 4 | அவிநயனர் கலாவியல் | —பாட்டியல் நூல். |
| 5 | பன்னிருபடலம் | —புறப்பொருள் பற்றியது. பன்னிரு படலங்களால் ஆனது. ஒரு படலத்தை அவிநயனர் எழுதியுள்ளார். |

**அவிநயமும் அகத்தியரும்:** அகத்தியரின் பன்னிரு மாணாக்கர்களுள் ஒருவராக அவிநயனர் குறிக்கப்படுகிறார். அகத்தியரால் எழுதப்பட்ட நூல் அகத்தியம் எனவும், அவிநயனரால் எழுதப்பட்ட நூல் அவிநயம் எனவும் அழைக்கப்பட்டன. இவ்விரு நூல்களும் நன்னூலிற்கு முன்னோர் நூல்களாக இருந்தன. இச்செய்தி நுண்பொருள் மாலை உடையாரின் 571ஆம் திருக்குறட் குறிப்பால் தெரிய வருகிறது.

> பரிபாட்டினுள் நிவந்தோங்கு உயர் கொடிக்கும் இவ்வாறு உரைத்தார் ஆதலால் 'ஒரு பொருட் பன்மொழி சிறப்பினின் வழாஅ' என்னும் சூத்திரம் நன்னூலில் வருதலால் அகத்தியமாதல் **அவிநயமாதலாக** வேண்டுமென்க.

இக்குறிப்பால், அகத்தியமும், அவிநயமும் நன்னூலுக்கு முன்னூற்களாக இலங்கின என்பது தெரியவருகிறது.

பவணந்தி மூன்றும் வேற்றுமை உருபுகளாக ஆல், ஆன், ஓடு, ஒடு என்பவற்றையும் குறித்தார். ஆல், ஆன், ஒடு என்பன பிற்கால வரவுகள். இவற்றை அகத்தியனரும் குறித்துள்ளார்.

> ஆலும் ஆனும் ஓடும் ஒடுவும்
> சாலும் மூன்றும் வேற்றுமைத் தனுவே

என்பது அகத்தியம்.[24]

24. மயிலைநாதர், நன்னூல் உரை, மேற், 296.

2799



அவிநயனரும் **'ஆலும் ஆனும் மூன்றன் உருபே'** என்றனர்.[25] இவற்றை நோக்கும் போது, அவிநயம், அகத்தியம் என்ற இரண்டன் கருத்தொற்றுமை புலனாகிறது. இவ்விரண்டும், நன்னூல் இலக்கணம் உருவாவதற்கு உதவின என்பதும் தெரிய வருகிறது.

**பெயர் வினை என்ற இரண்டு பாகுபாடு :** சொல், அடிப் படையில் இரண்டே. தொல்காப்பியக் கருத்தும் இதுவே. (தொல் பெயரியல். 4). அவிநயனரும் இக்கருத்தினரே.

அவைதாம்
பெயர்ச்சொல் என்று தொழிற்சொல் என்று
இரண்டன் பாலாய் அடங்கும் பயின்றே

(அவிநயம், 21)

இந்நூற்பாவினை எடுத்துக்காட்டும் மயிலைநாதர் (நன். 130), இதற்கு இணையான அகத்தியச் சூத்திரத்தையும் தொல்காப்பியச் சூத்திரத் தையும் எடுத்துக் காட்டுகிறார். அவர் எடுத்துக் காட்டும் அகத்திய நூற்பா பின்வருமாறு :

பெயரினும் வினையினும் மொழிமுதல் அடங்கும்

இவ்வகத்திய நூற்பாவின் எதிரொலியை, அவிநய நூற்பாவில் காணமுடிகிறது.

**அவிநயமும் தொல்காப்பியமும்:** தொல்காப்பியரும் அவிநயனரும், அகத்தியரின் மாணாக்கர் என்று குறிக்கப்படுகின் றனர். தொல்காப்பியன், அதங்கோட்டாசான், துராலிங்கன், செம்பூட்சேய், வையாழிகன், வாய்ப்பியன், பனம்பாரன், கழா ரம்பன், அவிநயன், காக்கைபாடினி, நற்றத்தன், வாமனன் என்ற பன்னிருவரும் அகத்தியரின் மாணாக்கர்கள் ஆவர். நேமிநாத உரை யாசிரியர், தொல்காப்பியரையும், அவிநயனரையும் அடுத்தடுத்து வைத்து இரண்டிடங்களில் பேசுகிறார்.[26] இலக்கியப் புலவர்களில் கபிலபரணர், கல்லாட மாமூலனர் போன்று இலக்கண இரட்டையர் களாக, தொல்காப்பியரும், அவிநயனரும் நேமிநாத உரையால் கருதவைக்கப்படுகின்றனர். அன்றியும் நேமிநாத உரையாசிரியர் மேற் கோளாக எடுத்துக்காட்டும் 'இரட்டையர்' நூற்பாக்கள், தொல்காப் பியர் செய்தனவும், அவிநயனர் செய்தனவுமே. இதனால், தொல்காப் பியத்திற்கு இணையான நூலாக அவிநயம் கருதப்பட்டது என்று தெரி கிறது. வாய்ப்பியனால் வாய்ப்பியம், பனம்பாரனால் பனம்பாரம்,

25. அவிநயம். 29, வீரசோழியம் வேற்றுமைப்படலம், காரிகை, 6.

26. எழுத்து, 23, சொல், 24.

காக்கைபாடினியால், காக்கைபாடினியம், நற்றத்தனால் நற்றத்தம் என்ற நூல்கள் செய்யப் பெற்றிருக்கின்றன. இந்நூற்களை எடுத்துக் காட்டுவதை விட, அவிநயனால் இயற்றப்பட்ட அவிநயத்தை, நேமி நாத உரையாசிரியன் விரும்பி எடுத்துக்காட்டுவதும், தொல்காப்பிய நூற்பாக்களோடு ஒன்ற வைத்து உரைப்பதும், யாப்பருங்கல விருத்தி யுரைகாரர், மற்றவரினும் அவிநயம் நூற்பாக்களை மிகுதியாக எடுத்தாளுவதும் அவிநயரின் தனிச்சிறப்பை எடுத்துரைக்கின்றன. ஒரு சால நண்பர்களில், அவிநயனே, தொல்காப்பியர்க்குப் பெரிதும் இணையானவன் என்றும் நினைக்க வைக்கின்றன. தொல்காப்பியன், தொல்காப்பியர் என்றே பலராலும் குறிக்கப்பட, அவிநயன் அவிநயன் என்று பிரித்துத் தனியே குறிக்கப்படாமல், யாண்டும் எல்லா உரைகாரரும் **'அவிநயனார்'** என்று குறிப்பதும் தனிக் கவனத்திற்குரியது. தொல்காப்பியர் என்று குறிக்கப்பட்டது போல, அவிநயர் என்றே குறிக்கப்பட்டிருக்கலாம். அவ்வாறு குறிக்கப் படாமல், 'ஆர்' என்ற மதிப்புப்பன்மை சேர்த்துப் பலராலும் சுட்டப் படுதல் காண்க. தொல்காப்பியரை, ஆசிரியர் தொல்காப்பியனார் என்று குறிப்பவர், இவரையும் **ஆசிரியர் அவிநயனார்** என்று குறிப்பிடுகின்றனர்.[27]

வாய்ப்பியன், காக்கைபாடினி, நற்றத்தன் ஆகியோர் யாப்பிலக் கணம் மட்டுமே செய்தவராக, யாப்பருங்கல விருத்தியால் அறியப் படுகின்றனர்.[28] பனம்பாரன், சில பாயிர நூற்பாக்களைச் செய்ததாக நன்னூல் மயிலைநாதர் உரையால் தெரிய வருகிறது.[29] ஆனால், அவிநயனார் தொல்காப்பியரைப் போலவே, எழுத்து, சொல், பொருள் என்ற மூன்றும் எழுதி இருப்பதாகத் தோன்றுகிறது. அன்றியும், தொல்காப்பியனும் விரிவாக, யாப்பு நூலைத் தனியே **'அவிநயனார் யாப்பு'** என்ற பெயரில் அவிநயனார் செய்தாரோ என்று கருதத் தோன்றுகிறது. ஈதன்றி, அவிநயனார் புறனடை, அவிநயனார் பாட்டியல் என்ற இரண்டும் அவிநயனாரின் கூடுதல் படைப்புகளாகக் கருதத் தக்கன.

**அவிநயம்—தொல்காப்பிய எதிர் நூல்:** அவிநயத்தைத் தொல்காப்பிய எதிர்நூல் என்று கருத இடமுண்டு.

தன்கோள் நிறீஇப் பிறன் கோள் மறுப்பது
எதிர்நூல் என்ப ஒருசா ரோரே

27. மயிலைநாதர், நன்னூல், எழுத்தியல்-19.

28. யாப்பருங்கல விருத்தி.

29. மயிலைநாதர், நன்னூல், உ. வே. சாமிநாதையர் பதிப்பு., ப. 15.

என்பது எதிர் நூலின் இலக்கணம்.[30] இவ்விலக்கணத்தின்படி, தொல்காப்பியர்க்கு எதிரான செய்திகள் அவிநயத்துள் இடம் பெற்றுள்ளன. கிடைத்திருக்கும் சில நூற்பாக்களில் இருந்தே இச்செய்தி தெளிவாகிறது.

| | தொல்காப்பியர் | | அவிநயனர் |
|---|---|---|---|
| 1 | எழுத்து வகை கூறவில்லை. (உரைகாரர்களே கூறினர்) | 1 | எழுத்து ஏழு வகை என்பர். (அவிநயம், 1) |
| 2 | எழுத்து முப்பது | 2 | எழுத்து 228. (2) |
| 3 | ஆய்தம், யகரத்தின் மாற்றொலியாகக் காட்டப்படவில்லை. | 3 | ஆய்தம், யகரத்தின் மாற்றொலி. (6) |
| 4 | அணுவே மொழி அடிப்படை எனக் கூறவில்லை | 4 | அணுவே மொழிக்கு அடிப்படை. (8) |
| 5 | குற்றியலுகரம் ஆறிடத்து வரும் | 5 | குற்றியலுகரம் ஏழிடத்து வரும். (10) |
| 6 | ஐகாரம் இரண்டு மாத்திரை | 6 | ஐகாரம் ஒன்றரை அல்லது ஒரு மாத்திரை. (11) |
| 7 | சகரம் மூன்று உயிர் மேல் மொழி முதலாகும். | 7 | சகரம், பன்னிரண்டு உயிர் மேலும் மொழி முதலாகும் (11) |
| 8 | ங மொழி முதலாகாது. | 8 | ங மொழி முதலாகும் (12) |
| 9 | ஆய்தக் குறுக்கத்திற்கு மாத்திரை கூறப்படவில்லை. | 9 | ஆய்தக் குறுக்கம், அரைக்கும் குறைந்த மாத்திரை பெறும். (14) |
| 10 | ஒற்றளபெடுக்கும் மெய் விபரம் இல்லை. ஆய்தம், மெய்யோடு சார்த்தி அளபெடுக்காது | 10 | ஒற்றளபு மெய் விபரம் உளது. (16) ஆய்தம் மெய்யொடு சார்த்தி அளபெடுக்கும். 16. |
| 11 | அல், அன்னும் என்ற குறிப்பில்லை. | 11 | அல், அன் ஆக மாறும். (18) |
| 12 | வினைச்சொல் என்பர். | 12 | தொழிற் சொல் என்பர். |
| 13 | கள் என்ற பன்மை ஈறு சில இடங்களில் அஃறிணையில் மட்டுமே வரும். | 13 | கள்-அஃறிணை, உயர்திணை என்ற இரண்டிலுமே வரும். (27) |

30. இறையனார் களவியல், முதற் சூத்திர உரை.

| தொல்காப்பியர் | | அவிநயனர் | |
|---|---|---|---|
| 14 | ஒடு என்பது மூன்றன் உருபு. | 14 | ஆல், ஆன் என்பன மூன்றன் உருபுகள் (சொ. 9) |
| 15 | ஐந்தன் பொருள்கள் கூறப் படவில்லை. | 15 | ஐந்தன் பொருள்களாக உவமம், நீக்கம், எல்லை, ஏது என்ற நான்கு. (சொ. 10) |
| 16 | வினு வகைகள் கூறப்பெற வில்லை. | 16 | ஐவகை வினுக்கள் கூறப் பட்டுள்ளன. |
| 17 | அகப்புறத்திணை என்று ஒன்று கூறப்படவில்லை. | 17 | அகப்புறத்திணை என்ற ஒன்றுண்டு. (பொ. 1) |
| 18 | வண்ணங்கள் இருபதே என்றனர். | 18 | வண்ணங்கள் நூறு என்பர். |

## அவிநயமும் நேமிநாதமும்

இரண்டு நூலின் ஆசிரியர்களும் சைனர்களே. இரண்டு நூலாசிரியர்களும் வெண்பாவில் இலக்கணம் எழுதுவதில் வல்லவர்கள். நேமிநாதம் இயற்றிய குணவீர பண்டிதருக்கு, வெண்பா யாப்பில் இலக்கணம் வகுக்கும் முறையை முன்னேடியாக நிறுவிக் காட்டியவர் அவிநயனுரே. நூல் யாப்பில் மட்டுமன்றி, நூல் பொதி பொருள் அமைப்பிலும், நேமிநாதம் அவிநயத்தின் செல்வாக்கிற்கு உள்ளாகி இருக்கிறது. இச் செல்வாக்கிற்கு இரண்டு நூல்களும் ஒரு சமயத்தாரால் இயற்றப்பட்டமை காரணமாகலாம். இதனினும் அவிநயத்தின் பெரும் புகழே தலைமையான காரணமாதல் கூடும். 'புவிபுகழ் புலமை அவிநயனுர்.' 'அளவறு புலமை அவிநயனுர்' என்ற மயிலைநாதரின் புகழ்ச்சி மொழிகள்[31] வெறும் பொய் மொழிகள் அல்ல. மெய் மொழியே. கி. பி. 10-14ஆம் நூற்றுண்டு வரை எழுதப்பட்ட இலக்கண உரைகளில் அவிநயம் அடிக்கடி எடுத்தாளப் பெறுவது அதன் பெருமையைக் காட்டுகிறது. நன்னூல் தோன்றுகின்றவரை (கி. பி. 13), எழுத்து, சொல் இலக்கண உலகிலும், புறப்பொருள் வெண்பாமாலை தோன்றுகிறவரை (கி. பி. 8) புறப்பொருள் இலக்கண உலகிலும், நாற்கவிராச நம்பியின் அகப்பொருள் தோன்றுகிறவரை (கி. பி. 14) அகப் பொருள் இலக்கண உலகிலும், யாப்பருங்கலமும், யாப்பருங்கலக் காரிகையும் தோன்றுகிறவரை (கி. பி. 10) யாப்பதிகார உலகிலும், வச்சணந்த மாலை தோன்றுகிறவரை (கி. பி. 10)

31. நன்னூல் 359, 130-மயிலைநாதர் உரை, உ. வே. சாமிநாதையர் பதிப்பு.

பாட்டியல் உலகிலும் அவிநயனாரின் இலக்கண நூல்களே தனிச் செங்கோலோச்சி இருத்தல் வேண்டும். அதற்குப் பின்பும் கூட அவிநயனாரின் செல்வாக்குச் சுவடுகள், கி. பி. பதினேழாம் நூற்றாண்டுவரை நீடித்திருந்தன என்பதைச் சங்கர நமச்சிவாயரின் நன்னூல் உரை புலப்படுத்துகிறது[32]

அவிநயத்தை, நேமிநாத உரையாசிரியர், தொல்காப்பியத்திற்கு இணையாகக் கருதுகிறார் என்பது 'அவிநயமும் தொல்காப்பியமும்' என்ற தலைப்பில் விளக்கப்பட்டது. தொல்காப்பியக் கடல் கடக்கச் செய்யப்பட்ட தோணியே நேமிநாதம். எனினும், அந்நூல் அவிநயத்தையும் பின்பற்றி இருக்கிறது. இச்செய்தி, அந்நூல் உரையாலும், அந்நூல் வழங்கும் இலக்கணச் செய்திகளாலும் புலனாகிறது. அவ்வாறு நேமிநாதத்தில் இடம் பெற்றுள்ள அவிநயக் கோட்பாடுகள் பின்வருமாறு :

**1. எழுத்துவகை :** எழுத்து ஏழு வகைப்படும். 1. இனைத்து என்றல், 2. இன்ன பெயரின என்றல் 3. இன்ன முறையின என்றல் 4. இன்ன பிறப்பின என்றல் 5. இன்ன அளவின (மாத்திரை) என்றல் 6. இன்ன வடிவின என்றல் 7. இன்ன புணர்ச்சியின என்றல். நேமிநாத எழுத்ததிகாரம் இவ்வடிப்படையிலே அமைந்துள்ளது. 'அவ்வேழும் இந் (நேமிநாதம்) நூலுள்ளே கண்டு கொள்க' என்ற உரைகாரர் கருத்தாலும் இச்செய்தி உறுதி பெறும்.

1. எழுத்து எழுவகை என்பது ஒரு சாரார் கருத்து.
2. எழுத்து எட்டுவகை என்பது மற்றொரு சாரார் கருத்து.
3. எழுத்து எட்டைக் கடந்த பலவகை என்பது பிறிதொரு சாரார் கருத்து.

இம் மூன்று கருத்துகளுள், முதல் கருத்தை உடையவர் குணவீர பண்டிதர் என்பது உரைகாரரின் கருத்து. எழுத்து எழுவகை என்பதை முதலில் இலக்கணத்தில் கூறியவர் அவிநயனாரே.

எண் பெயர் முறைபிறப்பு அளவியல் வடிவு
புணர்தலோடு ஏழும் பொருந்திய வழக்கே

என்பது அவிநய நூற்பா (1).

நேமிநாதமும், அவிநயத்தை ஒட்டியே எழுத்து ஏழு என்று கூறுகிறது. இச் செய்தியை, நேமிநாத உரையாசிரியரே தம் உரையில் விளக்குகிறார். அவர் விளக்கமாவது :

32. சாமிநாதையர், உ. வே., நன்னூல் பதிப்பு, அடிக்குறிப்பு, ஆ்., 96.

''எட்டு வகையும் எட்டிறந்த பல்வகையும் என்ன வேண்டு வாரும் உளராக, இந்நூல் உடையார் (குணவீர பண்டிதர்) எழு வகைய என்று சொல்லவேண்டிற்று என்னையோ எனின், அவை யெல்லாம் இவ்வேழினுள்ளே அடங்கும் ஆகலான் என்பது. அன்றி யும்'' எண்பெயர்........வழக்கே'' என்றார் **அவிநயனார்.**

இங்குப் பிறிதொரு கருத்தும் சிந்திக்கத் தக்கது. எழுத்து, எட்டும், எட்டிறந்த பலவும் என்று கூறுபவர் தொல்காப்பிய உரை யாசிரியர்கள். அவர்களை மறுப்பது போல, அவிநய அமைப்பும், நேமிநாத அமைப்பும், அதன் உரையும் அமைந்துள்ளமை காண்க.

**2. முதலெழுத்து முப்பத்தொன்று:** எழுத்து முதல் என வும், சார்பெழுத்து எனவும் இருவகை. அவை முறையே 12 உம், 18 உம் ஆக மொத்தம் முப்பது. இம்முப்பது என்ற எண்ணை மீறி ஆய்தத்தையும் சேர்த்து முப்பத்தொன்று என்றது நேமிநாத முறை யாகும். **'காட்டிய முப்பத்து ஒன்று நண்ணும் முதல்வைப் பாகும் நன்கு'** என்பது நேமிநாதம் (எ. 1). இது அவிநயனாரின் நூற்பாவின் எதிரொலி போலும்.

அகர முதலாக ஆய்தம் இடையா
னகரமீ றாகும்முதல் வைப்பு

என்பது அவிநயப் புறனடை (110) ஆய்தத்தைப் பற்றி விரிவான கருத்துகள் கூறி (4, 6, 16) சிறப்பிக்கும் அவிநயனார், மேற்கண்ட கருத்திற்கு உரியவர் என்பது தெளிவு. முதல் எழுத்து என்று கூறாமல் முதல் வைப்பு, இரண்டாம் வைப்பு என்று நேமிநாதம் கூறுவதும் அவிநயத்தைப் பின்பற்றித்தான் போலும்.

**3. சார்பெழுத்தின் விரி-எண்ணிக்கை:** சார்பெழுத்து 216 (18×12) என்று முதல் முதல் கணக்குக் கொடுத்தவர் நேமிநாத நூலாசிரியரே (எ. 3).

ஓங்குயிர்கள் ஒற்றின்மேல் ஏறி உயிர்மெய்யாய்
ஆங்கிரு நூற்றேருபத் தாருகும்

இவ்வாறு கணக்கிடும் வழக்கு, நேமிநாதத்திற்கு முன், அவிநயத் திலேயே இடம் பெற்றிருக்கிறது.

இருநூற் றிருபத்தெட்டு பிரிந்தன
உயிரே வன்மை மென்மை இடைமை

என்பது அவிநயம் (2). இக்கணக்குச் சற்று வேறுபட்டிருந்தாலும், கணக்கு முறை ஒன்றே. யாப்பியலை நோக்கி, 12×18=216 என்புன

வற்றுடன், தனி உயிர் பன்னிரண்டினையும் சேர்த்து (216+12) 228 என்றனர் போலும்! அசைக்குரிய எழுத்துகளாக குறிலையும் நெடிலையும் தனித்தனியே கூறிய யாப்பருங்கலக் காரிகை ஆசிரியர், உயிரையும் மீண்டும் சேர்த்து 'குறில், நெடில், ஆவி' (காரிகை 1) என்று கூறல் காண்க.

4. **அளபெடுக்கும் ஒற்றுகள் :** 'ஒற்றளபெடை' என்ற ஒன்றை எழுத்ததிகாரத்தில் குறிப்பிடாமல், பொருளதிகாரம் செய்யுளியலில் வறிதே குறிப்பிட்டுச் சென்றார் தொல்காப்பியர். ஒற்றளபெடை பற்றிய செய்திகள் எதுவும் அவர் தரவில்லை ஆனால், அவிநயனார், ஒற்றளபெடையை, எழுத்ததிகாரத்தில் பேசி, எந்த எந்த ஒற்று அளபெடுக்கும் என்ற விரிவையும் தருகிறார்.

வன்மையொடு ரஃகான் ழஃகான் ஒழித்து, ஆங்கு
அல்மெய், ஆய்தமொடு அளவு எழும் ஒரோவழி

என்பது அவிநயம் (15). இதனால் ஙஞண நமண வயலள என்ற பத்து மெய்களும் ஆய்தத்துடன் அளபெடுக்கும் என்பது தெளிவாகிறது. குணவீர பண்டிதரும், அவிநயத்தை ஓட்டியே

...... ...... ......... பாங்குடைய
வல்லொற்று மெல்லொற்று வர்க்கம் அளபெடைகள்
சொல்லொற்றி நீட்டத் தொகும்

என்று நூற்பா யாத்தனர் (எழுத்து 3).

5. **ஆய்தக் குறுக்கமும் அதற்குரிய மாத்திரையும் :** 'ஆய்தம் அஃகாக் காலையான' என்பதால் தொல்காப்பியர், ஆய்தக் குறுக்கத்தை மறைமுகமாகப் பெறவைத்தார். வெளிப்படையாக அவர் குறிக்கவில்லை. அதற்குரிய மாத்திரை அளவையும் அவர் காட்டினரில்லை. இவ்விரண்டையும் தெளிவாகக் காட்டியவர் அவிநயனரே.

பதினென் மெய்யும் அதுவே ; மவ்வோடு
ஆய்தமும் அளபு அரை தேய்தலும் உரித்தே

என்பது அவிநயம் (14). இதனைப் பின்பற்றியே நேமிநாதத்திலும், 'காலாம் குறுகும் மவ் ஆய்தம்' என்று கூறப்பட்டது (எ. 5)

6. **ஐகார ஔகாரக் குறுக்கங்களுக்குரிய மாத்திரை :** ஐ, ஔ என்பன இரண்டு மாத்திரை பெறும் என்றனர் தொல்காப்பியர், அவிநயனரோ,

அளபெடை தனி இரண்டு அல்வழி ஐ ஔ
உளதாம் ஒன்றரை தனிமையும் ஆகும்

என்றனர். தனித்தும், அளபெடையிலும் வாராதபோது, ஐ, ஔ என்பன ஒன்றரை அல்லது ஒரு மாத்திரையே பெறும் என்பது அவி நயக் கருத்து. (தனிமை—தனி ஒன்று). இவரை ஒட்டியே குணவீர பண்டிதரும், 'ஐ ஔ அளவு ஒன்றரை' என்றனர் (எ. 5).

7. **'கள்' என்னும் பன்மை விகுதி :** கள் என்பது உயர் திணையில் வாராது. அஃறிணையிலும் ஒரோ வழியே வரும் என்பது தொல்காப்பியர் கருத்து. இதற்கு மாருக, கள், உயர்திணை, அஃறிணை இரண்டிலும் வரும் என்றனர் அவிநயனார் (28).

கள்ளென் இறுதி இருதிணைப் பன்மையும்
கொள்ளும் பகர வகரமும் மற்றே

இந்நூற்பாவை ஒட்டியே நேமிநாதமும், **'ஓங்கிய கள்ளொடு வந்தால் இருதிணைக்கும் பன்மைப்பால் ஒள்ளிழையாய் தோன்றலும் உண்டு'** என்று கூறுகிறது (சொ. 37).

8. **மூன்றும் வேற்றுமை உருபுகள் :** வேற்றுமை மயங் கியலில் கூறினராயினும், வேற்றுமை இயலில், தொல்காப்பியர் 'ஒடு' என்ற உருபை மட்டுமே மூன்றும் வேற்றுமை உருபாகக் காட்டினர். அவிநயனார்,

ஆலும் ஆனும் மூன்றன் உருபே

என்றனர் (29). இதனை ஒட்டியே நேமிநாதமும், அதன் உரையும் அமைகின்றன (சொ. 18).

9. **பால்பகுப்பும் பெயரீடும் :** ஆடூஉ அறிசொல், மகடூஉ அறிசொல், பல்லோர் அறியும் சொல், ஒன்றறி சொல், பல அறி சொல் என்பன தொல்காப்பியர் பகுப்பும் பெயர் அமைப்பும் ஆகும் அவிநயனார்,

ஒருவன் ஒருத்தி பலர் என்று மூன்றே
உயர்திணை மருங்கில் படர்க்கைப் பாலே
ஒன்றன் படர்க்கை பலவற்றுப் படர்க்கை
அன்றி அனைத்தும் அஃறிணைப் பால

என்றனர் (26, 27). ஒருவன், ஒருத்தி, பலர், ஒன்று, பல என்ற குறியீடுகளும், ஐம்பால்களும் படர்க்கையில்தான் புலப்படும் என்ற

குறிப்பும் அவிநய நூற்பாக்களால் தெளிவாகின்றது. இக் குறியீடு களையும், குறிப்பையும் நேமிநாதம் அவிநயத்தை அடியொற்றியே அமைக்கிறது. 'ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல' என்பது நேமி நாதம் (சொ. 4). இவ்வொற்றுமையை நேமிநாத உரையாசிரியரும் சுட்டிக் காட்டுகிறார்.

இதுவரை காட்டிய ஒன்பது செய்திகளால், நேமிநாதம், அவி நயத்தை ஒட்டியும் இலக்கணம் செய்திருக்கிறது என்ற உண்மை முற்றும் விளங்கி இருக்கும். குணவீர பண்டிதர் பின்பற்றுகிற அள விற்கு அவிநய அமைப்பும், கோட்பாடும் ஓங்கி இருந்தன என்பதே ஈண்டுக் கருத வேண்டியது.

**அவிநயமும் நன்னூலும் :** அவிநயம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டில் இயற்றப்பட்டது. நன்னூல், அவிநயத்திற்கு ஏறத்தாழ ஐந்நூறு ஆண்டுகளுக்குப் பின்பு எழுதப்பட்டது. எனினும், நன்னூல் தோன்றிய போதும், அதற்கு மயிலைநாதர் உரை எழுதுகின்ற போதும் அவிநயம் இலக்கண உலகில் நடமாடி இருக்கிறது. இச் செய்தி மயிலைநாதரின் உரையால் தெளிவாகிறது.

நன்னூல் உரைகாரர் மயிலைநாதர், அவிநயத்தினின்று மேற் கோளைப் பத்து இடங்களில் சுட்டுவர்.[33] சுட்டும் இடங்களில் 'அளவறு புலமை அவிநயனார்' 'புவிபுகழ் புலமை அவிநய நூல்' என்ற புகழ் மொழிகளால் போற்றுவது, நன்னூல் உரையாசிரியர் நெஞ்சத்தில், அவிநய ஆசிரியர் பெற்றிருந்த பேரிடத்தைக் காட்டுகிறது.

சங்கர நமச்சிவாயர், நன்னூலுக்கு உரை எழுதிய சைவர். அவர், ஆசிரியர் தொல்காப்பியர் என்று எழுதிய கையால் **ஆசிரியர் அவிநயனார்** என்று போற்றுகிறார்.[34]

இவற்றால் நன்னூல் உரையாசிரியர்கள் அவிநயத்தின் மீது வைத்திருந்த தனிமதிப்புப் புலனாகிறது.

பவணந்தி, சில வகையில், அவிநயத்தைப் பின்பற்றி இலக் கணம் செய்தார் என்று கருதச் சான்றுகள் உள்ளன. அவை எடுத்துக் காட்டப் பெறும்

33. அளவறு புலமை அவிநயனார். நன். நூற்பா, 59, 101, 127, 130, 149, 263, 319, 359, 369, 373, புவிபுகழ் புலமை அவிநயநூல் —359

34. நன்னூல். 320.

1. **எழுத்திலக்கணத்தின் பகுதி :** எழுத்து எத்தனை வகை என்ற பாகுபாட்டைத் தொல்காப்பியம் செய்யவில்லை. தொல் காப்பிய உரையாசிரியர்களே, எட்டுவகை என்றும் எட்டிறந்த பல வகை என்றும் குறித்தனர். அவருக்கு முன்பே எழுத்தைப் பாகுபாடு செய்து முதன் முதல் காட்டியவர் அவிநயனாரே. இவரைப் பின் பற்றியே நேமிநாதம் எழுத்தை வகை செய்தது. அவிநயம், நேமிநாதம் என்ற இரண்டின் வழியில் சென்ற பவணந்தி எழுத்து பன்னிரண்டு வகை என்று காட்டியுள்ளார் (நன். 56).

2. **அணுவே மொழிக்கு அடிப்படை :** '**மொழிமுதல் காரணமாம் அணுத்திரள் ஒலி எழுத்து**' என்பதும், 'எழும் அணுத்திரள்' (நன்னூல் 57, 73) என்பதும், பவணந்தி கூற்றுகள். இது அவிநயனுர் எழுதிய 'அணு இயைந்து ஏற்றன ஒலியாய்த் தோன்றுதல் பிறப்பே' என்ற நூற்பாவின் (8) எதிரொலி.[35]

3. **சார்பெழுத்து :** சார்பெழுத்து 369 என்பது பவணந்தி கருத்து. தொல்காப்பியத்தில் சார்பெழுத்தை விவரிக்கும் பாங்கு இல்லை. அவிநயனாரே முதன் முதல் சார்பெழுத்தை 228 (உயிர் 12× மெய் 18=216+உயிர்12=228) என விரித்துக் காட்டி யவர். இவரைத் தொடர்ந்தே, குணவீர பண்டிதர், பவணந்தி ஆகியோர் விரிகூறத் தொடங்கினர்.

4. **எழுத்துப் போலி :** தொல்காப்பியர் அ+ய்>ஐ என்ரு கும் என்றனர் (மொழிமரபு. 23). அ+வ்>ஔ என்ற எழுத்துப் போலியைக் கூறவில்லை. இதனை வ.உ.சி. சுட்டிக்காட்டிப் புதிய பாடம் ஒன்று கூடக் காட்டுகிருர்.[36] ஔ என்பது அ+உ>ஔ என்றும், அ+வ்>ஔ என்றும் இருவழிகளிலும் எழுத்துப் போலியாய் வரும் என்பதை இலக்கணத்தில் அமைத்து முதன் முதல் காட்டியவர் அவிநயனாரே. '**உவ்வொடு வவ்வரின் ஔவிய லாகும்**' என்பது அவிநயம் (7).

இதனைப் பின்பற்றியே பவணந்தி '**அவ்வோடு உவ்வும் வவ்வும் ஔவோர் அன்ன**' என்று குறிப்பிடுகிருர் (124)

5. **மொழிமுதல் எழுத்துகள் :** ஙகரத்தைத் தொல்காப் பியம் மொழிமுதலாகக் கூறவில்லை. பவணந்தியே,

35. மயிலைநாதரும் இவ்வொற்றுமையைக் காட்டுவர். நன். 73.

36. சிதம்பரம் பிள்ளை, வ.உ. தொல்காப்பியம். இளம்பூரணம் 1941. ப. 22

சுட்டுயா எகரம் விஞவழி அவ்வை
ஒட்டி நவ்வும் முதலா கும்மே

என்றனர் (105). அ, இ, உ, யா எ என்பவற்றின் பின்வரும் நகரம் மொழிமுதல் எழுத்தே என்பது அவர் கருத்து. நகரத்தை மொழி முதலாக முதலில் கூறியவர் அவிநயனுரே. **'கசதப நவ்வே ஆதியும் இடையும்'** என்பது அவிநயம். நன்னூல், அவிநயத்தைப் பின்பற்றி இருக்கிறது என்பது தெளிவு.[37]

6. **ஆய்தக் குறுக்கம்:** ஆய்தக் குறுக்கத்தைத் தொல்காப்பியர் உய்த்துணர வைத்தாரே (மொழிமரபு-7) அன்றி, வெளிப்படையாய்க் கூறினுர் இல்லை. அதற்குரிய மாத்திரை அளவையும் கூறவில்லை. இரண்டையும் அவிநயனுர் எடுத்துரைக்க (14), பவணந்தி பின்பற்றுகிருர் (96, 98).

7. **ஐகார ஔகாரக் குறுக்கங்களின் மாத்திரை:** ஐ ஔ குறுக்கங்களுக்குரிய மாத்திரை ஒன்றரை என்றே வீரசோழியம், நேமிநாதம் ஆகியன குறித்தன. யாப்பருங்காலக் காரிகை உரையும் அவ்வாறே குறிப்பிட்டது. ஒருமாத்திரை பெறுதலும் உண்டு என்று காரிகை உரை குறிப்புக் காட்டுகிறது (யா.கா. உறுப்பியல், 1). இக் கருத்தை அவிநயனுரே இலக்கணவழி முதன் முதல் தெளிவாக்கினுர்.

அளபெடை தனி இரண்டு அல்வழி ஐஔ
உளதாம் ஒன்றரை தனிமையும் ஆகும்

(அவிநயம். 14)

பவணந்தி இவரைப் பின்பற்றியே **'ஒன்றே குறிலோடு ஐ ஔக் குறுக்கம் ஒற்றளபு'** என்றனர். (98)

8. **அளபெடுக்கும் மெய்கள்:** ஒற்றளபெடை என்ற ஒன்றைப் **பவணந்திக்கு முற்பட்ட இலக்கண ஆசிரியர் குறித்தனர் எனினும்,** எந்த மெய் அளபெடுக்கும் எனக் குறித்தனர் இல்லை. அதனை விரித்துக் காட்டியவர் அவிநயனுரே.

வன்மையொடு ரஃகான் ழஃகான் ஒழிந்தாங்கு
அல்மெய் ஆய்தமோடு அளபெழும் ஓரோவழி (அவிநயம். 15)

அவிநயத்தை பின்பற்றியே, பவணந்தியும்,

37. நகரம் மொழிக்கு முதல் ஆமோ எனின், 'கசதப நவ்வே......என்ப நகரம் ஈரிடத்தும் நிற்கும் என்ருர் ஆசிரியர் அவிநயனுரும் என்க. மயிலைநாதர். நன், உரை, 101

ஙஞண நமன வயலள ஆய்தம்
அளபாம்; குறிலிணை குறிற்கீழ் இடைகடை
மிகலே அவற்றின் குறியாம் வேறே (நன்னூல். 91)

என்றனர்.

பவணந்தி, ஒற்றளபெடை, ஐகாரக்குறுக்கம், ஔகாரக் குறுக்கம், மகரக்குறுக்கம், ஆய்தக் குறுக்கம் என்பவற்றை அவிநய னுரைப் பின்பற்றியே இலக்கணம் அமைத்தார் என்பதை நன்னூல் உரைகாரர் மயிலைநாதர் தெளிவாக எடுத்துக் காட்டுகிறார்.[38] அது பின் வருமாறு :

'ஒற்றளபெடையும், ஐகாரக் குறுக்கமும், ஔகாரக் குறுக்கமும் **யாண்டுப் பெற்றாமோ** எனின், "வன்மையோடு... (அவிநயம் 15), அளபெடை தனி இரண்டு...(அவிநயம்—14), பதினெண் மெய் யும்...(அவிநயம்—13)' என்றார் ஆசிரியர் **அவிநயனாரும்** எனக் கொள்க"

**ஆய்த அளபெடை :** ஆய்தத்தை ஒற்றெழுத்துகளோடு ஒன்ற வைத்து எண்ணுகிறது அவிநயம். ஆய்தம், தனிநிலை, **புள்ளி, ஒற்று,** அஃகேனம் என்ற பெயர்களைப் பெறும் என்று எடுத்துக்காட்டுகிறது அந்நூல். அவிநயம், 'தனிநிலை' என்று வழங் குவதை அப்படியே 'தனிநிலை' (59) என்று எடுத்தாளுகிறார். ஒற்றளபெடுக்கும் என்ற அளவில், தொல்காப்பியரும், குணவீர பண்டிதரும் அமைந்தனர். அவிநயனாரே, ஒற்றுகளுடன் கூட, ஒற்று புள்ளி என்ற பெயர்களைப் பெற்ற ஆய்தமும் அளபெடுக்கும் என்றார். **'மெய் ஆய்தமொடு அளபெழும்'** என்பது அவிநயம் (15). இதனை ஒட்டியே பவணந்தியும், **'ஆய்தம் அளபு ஆம்'** (91) என்று நூற்பா அமைக்கின்றனர்.

9. **ஆய்தத்தின் மாற்றொலி யகரம் :** யகரம் ஆய்தத்தின் மாற்றொலியாக வருகிறது. கல்வெட்டுகளாலும் இலக்கிய வழக் காலும் இச்செய்தி உறுதியாகிறது. இஃது என்பது 'இய்து' என்று கல்வெட்டுகளில் எழுதப்பட்டிருக்கிறது.[39] கஃசு என்பது கைசு (கய்சு) என்று கல்வெட்டில் வருகிறது. புறநானூறு, திருக்குறள், சூளாமணி, பெருங்கதை, (1.38. 109; 1.56. 161) சிந்தாமணி போன்ற இலக்கியங்களில், ஆய்தம், யகரம், ஐகாரம் ஆகியன எதுகைகளாக ஆளப்பட்டுள்ளன.

38. நன்னூல் சூத், 59 உ. வே. சா பதிப்பு.

39. இய்து (இஃது) எழுதின சுத்த கேசரிப் பெரும்பணைக்காரனுக்கு பெருமக்கள் அருளாற் பெற்றது ஒரு இல்ல வளாவும், இரண்டுமாச் செய் உம் ஒரு புஞ்சை உம் பெற்றான் இவை பெரும்பணைக்காரன் எழுத்து—வேள்விக்குடிச் செப்பேட்டு வரிகள், 152, 153, 154, 155.

எஃகிருள் அகற்றும் ஏமப் பாசறை
வைகறை அரவம் கேளியர்! பல கோள்
செய்தார் மார்ப எழுமதி துயில் என (புறம். 397)

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனிற் கூரியது இல் (திருக்குறள். 759)

அஃதே அஃதே அங்கார வேகன் ஆங்கோன் அயல் வாளால்
வெய்தாங் குற்று வீடின னன்றே (சூளாமணி. அரசியல்.205)

அஃதே அடிகளும் உளரோ என்றாற்கு அருளுமாறு
இஃதா இருந்தவாறு என்றார்க்கு என்னைப் பெறவல்லார்க்கு
எய்தா இடருளவே எங்கெங்கு என்றத் திசைநோக்கி
வெய்தா அடிதொழுது வேந்தன் கோயிற்கு எழுந்தானே.
(சிந்தாமணி 1884)

பைத னெஞ்சத்து மையல் கொள்ள
எஃகொழி களிற்றின் வெய்துயிர்த் துயங்கி
கய்ந்நவி லாளனை எஃகுள் அடக்கிய (பெருங்கதை)

ஆய்தத்திற்கும் யகர மெய்யிற்கும் உள்ள உறவை மு. ராகவையங்கார், தெ. பொ. மீனாட்சி சுந்தரனார், டாக்டர். தி. முருகரத்தினம் ஆகியோர் எடுத்துக் காட்டியுள்ளனர்.[40] ஆய்த யகர ஒற்றுமையை முதன் முதல் எடுத்துக்காட்டியது அவிநயமே.

ஆய்தம் யவ்வும் அவ்வொடு வரினே
ஐயென் எழுத்தொடு மெய்பெறத் தோன்றும்

என்பது அவிநயம் (6). இக்கருத்தைப் பவணந்தியும் கொண்டிருந்தார். இச்செய்தி, 'அம்முன் இகரம்...' (நன். 124) என்ற நூற்பாவிற்குப் பாடபேதமாக, பிறிதொரு நூற்பாவை டாக்டர் உ. வே. சாமிநாதையர் காட்டுவதினின்று புலனாகிறது.[41]

அம்முன் இகரம் யகரம் என்றிவை
எய்தின் ஐயொத் திசைக்கும் அவ்வோடு
உவ்வும் வவ்வும் ஔவோர் அன்ன

40. மு. ரா. ஆராய்ச்சித் தொகுதி, கட்டுரைமணிகள், தெ. பொ. மீ.: History of Tamil Langnage.

டாக்டர் தி. முருகரத்தினம். தமிழ் எழுத்தியல் இன்றும் அன்றும், ப. 290

41. சாமிநாதையர், டாக்டர். உ. வே., மயிலைநாதர் நன், உரைப்பதிப்பு. 1918, ப. XI, 52

இது இன்றைய நன்னூல் நூற்பா. டாக்டர். உ.வே.சா. குறிப்பின் படி, மிதிலைப்பட்டி ஸ்ரீ அழகிய சிற்றம்பலக் கவிராயர் அவர்கள் வீட்டுப் பிரதியிலும், வேறு மூன்று பழைய பிரதிகளிலும் காணப்படும் நன்னூல் நூற்பாவும் உரையும் பின் வருமாறு :

அம்முன் இகரம் ஆய்தம் என்றிவை
எய்தின் ஐயொத் திசைக்கும் அவ்வோடு
உவ்வும் வவ்வும் ஔவோர் அன்ன

உரை : 'அகரம் முன், இகரமும், ஆய்தமும் வரின்' என்பதாகும். இவற்றால், பவணந்தி, அவிநயனாரைப் போலவே, அவரைப் பின்பற்றியே அ+இ>ஐ; அ+ஃ>ஐ என்பவற்றைக் கூறினார் போலும். 'அஐ முதலிடை ஒக்கும் சஞய முன்' என்ற நன். நூற்பாவின் (123) மூலம் அ+ய்> அய்/ஐ என்பதனைக் கூறிவிட்டார். மீண்டும் இந் நூற்பாவிலும் 'அம்முன் இகரம் **யகரம்**' என்று கூறியது கூற வேண்டுவதில்லை. ஆதலால், மேலே காட்டப்பட்ட மிதிலைப்பட்டி சிற்றம்பலக் கவிராயர் பாடமே சரி என்று தோற்றுகிறது.

10. **எழுத்தும் சொல்லும் :** எழுத்து, தன்னை உணர்த்தும் போது எழுத்து எனப்படும். ஒரு பொருளைச் சுட்டும்போது, அது சொல் எனப்படும். இக்கருத்தை, அவிநயப் புறனடை (115)

தன்னை உணர்த்தின் எழுத்தாம் பிறபொருளைச்
சுட்டுதற் கண்ணேயாம் சொல்

என்று கூறும். நன்னூலும் இதனைப் பின்பற்றியே '**எழுத்தே** தனித்தும் தொடர்ந்தும் **பொருள்** தரின் பதமாம்' (127) என்று குறிப்பிடுகிறது என்பது மயிலைநாதர் கருத்து.

11. **தமிழ்ச் சிறப்பெழுத்துகள் :** தமிழையும், அன்று அதனோடு இணையாக இந்திய நாட்டில் வழங்கிய சமஸ்கிருதத்தையும் அக்கால அறிஞர் ஒப்பிட்டு நோக்கினர். சைன சமயத்தின் வரவால், இவ்வொப்பீடு மிகுதியாகி இருக்கும். அதனால், இருமொழிகளுக்கும் இடையே உள்ள ஒற்றுமை வேற்றுமைகளைப் பார்க்கும் பார்வையும் தோன்றி இருத்தல் வேண்டும். அதன் விளைவே '**தமிழிற்கே உரிய சிறப்பெழுத்து**' என்ற கோட்பாடு. இதனை முதலில் எடுத்து விளக்கியவர் அவிநயனாரே.

றனழள ஒவ்வும் தனியும் மகாரமும்
தன்மைத் தமிழ் பொது மற்று. (அவிநயம் 114)

எஒ என்ற உயிர் எழுத்துகளும், றனழ என்ற மெய்களும் தமிழிற்கே உரியவை என்ற அவிநயப் புறனடைக் கருத்தின் விரிவே, நன்னூலில் ஆசிரிய யாப்பில் அமைக்கப்பட்டிருக்கிறது.

12. **பேடு, அலி, அழிதூஉ முதலாயின:** பெண்ணியல்பினை விட்டு ஆண்மையினை ஆசைப்படும், பொருள் ஆண்பால் அனைய: பேடன் வந்தான்; ஆணியல்பினை நீங்கிப் பெண்ணியல்பினை விரும்புவன பெண்பால் போன்றன: பேடி வந்தனர்; ஆண், பெண் என்ற இருவரது தன்மை அஃறிணையாகவும் பேசப்படும்: பேடு வந்தது; பேடுகள் வந்தன. இச்செய்தியை அவிநயம் (25),

'அழிதூஉ வகையும் அவற்றின் பாலே'

என்று சுட்டிக்காட்டுகிறது. இக்கருத்தை ஒட்டியே பவணந்தியும் (268), 'இருமையும் அஃறிணை' ஆகும் என்றனர்.

13. **சொற்பாகுபாடு:** சொற்கள் அடிப்படையில் பெயர், வினை என்ற இரண்டே. இவற்றின் உள்ளடக்கமே இடை, உரி என்பன. இக்கோட்பாடு இன்றைய மொழியியலார் போற்றும் தலைமைக் கோட்பாடு. இது, தொல்காப்பியம், அகத்தியம், அவிநயம் ஆகியவற்றில் தெளிவாகச் சுட்டப்படுகிறது. பெயர்ச்சொல், தொழிற்சொல் என இரண்டே என்கிறார் அவிநயனார் (20). இதனை ஒட்டிப் பவணந்தியும், **'பெயர் வினை என இரண்டாகும்'** என்பர்.[42]

14. **வினைச்சொல்லின் இலக்கணம்:** வினை, காலம், தொழில், கருத்தன் என்பனவற்றைக் காட்டும் என்பது அவிநயனார் கருத்து. 'வினையெனப்படுவது வேற்றுமை கொள்ளாது, நினையுங் காலைக் காலமொடு தோன்றும்' என்ற தொல்காப்பிய இலக்கணத்தை விட (வினையியல் 1), அவிநயம் காட்டுவது சற்று விரிந்தது.

காலம் அறிதொழில் கருத்தனொ டியையப்
பால்வகை தோறும் படுமொழி வேறே

என்பது அவிநயம் (31). **'காலக்கிளவி'** என்றே அவிநயம், வினையைக் குறிப்பிடுகிறது (32). இக்கருத்துகளை வாங்கி, அவற்றைச் சற்று விரித்தே பவணந்தி வினையியல் முதல் நூற்பாவை அமைத்திருத்தல் வேண்டும்.[43]

15. **பத்து எச்சங்கள்:** பெயரெச்சம், வினையெச்சம், உம்மை எச்சம், சொல்லெச்சம், பிரிப்பெச்சம், என எச்சம், ஒழியிசை எச்சம், எதிர்மறை எச்சம், இசை எச்சம், குறிப்பெச்சம்

42. மயிலைநாதர், நன், உரை. 130, 269.

43. மே. கா. நூ. 319.

என்ற பத்து எச்சங்களையும் பவணந்தி பொதுவியலில் (9) கூறுகிருர். இவை, அவிநயத்தை அடியொட்டி அமைக்கப்பட்டவை என்பது மயிலைநாதர் கருத்து. இதற்குரிய அவிநய நூற்பா கிடைக்க வில்லை; மறைந்து விட்டது. எனினும், அந் நூற்பாவிற்குரிய இராசபவித்திரப் பல்லவ தரையனல் எழுதப்பட்ட அருமையான உரை நன்னூல் மயிலைநாதர் உரையில் மேற்கோளாக இடம் பெற்றுள்ளது.[44] அவ்வுரை பற்றிய ஆய்வு **'அவிநய உரை'** என்ற தலைப்பில் ஆராயப்பெறும்.

16. **திணையில் வழு அமைப்பு:** பாலும், திணையும் உவப்பினுலும், உயர்வினுலும், இழிப்பினுலும், சிறப்பினுலும் மயங்கி வழங்கும். அவற்றை வழுவமைதிகளாகக் கொள்க என்பது அவிநயக் கருத்து.

> உவப்பினும் உயர்வினும் இழிப்பினும் சிறப்பினும்
> பாலும் திணையும் மயங்குதல் வரையார்

என்பது அவிநய நூற்பா (22). இதனை ஒட்டியே, 'செறல்' என்பதையும் சேர்த்துப் பவணந்தி நூற்பா அமைத்திருக்கிருர் (378).

பவணந்தி, அவிநயத்தை ஒற்றியும் சில இலக்கணங்களைச் செய்திருக்கிருர் என்பது தெளிவு. நன்னூல் மயிலைநாதர் உரையும், நன்னூல் போக்கும் பவணந்தி, அவிநயனுர் சமய ஒற்றுமையும் இதனை வலிவுபடுத்துகின்றன. அவிநயம் முழுதும் கிடைத்திருந்தால் மேலும் அவிநயம்—நன்னூல் ஒற்றுமைகள் பல புலப்பட்டிருக்கும்.

**அவிநயம் பதிப்புமுறை:** அவிநயம், தொல்காப்பியத்திற்கு இணையான நூல் என்பது தெளிவு. அவிநயனுர் அவிநயம் என்ற ஒரு நூல் மட்டும் எழுதினுர் இல்லை. எழுத்து, சொல், பொருள், யாப்பு அடங்கிய அவிநயத்தைத் தொடக்கத்தில் எழுதி இருத்தல் வேண்டும். பன்னிரு படலத்தில் ஒரு படலத்தையும் இவர் இக்காலத்திலேயே எழுதினுர் போலும். பின்னர், பெருகி வந்த யாப்புச் செய்திகளை அமைக்க, அவிநயப் புறனடையை எழுதினராதல் வேண்டும். புறனடை தனிநூல் என்பது உறுதி. யாப்பருங்கலக் காரிகையைத் தனியே புறனடை நூலாக எழுத அமுதசாகரர்க்கு அவிநயனுர் படைப்புகளே வழித்தடம் அமைத்துக் கொடுத்திருத்தல் வேண்டும். ஏனைய ஆசிரிய யாப்பில் இயற்றப்பட அவிநயப் புறனடை மட்டும் வெண்பா யாப்பில் அமைந்திருப்பதும் இதனை வற்புறுத்துகிறது. அவிநயனுர், பாட்டியலை தன் வாழ்நாளின் இறுதியில்

44. மயிலைநாதர், நன். உரை. 359,

எழுதினராதல் கூடும். பாட்டியலில் இடம் பெற்றுள்ள செய்திகள், பிற்கால யாப்பு வடிவங்களை, செய்திகளைத் தாங்கி இருக்கின்றன. ஆசிரிய யாப்பில் இயன்றிருக்கின்றன. பல பாட்டியல் நூல்கள் இக் காலத்தில் எழுதப்பட்டிருக்கின்றன. ஆதலின் பாட்டியல் அவி நயனாரின் இறுதிப் பருவத்தில் எழுதப்பட்டதாதல் வேண்டும். இக் காரணங்கள் கருதியே அவிநயம், அவிநயப் புறனடை, அவிநயனார் பாட்டியல், அவிநயனார் புறத்திணைப் படலம் என நான்காகப் பிரிக்கப்பட்டுப் பதிக்கப்பட்டிருக்கின்றன. எனினும், அனைத்தையும் எழுதிய ஆசிரியர் ஒருவர் என்பதனாலும், ஆசிரியப் பெயரே நூற் பெயர் ஆகியது என்பதனாலும், பயில எளிமை என்பதனாலும் இவை யனைத்தும் அவிநயம் என்ற தலைப்பில் தரப்பட்டிருக்கின்றன. நூற்பா எண்களும் தொடர் எண்களாக ஒவ்வொரு நூற்பாவின் தொடக் கத்திலும் கொடுக்கப் பட்டிருக்கின்றன. எனினும் நூற்பா இறுதியில், அவ்வவ் நூலில் இடம் பெற்றுள்ள நூற்பா எண்ணிக்கை தெரிவதற்காக அங்கங்கே தொடர் எண்கள் குறிக்கப்பட்டிருக் கின்றன. ஒவ்வொரு நூற்பாவிற்கும் தலைப்பு இடப்பட்டிருக்கிறது. உரைநூல்களிலிருந்து திரட்டப்பட்டது என்பதால், ஒவ்வொரு நூற் பாவின் முடிவிலும், அந் நூற்பா எவ்வுரையிலிருந்து எடுக்கப்பெற்றது என்பது சுருக்கமொழிகளில் சுட்டப்பட்டிருக்கிறது. திரட்டப்பட்ட நூற்பாக்களே எனினும் கருத்து வாரியாகப் பகுக்கப்பட்டு, உரிய தலைப்புகள் இடப்பட்டுள்ளன.

# எழுத்ததிகாரம்

## எழுத்திலக்கணத்தின் பகுதி

1. எண் பெயர் முறைபிறப் பளவியல் வடிவு
புணர்தலோ டேழும் பொருந்திய வழக்கே
நேமி. பாயி. ப.1. 3

## எழுத்தின் வகை

2. இருநூற் றிருபத் தெட்டு விரிந்தன
உயிரே வன்மை மென்மை இடைமை யா. வி. ப. 21

## குற்றெழுத்தும், நெட்டெழுத்தும்

3. அ இ உ எ ஒ இவை குறிய மற்றை
யேழ்நெட் டெழுத்தா நேரப் படுமே யா. வி. 2 ப. 21

## ஆய்தம்

4. அஃகேனம் ஆய்தந் தனிநிலை புள்ளி
ஒற்றிப் பால ஐந்தும் இதற்கே
யா. வி. 2. ப. 27, யா. கா. 4

## எழுத்துப்போலி

5. அ ஐ முதலிடை ஒக்கும் ஒரோவழி நே. 9

## ஆய்தம், யகரத்தின் மாற்றொலி

6. ஆய்தமும் யவ்வும் அவ்வொடு வரினே
ஐயென் எழுத்தொடு மெய்பெறத் தோன்றும்
யா. வி. 2. ப. 29

## கூட்டெழுத்து

7. உவ்வொடு வவ்வரின் ஔயவி லாகும்*
யா. வி. 2. ப. 29

## பிறப்பு

8. ஆற்றல் உடையுயிர் முயற்சியி னணுவியைந்
தேற்றன ஒலியாய்த் தோற்றுதல் பிறப்பே
மயிலை. எழுத். 19

* 'அ'முன் உ அல்லது வ் வரின், அ+உ, அ+வ் > ஔ என்பதாம்.

## மெய்வகைகள் பிறக்கும் முறை

9. முதலிடை நுனிநாப் பல்லிதழ் மூக்கின்
வன்மை முதலாம் மும்மையும் பிறக்கும்
யா. வி. சீர். ஒத்து—15 உரை. மே.ப—69

## குற்றியலுகரமும், குற்றியலிகரமும்

10. வல்லெழுத் தாறூே டெழுவகை இடத்தும்
உகரம் அரையாம் ; யகரமோ டியையின்
இகரமும் குறுகும் என்மனூர் புலவர்
யா.வி. 2.பு. 25, யா.கா.4

## முதல்நிலை எழுத்துகள்

11. கசதப ஙவ்வே ஆதியு மிடையும்
டறவிடை ணனரழ லளஇடை கடையே
ஞநமய வவ்வே மூன்றிட மென்ப நன். மயிலை. 101

## மாத்திரை இலக்கணம்

12. கண்ணிமை கைந்நொடி எனவே நே. சொ. 49

## எழுத்துகள் பெறும் மாத்திரை

13. பதினெண் மெய்யு மதுவே மவ்வொடு
ஆய்தமும் அளபுஅரை தேய்தலும் உரித்தே
நன். மயிலை. 59

## ஐ. ஔ. மாத்திரை

14. அளபெடை தனியிரண்டு அல்வழி ஐஔ
உளதாம் ஒன்றரை தனிமையு மாகும் நன். மயிலை. 59

## அளபெடுக்கும் மெய்கள்

15. வன்மையொடு ரஃகான் ழஃகான் ஒழிந்தாங்கு
அல்மெய் யாய்தமோ டளபெழு மொரோவழி*
நன். மயிலை. 59, நே. 3

## ஒற்றளபெடை அலகு

16. ஒற்றள பெழாவழிப் பெற்றஅல கிலவே நே. 5

* என்பது நேமிநாத உரை. மயிலைநாதர் இதே சூத்திரத்தை அவிநயமாகக் காட்டியுள்ளார். நேமிநாத உரையாசிரியர், அவிநயம் எனப் பெயர் குறிப்பிடாமல் காட்டுகிருர்.

## அல்ஈறு அன்ஈறு ஆதல்

17. அல்வினை அன்ஆய்த் திரியவும் பெறுமே** நே. சொ. 40

## னகர ஒற்றுப் பெறுவன

18. முன்னிலை நெடிலு மாவு மின்மிகப்
புணரு மியங்குதிணை யான நே. 23

** குறிப்பு : கூறுவன் என்றார் அமுதசாகரர் என்று எடுத்துக்காட்டு உரைப்பர் நேமிநாத உரையாசிரியர்.

# சொல்லதிகாரம்

## சொல்லாராய்ச்சி

19. திணைபால் மரபு விஞச்செப்பு இடம் சொல்
இணையா வழுத்தொகையோ(டு)எச்சம்—அணையாக்
கவிணையபார் வேற்றுமையும் காலமயக் குங்கொண்(டு)
அவிநயனர் ஆராய்ந்தார் சொல்.

வீரசோழியம் பெருந்தேவனர் உரை—கிரியாபதப் படல இறுதி

## சொற்பாகுபாடு

20. அவைதாம்
பெயர்ச்சொல் என்ரு தொழிற்சொல் என்ரு
இரண்டன் பாலா யடங்குமென் பயின்றே

நன். மயிலை. 130

## திணை வழுவமைதி

21. தன்மையோ டிசைந்தன தன்மை யாகும்
முன்னிலை மொழியோடு படர்க்கையும் அற்றே

நே. சொ. 10

## திணை பால், வழு வமைதிகள்

22. உவப்பினு முயர்வினு மிழிப்பினுஞ் சிறப்பினும்
பாலுந் திணையு மயங்குதல் வரையார்

நே. சொ. 11

## வண்ணச் சினைச்சொல்

28. முதலொடு குணம்இரண்டு அடுக்குதல் வழக்கியல்
சினையோ டடுக்குதல் செய்யு ளாரே நே. சொ. 15

## பால் அறியும் முறை

24. திணையும் பாலுந் தெரியா நின்றுழி
விணையும் பெயரும் வேற்றுமை விளக்கும் நே. சொ. 37

## திணை : அலி முதலாயின

25. அழிதூஉ வகையும் அவற்றின் பாலே நன். மயிலை. 263

## உயர்திணையில் பால் பாகுபாடு

26. ஒருவன் ஒருத்தி பலரென்று மூன்றே
உயர்திணை மருங்கிற் படர்க்கைப் பாலே — நேமி. சொ. 4

## அஃறிணையில் பால் பாகுபாடு

27. ஒன்றன் படர்க்கை பலவற்றுப் படர்க்கை
அன்றி யனைத்தும் அஃறிணைப் பால — நேமி. சொ. 4

## கள் என்ற பன்மை விகுதி

28. கள்ளென் இறுதி இருதிணைப் பன்மையுங்
கொள்ளும் பகர வகரமு மற்றே — நே. சொ. 37

## வேற்றுமை

29. ஆலும் ஆனும் மூன்றன் உருபே*
வீர. சோ. 2 சொல். வேற். படலம் 6

## ஐந்தாம் வேற்றுமைப் பொருள்

30. உவம நீக்க மெல்லை ஏது வென்
றவை நான் கென்ப ஐந்தாம் உருபே — நே. சொ. 19

## வினைச் சொல்

31. கால மறிதொழில் கருத்தனே டியையப்
பால் வகை தோறும் படுமொழி வேறே — நன். மயிலை. 319

## வினைமுற்று

32. பாலும் திணையும் இடத்தொடு விளக்கும்
காலக் கிளவி முற்றென மொழிப — நே. சொ. 49

## எச்ச வினைகள் முடியுமாறு

33. வினையெஞ்சு கிளவியும் பெயரெஞ்சு கிளவியும்
பல பல அடுக்கினும் முற்றுமொழிப் படிய — நே. சொ. 46

* ஆலும் ஆனும் ஒடும் ஒடுவும் சாலும் மூன்றும் வேற்றுமைத் தனுவே. நன். மயிலைநாதர் உரை. 296

## எச்சங்களின் வகையும் முடிவும்

34. (பெயர், வினை, உம்மை, சொல், பிரிப்பு,
என, ஒழி இசை, எதிர்மறை, இசை, குறிப்பு என்ற)
இப்பத்தெச்சமும் புவிபுகழ் புலமை யவினயனூலுள்
தண்டலம் கிழவன் தகைவருநேமி
எண் திசை நிறை பெயர் இராச பவித்திரப்
பல்லவ தரையன் பகர்ச்சி என்றறிக** நன். மயிலை. 359

## தொகை ஆறு

35. வேற்றுமை உம்மை வினை பண் புவமை
அன்மொழி என்றிவை தொகை ஆறுமே நே. சொ. 2

## தொகையில் பொருள் சிறந்து நிற்குமிடம்

36. கால்வாய், அடைகடல் என்பன வாயை
உடைய கால், கடலினது அடையென
முன் மொழிப் பொருள் குறித்தன. வேங்கைப்பூ,
கருங் குதிரை என்பன பன் மொழிப் பொருள்
கருதின. இவை ஈரிடத்திற்கும் அவினயத்திற்
காட்டினவை. நன். மயிலை, மேற், 369

## ஒலியழுத்தம்

37. இரு பொருள் இயைதலின் அப்பொருள் படுமொழி
இதுவென வேறுவைத்தி சைத்தல் வேண்டும் நே. 22

## ஐவகை வினுக்கள்

38. அறியான் வினுதல் அறிவொப்புக் காண்டல்
ஐய மறுத்தல் அவனறிவு தான் கோடல்
மெய்யவற்குக் காட்டலொடு ஐவகை வினுவே
நே. சொ. 6

** விரிவான விளக்கம் அவிநய உரை எனும் தலைப்பில் காண்க.

# பொருளதிகாரம்

## அகப்புறத்திணை

39. இனி, ஒரு சாரார் அகத்திணை, புறத்திணை,
அகப் புறத்திணை என மூன்ருய் அடங்கும்
என்ப. ஆமாறு, அவிநயத்துட் காண்க.
யா. வி. 95. ஒழிபியல், ப.573

## களவுக் காதல்

40. ஊழ்வினை வயத்தான் ஒத்த இருவரும்
உள்ளம் நெகிழ்ந்து காதல் வயப்படுவர்.
முற்செய் வினையது முறையா உண்மையின்
ஒத்த இருவரும் உள்ளகம் நெகிழ்ந்து
யா. வி. 95. ஒழிபியல், 576

## கைக்கிளை நான்கு

41. காட்சி ஐயம் தெரிதல் தேற்றல் என
நான்கு யா. வி. ஒழிபியல், 95. ப. 576

## தலைவியின் குணங்கள்

42. அவட்கு நாணும் மடனும்
அச்சமும் பயிர்ப்பும் யா. வி. ஒழிபியல். 95. ப. 576

## தலைவன் குணங்கள்

43. உயிர்த்தகத் தடக்கிய அவற்கும்
அறிவும் நிறைவும் ஓர்ப்பும் தேற்றமும்
யா. வி. ஒழிபியல் 95. ப. 576

## களவு மணம்

44. மறைய அவர்க்கு மாண்டதோர் இடத்தில்
மெய்யுறு வகையுமுள் ளல்ல துடம்படாத
தமிழியல் வழக்கமெனத் தன்னன்பு மிகைபெருகிய
களவெனப் படுவது கந்தருவ மணமே
யா. வி. ஒழிபியல் 95. ப. 576

## மணம்

45. முற்செய் வினையது முறையா உண்மையின்
ஒத்த இருவரும் உள்ளகம் நெகிழ்ந்து
காட்சி ஐயம் தெரிதல் தேற்றலென
நான்கிறந் தவட்கு நாணும் மடனும்
அச்சமும் பயிர்ப்பும் அவற்கும்
உயிர்த்தகத் தடக்கிய
அறிவும் நிறையும் ஓர்ப்பும் தேற்றமும்
மறைய அவர்க்கு மாண்டதோர் இடத்தில்
மெய்யுறு வகையுமுள் ளல்ல துடம்படாத்
தமிழியல் வழக்கமெனத் தன்னன்பு மிகைபெருகிய
களவெனப் படுவது கந்தருவ மணமே

யா. வி. 95. ஒழிபியல் 576

## பொழிப்புரை

46. பொழிப்பெனப் படுவது பொருந்திய பொருளைப்
பிண்டமாகக் கொண்டுரைப் பதுவே நே. பா. பா. 3

யா. கா. காரிகை. 1—நம்பியகப்பொருளுரை. 1

# யாப்பதிகாரம்

## அசைக்குரிய எழுத்துகள்

47. நெடிய குறிய உயிர்மெய் உயிரும்
வலிய மெலிய இடைமை அளபெடை
மூவுயிர்க் குறுக்கமோ டாமசைக் கெழுத்தே
யா. வி. 2. ப. 30

## கிரந்த எண்ணிக்கை

48. குற்றெழுத் துத்தொண் ணூற்றைந் தாகும்
நூற்றெரு முப்பத்து மூன்று நெடிலாம் யா. வி. ப. 21

## ஆய்தமும் ஒற்றும் அலகுபெரு

49. அளபெழின் அல்லதை ஆய்தமும் ஒற்றும்
அலகியல் பெய்தா என்மனர் புலவர் யா. வி. 3. ப. 35

## உயிரளபெடை

50. உயிரள பெடையும் குறுகிய உயிரின்
இகர உகரமும் தளைதபின் ஒற்றும் யா. வி. 4. ப. 45

51. சீர்தப வரினும் ஒற்றியற் ருகும்
யா. வி. 4. ப. 45., 95. ப., 431, 441

## அசை

52. நேரசை ஒன்றே நிரையசை இரண்டல (கு)
ஆகும் என்ப அறிந்திசி னேரே
யா. வி. அசை யோத்து. 5. ப. 47

## அசையின் அலகுகள்

53. நேரோ ரலகு நிரையிரண் டலகு
நேர்புமூன் றலகு நிரைபுநான் கலகென்
ரேதினர் புலவர் உணரு மாறே
யா. வி. அசையோத்து. 5. ப. 47, 95

## ஐகாரம் அசைபெறுமாறு

54. கடையும் இடையும் இணையும் ஐ இரட்டியும்
யா. வி. அசையோத்து. 9. ப. 55

### சீர்

55. ஈரசைச் சீர்நான்கு இயற்சீர் மூவசையின்
இயற்சீர் எட்டினு ளல்லன விரவினும்
நேரிறின் வெள்ளை நிரையிறின் வஞ்சி
யா. வி. சீரோத்து 12. ப. 63

### பொதுச்சீரின் திறமும் தொகையும்

56. ஈரசைச்சீர் பின்முன் னுவைத் துறழ்ந்து
மாறியக்கால் நாலசைச் சீர்பதி னாறும்
யா. வி. சீரோத்து 13. ப. 64

### நாலசைச் சீர்கள்

57. நாலசைச் சீரும் ஓரோவிடத் தியலும்
பாவொடு பாவினம் பயிறல் இன்றி யா. வி. 13. ப. 67

### ஓரசைச் சீர்கள்

58. நேர்நிரை வரினே சீர்நிலை யெய்தலும்
பாவொடு பிறவு மாகு மொரோவழி
சீர் ஓத்து—யா. வி. 14. ப. 68, யா. வி. 91, மேற் 439

### சீர்வரும் முறை

59. உரிமை யியற்சீர் மயங்கியும் பாநான்
கிருமை வேறியல் வெண்பா வாகியும்
வருமெனும் வஞ்சி கலியினே ரிற்ற
வியற்சீ ராகா வென்மனார் புலவர்
யா. வி. சீர் ஓத்து-15, உரை.மே—ப. 70

### வஞ்சிக்குரிய நாலசைச்சீரின் இயல்பு

60. நிரையிறும் நாலசை வஞ்சி யுள்ளால்
விரைவினும் நேரீற் றல்லவை இயலா
யா. வி. சீர்ஓத்து-15. உரை. மே—ப. 70

### ஆசிரியத் துறையுள் வஞ்சிஉரிச்சீர் வருமாறு

61. நேர்நடு வியலா வஞ்சி உரிச்சீர்
ஆசிரி யத்தியல் உண்மையும் உடைய
யா. வி. சீரோத்து-16, உரை. மே—ப. 84

### தளை

62. ஈரசை யியற்சீ ரொன்றிய தியல்பே
யா. வி. தளை ஓத்து—21, ப. 95

## பாவிற்குரிய அடிகள்

63. இரண்டினும் மூன்றினும் வஞ்சி ஆகும்
நாற்சீர் அடியாற் பாப்பிற மூன்றே*
யா. வி. அடி ஒத்து—27, உரை. மே—ப. 118

## பாவினங்களுக்கு அடிவரையறை

64. எல்லா அடியினும் இனப்பா; நாற்சீர்
அல்லா மேலடிப் பாவினுக் கியலா
யா. வி. அடி ஒத்து-27-உரை. மே—ப. 119

## பாவிற்குரிய அடியெல்லை

65. ஒன்றும் இரண்டும் மூன்றும் நான்கும்
என்றிம் முறையே பாவின் சிறுமை
தத்தங் குறிப்பின தொடையின் பெருமை
யா. வி. அடி ஒத்து-32, உரை. மே—ப. 132

## மேற்கதுவாய்-கீழ்க்கதுவாய்த் தொடைகள்

66. கடையயல் முதலயல் கதுவாய் கீழ்மேல்
யா. கா. 19. ப. 56

## ஒரூஉத் தொடை

67. ஒரூஉத் தொடை
இருசீர் இடைவிடில் என்மனூர் புலவர்
யா. வி. தொடை ஒத்து 44 உரை. மே—ப. 175

## அளபெடைத் தொடை

68. அளபெழின் மாறல தொடுப்பது அளபெடை
யா. வி. 169

## முரண் தொடை

69. மறுதலை உரைப்பினும் பகைத்தொடை ஆகும்
யா. கா. 40. ப. 158, யா. வி. 38. ப. 158

## செந் தொடை

70. மாறல தொவ்வா மரபின செந்தொடை
யா. வி. தொடை ஒத்து 48, உரை. மே—ப. 188

* 'பாப்பிற' என்பது வெண்பா ஆசிரியப்பா, கலிப்பா ஆகியவற்றைக் குறிக்கும் போலும்.

## இரட்டைத் தொடை

71. ஒருசீ ரடிமுழு தாயி னிரட்டை

யா. வி. தொடை ஓத்து 51, உரை. மே—ப. 190

## ஒரே பாவில் தொடைபல, தளைபல வரல்

72. மயங்கிய தொடைமுதல் வந்ததன் பெயரால்
இயங்கினும் தளைவகை இன்னணம் ஆகும்

யா. வி. தொடை ஓத்து 53, உரை. மே—ப. 197

## வெண்பா

73. ஏந்திசைச் செப்பல் இசையன வாகி
வேண்டிய உறுப்பின வெண்பா வாகும்

யா. வி. செய்யுளியல்-சூ-57, உரை. மே—ப. 225

## வெண்பாவின் கடைசி அடியும், கடைச்சீரும்

74. முச்சீர் அடியான் இறுதலும், நேர்நிரை
அச்சீர் இயல்பின் அசையின் இறுதியாம்

யா. வி. செய்யுளியல்-சூ. 57, உரை. மே—ப. 225

## நேரிசை வெண்பா

75. குறட்பா இரண்டவை நால்வகைத் தொடையாய்
முதற்பாத் தனிச்சொலின் அடிமூய், இருவகை
விகற்பின் நடத்தல் நேரிசை வெண்பா

யா. கா-23 மேற்., யா. வி-செய்யுளியல்-சூ-60, மேற். ப. 248

## குறள் வெண்பா, வெண் செந்துறை

76. ஈரடி இயைந்தது குறள்வெண் பாவே
ஒத்த அடித்தே செந்துறை வெள்ளை

யா. வி. செய்யு-வெண்பாவும் அதன் வகையும்
சூ-59, உரை. மே—ப. 238, சூ-63, உரை. மே—ப. 325

## பஃறொடை வெண்பா

77. தொடை மிகத் தொடுப்பது பஃறொடை வெண்பா

யா. வி. செய்யு-சூ-62, ப. 250

## வெண்பாவின் இனங்கள் :— தாழிசை, துறை, விருத்தம்

78. வெண்பாத் தாழிசை வெண்டுறை விருத்தமென்
றிந்நான் கல்ல முந்நான் கென்ப
யா. வி. செய்யுளியல்-வெண்பாவும் அதன் வகையும்-சூ-56,
உரை. மே—ப. 221

### வெள்ளொத்தாழிசை

79. அடிமூன் ருகி வெண்பாப் போல
இறுவ தாயின் வெள்ளொத் தாழிசை
யா. வி. சூ-66, ப. 258

### வெண்டுறை

80. ஐந்தா றடியின் நடந்தவும் அந்தடி
ஒன்றும் இரண்டும் ஒழிசீர்ப் படுநவும்
வெண்டுறை நாமம் விதிக்கப் படுமே
யா. வி. 67. மே—ப. 268

### வெளி விருத்தம்

81. மூன்று நான்கடி தோறும் தனிச்சொல்
கொளீஇய எல்லாம் வெளிவிருத் தம்மே
யா. வி. 68. மே—ப. 263

### ஆசிரியப்பா

82. தன்பால் உறுப்புத் தழுவிய மெல்லிய
இன்பா அகவல் இசையதை இன்னுயிர்க்
கன்பா அறைந்த ஆசிரியம் என்ப யா. வி. 69. மே—ப. 267

### ஆசிரியப்பாவின் ஈறு

83. ஏயெனச் சொல்லின் ஆசிரியம் இறுமே
ஓ ஆய் என ஒரோவழி ஆகும் யா. வி. 69. மே—ப. 267

84. என்னென் சொல்லும் பிறவும் ஒன்றித்
துன்னவும் பெறூஉம் நிலைமண் டிலமே
யா. வி. 69. மே—ப. 267

### நேரிசை ஆசிரியப்பா

85. இற்றதன் மேலடி ஒருசீர் குறைய
நிற்பது நேரிசை ஆசிரி யம்மே
யா. வி. 71. மே—ப. 270 : பாடம் : ஈற்றதன்

## இணைக்குறள் ஆசிரியப்பா

86. இடைபல குறைவது இணைக்குற ளாகும்

யா. வி. 72. மே—ப. 272

## அடிமறி மண்டில ஆசிரியப்பா

87. கொண்ட அடிமுத லாயொத் திறுவது
மண்டிலம் ஒத்திறின் நிலைமண் டிலமே

யா. வி. 73. மே—ப. 274

## நிலை மண்டில ஆசிரியப்பா

88. ஒத்த அடித்தாய் உலையா மண்டிலம்
என்னென் கிளவியை ஈறு கப்பெறும்
அன்ன பிறவுமந் நிலைமண் டிலமே

யா. வி. 74. மே—ப. 276

## ஆசிரியத் துறை

89. நாற்சீர் அடிநான் கந்தத்தொடை நடந்தவும்*
ஐஞ்சீர் அடிநடந் துறழஅடி குறைந்தவும்
அறுசீர் எழுசீர் அவ்வியல் நடந்தவும்
எண்சீர் நாலடி ஈற்றயல் குறைந்தும்
தன்சீர்ப் பாதியின் அடிமுடி வுடைத்தாய்
அந்தத் தொடையின் அவ்வடி நடப்பிற்
குறையா உறுப்பினது துறையெனப் படுமே.

யா. வி. 76. மே—ப. 283

## ஆசிரிய விருத்தம்

90. அறுசீர் எழுசீர் அடிமிக நின்றவும்
குறைவில் நான்கடி விருத்தம் ஆகும்

யா. வி. 77. மே—ப. 288

## கலிப்பாவின் வகை

91. ஒத்தா ழிசைக்கலி வெண்கலி கொச்சகமென
முத்திறத் தான்வரும் கலிப்பா என்ப

யா. வி. 79. மே—ப. 293

*பா. பே: அடி நான்ககத் தொடை மயிலை. சீனி. வேங்கடசாமி, மறைந்து போன தமிழ் நூல்கள் ப. 24.

## கலிப்பாவின் ஓசை

92. ஆய்ந்த உறுப்பின் அகவுதல் இன்றி
ஏந்திய துள்ளல் இசையது கலியே
யா. வி. 78. மே—ப. 291

## நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா

93. விட்டிசை முதற்பாத் தரவடி ஒத்தாங்
கொட்டிய மூன்றிடைத் தாழிசை அதன்பின்
மிக்கதோர் சொல்லாம் தனிநிலை சுரிதகம்
ஆசிரி யத்தொடு வெள்ளையின் இறுதலென்
ளூதினர் ஒத்தா ழிசைக்கலிக் குறுப்பே
யா. வி. 82. மே—ப. 300

## அம்போதரங்க ஒத்தாழிசைக்கலி

94. உரைத்த உறுப்பொடு தாழிசைப் பின்னர்
நிரைத்த அடியால் நீர்த்திரை போல
அசையடி பெறினவை அம்போ தரங்கம்
யா. வி. 83. மே. ப. 063

## வண்ணக ஒத்தாழிசைக்கலிப்பா

95. குறில்வயின் நிரையசை கூடிய அடிபெறினே
வண்ணக மாகும்*
யா. வி. மயிலை. சீனி. வே. ம. த. நூ. மே. 56, ப. 25

## கொச்சகக் கலிப்பா

96, ஈற்றடி மிக்கன வொத்தன வாகிப்
பலவும் சிலவும் அடியாய் வரினே
கலிப்பா இனத்துத் தாழிசை ஆகும்
யா. வி. மே.87. ப. 349

## அவிநயனார் காட்டும் தரவு கொச்சகப் பாட்டு

கோழியுங் கூவின குக்கில் குரல் காட்டுந்**
தாழியுள் நீலத் தடங்கணீர் போதுமினோ
ஆழிசூழ் வையத் தறிவ னடியேத்திக்
கூழை நனையக் குடைந்தும் குளிர்புனல்
ஊழியு மன்னுவா மென்றேலா ரெம்பாவாய்
யா. கா. 43. ப். 92

* பாடபேதம் 'குறில்வயின் நிரையசை கூட்டிய வாரா தடியவன் பெறினே. வண்ணக மாகும்' புலவர். இளங்குமரனார் பதிப்பு யா. வி. 324 தவறுடையது

** இலக்கணம் எழுதி உரிய எடுத்துக்காட்டைப் புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியரையும், யாப்புநூல் எழுதிய கையனாரையும் போல இவரும் நல்கினார்.

### வெண்கலிப்பா

97. கலியொலி கொண்டு தன்றளை விரவா
இறுமடி வரினே வெண்கலி ஆகும்

யா. வி. 85. மே. ப. 325

### கலித்துறை

98. ஐஞ்சீர் நான்கடி கலித்துறை யாகும்

யா. வி. 89. மே.ப. 350

### கலிவிருத்தம்

99. நாற்சீர் நாலடி வருவ தாயின்
ஒலியின் இயைந்த கலிவிருத் தம்மே

யா. வி. 89. மே. ப. 351

### வஞ்சிப்பா

100. தூங்கல் இசையால் தனிச்சொற் சுரிதகம்
தான்பெறும் அடிதளை தழீஇவரை வின்றாய்
எஞ்சா வகையது வஞ்சிப் பாவே

யா. வி. 90. மே. ப. 357

### வஞ்சித்தாழிசையும் வஞ்சித்துறையும்

101. இருசீர் நாலடி மூன்றிணைந் திறுவது
வஞ்சித் தாழிசை ; தனிவரின் துறையே

யா. வி. 91. மே. ப. 360

### யாப்பு—புறனடை

102. ஒத்த அடியினும் ஒவ்வா விகற்பினும்
மிக்கடி வரினும் அப்பாற் படுமே

யா. வி. 93. ப. 368, வீரசோழியம், சொல். வேற்றுமைப்படலம், 6

### எழுத்துக் குற்றம்

103. முன்னிலை நெடிலு மாவு மாவும்
னம்மிகப் புணரு மியங்குதிணை யான

யா. வி. 95. மே. ப. 422, யா. கா. 44

### வகையுளி

104. எழுத்தல் கிளவியின் அசையொடு சீர்நிறைத்
தொழுக்கலும் அடியொடு தளைசிதை யாமை
வழுக்கில் வகையுளி சேர்த்தலும் உரித்தே

யா. வி. ஒழிபியல். 95. மே. ப. 397, 428

## தனிச்சொல் நிற்குமிடம்

105. தனியே அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொல், அஃதிறுதியும் வஞ்சியுள் நடக்கும் என்ப.

யா. வி. 94. மே. ப. 374,
பா. பே. இயலும் : யா. வி. ஒழிபியல் 95. மே. ப. 434

## பொருள்கோள்

106. நிரனிறை, சுண்ணம், அடிமறி மொழிமாற்று, அடிமொழி மாற்று என்னும் இந் நான்கினேடும், பூட்டுவில், புனல்யாறு, தாப் பிசை, அளைமறிபாப்பு, கொண்டுகூட்டு என்னும் இவ்வைந்து செய்யுட் பொருள்கோளும் உறழ இருபதாம். அவை வந்த வழிக் கண்டு கொள்க. இருபது வகையானும் காட்டினுர் அவிநயனுர் எனக் கொள்க. யா. வி. 95. ப. 393

## நூறு வண்ணங்கள்

107. அவிநயனுர், தூங்கிசை வண்ணம், ஏந்திசை வண்ணம், அடுக்கிசை வண்ணம், பிரிந்திசை வண்ணம், மயங்கிசை வண்ணம், என்ற **இவ்வைந்தினையும்;** அகவல் வண்ணம், ஒழுகிசை வண்ணம், வல்லிசை வண்ணம், மெல்லிசை வண்ணம் என்ற **இந் நான்கினையும்** குற்றெழுத்து வண்ணம், நெட்டெழுத்து வண்ணம், வல்லெழுத்து வண்ணம், மெல்லெழுத்து வண்ணம் இடையெழுத்து வண்ணம் என்ற **இவ்வைந்தினையும்** கூட்டி உறழ நூறு வண்ணம் பிறக்கும் என்ருர். யா. வி. 95. ப. 411

## வண்ணம்

108. தத்தம் பாவினத் தொப்பினுங் குறையினும்
ஒன்ருென்று ஒவ்வா வேற்றுமை வகையாற்
பாத்தம் வண்ணம் ஏலா வாகிற்
பண்போல் விகற்பம் பாவினத் தாகும்* யா. கா. 13

* காரிகை உரைகளில் இந் நூற்பா கையனுர் இயற்றியது என்று காட்டியிருப்பது சரியன்று.

# அவிநயப் புறனடை

அவிநயனுரால், 'அவிநயப் புறனடை' என்ற பிறிதொரு நூல் இயற்றப் பட்டதாகத் தெரிகிறது. இந் நூல், அவிநயர் எழுதிய அவிநய யாப்பிற்குப் புறனடையாகச் செய்யப்பட்டது. இச்செய்தி யாப்பருங்கலக் காரிகைக்கு உரையாசிரியர் எழுதிய பாயிர உரையால் தெரிய வருகிறது. யாப்பருங்கலக் காரிகை என்னும் நூல், யாப்பருங்கலம் என்ற நூலின் புறனடை நூலாகும். இரண்டு நூல்களின் ஆசிரியரும் அமுதசாகரரே. இச் செய்தியை விளக்க வந்த யாப்பருங்கலக் காரிகை உரையாசிரியர் **"அவிநயர் யாப்பிற்கு நாலடி நாற்பதும் போல யாப்பருங்கலம் என்னும் யாப்பிற்கு அங்கமாய் அலங்காரம் உடைத்தாகச் செய்யப்பட்டமையால் யாப்பருங்கலக் காரிகை என்னும் பெயர்த்து"** என்றெழுதுகிருர்.[1] இந்நூலினின்று வெண்பாவின் ஒரு பகுதியை மயிலைநாதர் எடுத்துக்காட்டி, **'என்பது அவிநயப் புறனடை'** என்று குறிப்பிடுவதும் இந்நூலின் பெயரை வற்புறுத்துகின்றது.[2]

**வெண்பாவினுல் ஆன நூல்:** இவ்விலக்கண நூல் வெண்பாக்களால் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும். இது, மயிலைநாதர் எடுத்துக் காட்டும் வெண்பாச் சூத்திரங்களால் விளக்கமாகிறது. அவ் வெண்பாக்கள் நான்கு வரிகளால் இயற்றப்பட்டிருத்தல் வேண்டும். இது, யாப்பருங்கல விருத்தி உரைகாரர், அவிநய வெண்பாக்களை எடுத்துக் காட்டி 'நாலடி நாற்பது உடையார் கூறியது' என்பதனுலும், 'நாலடி நாற்பது எழுத்துப் புறனடை,' 'நாலடி நாற்பது அசைப் புறனடை' என்று குறிப்பதாலும் தெரிய வருகிறது.[3] நாலடி என்பது பெரும்பாலும் வெண்பாக்களையே குறிக்கும். வெண்பாவினுல் ஆன நூலை நாலடியார் என்றும் நாலடி நாற்பது என்றும் குறித்தல் காண்க.

**நாலடி நாற்பது:** இந்நாலுக்கு 'நாலடி நாற்பது' என்பது ஒரு பெயர் என்பது யாப்பருங்கல விருத்தியினுல் அறியப்படுகிறது.

1. யாப்பருங்கலக் காரிகை உரை. பாயிரம். 1.
2. நன்னூல் மயிலை நாதர் உரை. 127.
3. யாப்பருங்கல விருத்தி. சூ. கழகப்பதிப்பு ப. 30, 31.

அவர் இரண்டிடங்களில் 'நாலடி நாற்பது' என்றும், ஓரிடத்தில் நாலடி நாற்பது உடையார்' என்றும் குறித்தல் இதனைக் காட்டுகிறது.[4] யாப்பருங்கலக் காரிகை உரையாசிரியரும், **'அவிநயனார் யாப்பிற்கு நாலடி நாற்பது ஒரு புறனடை'** எனக் குறிப்பதும் இதனை வற்புறுத்தும்.[5]

**குறள் வெண்பாக்கள் :** மயிலைநாதர் எடுத்துக்காட்டும் அவிநயப் புனறடைப்பாக்கள் குறள் வெண்பாக்களாக இருக்கின்றன. இவை அவிநயப் புறனடை, நாலடி வெண்பாக்களால் ஆனது என்பதற்கு முரணாக இருக்கின்றன. ஆய்ந்து பார்த்தால் இம்முரண் விலகி விடும். மயிலைநாதர் காட்டுவன குறள் வெண்பாக்கள் அல்ல; வெண்பாவின் பகுதிகள். இவ்வாறு தன் தேவைக்குத் தக, பாவின் முன் பகுதியையோ பின் பகுதியையோ, ஒரு சிறு பகுதியையோ காட்டுதல், உரையாசிரியர் கையாளும் மரபு ஆகும்.

**வெண்பாவில் இலக்கணம் :** இலக்கணங்கள் பெரும்பாலும் ஆசிரியத்தாலேயே எழுதப் பெறும். வெண்பாவில் எழுதப் படுதல் சங்க காலத்திற்குப் பின் வந்த மரபாதல் வேண்டும். இந் நிலையில், நேமிநாதத்திற்கு முன்பாக, வெண்பாவில், எழுதப் பட்ட இலக்கண நூல், அவிநயப் புறனடையே என்பது தெளிவாகிறது. **வெண்பாவிலும் இலக்கணம் எழுத முடியும் என்பதை முதலில் நிறுவிக் காட்டியவர் சைனராகிய அவிநயனாரே என்பதும், இந்நூலால் புலனாகின்றது. ஆசிரியப் பாவினால் தன்னால் இலக்கணம் இயற்ற முடியும் என்பதை ஏனைய இலக்கண நூல்கள் மூலமாகவும், வெண்பாவினால் இலக்கணம் எழுத முடியும் என்பதை இந்நூல் மூலமாகவும் அவிநயனார் நிறுவி இருக்கிறார்.**

**அவிநயப்புறனடை பதிப்பு முறை :** யாப்பருங்கல விருத்தி, நன்னூல் மயிலைநாதர் உரை ஆகியவற்றினின்று, அவிநயப் புறனடை வெண்பாக்கள் திரட்டப்பட்டு, ஒவ்வொன்றிற்கும் தலைப்பிடப் பட்டுத் தரப்படுகிறது.

1, 2, 5, 8 என்ற எண்களாக உள்ள வெண்பாக்கள் நேமிநாத உரையினின்று எடுக்கப் பெற்றன. இவை பெரும்பாலும் அவிநயப் புறனடையைச் சார்ந்தன வாதல் வேண்டும். காரணம், 'அவிநயப்

4. யாப்பருங்கல விருத்தி, கழகப்பதிப்பு, ப, 30, 31.

5. யாப்பருங்கலக் காரிகை_பாயிர உரை.

பதிப்பு முறை' என்ற தலைப்பில் விரிவாக விளக்கப்பட்டிருக்கிறது. 'நாலசைச்சீர்' எனத் தொடங்கும், யாப்பருங்கல விருத்தி மேற்கோள் (சீரோத்து 15, உரை) வெண்பா ஒன்றை அவிநயப் புறனடையைச் சார்ந்ததாகக் காட்டுவார் அறிஞர்.[6] இவ்வாசிரியனால் அவ்வெண்பா அவ்வாறு கொள்ளப்படவில்லை. அவ்வெண்பா, யாப்பருங்கல ஆசிரியர் அமுதசாகரராலேயே எழுதப்பட்டிருத்தல் வேண்டும். **'அமுதசாகரம்'** எனும் தலைப்பில் இவ்வாசிரியனால் பதிப்பிக்கப்பட்ட நூலில் காண்க.

6. வேங்கடசாமி. மயிலை. சீனி. மறைந்து போன தமிழ் நூல்கள், 1967, ப. 259, 60.

# அவிநயப் புறனடை

## சிறப்புப்பாயிரம்

109. வணக்கம் அதிகாரம் என்றிரண்டும் சொல்லச்
சிறப்பென்னும் பாயிரம் ஆம் நே. எ. பாயிரம். 3

## முதல் வைப்பு எழுத்துகள்

110. அகரம் முதலாக ஆய்தம் இடையாக
னகரம்ஈ ருகுமுதல் வைப்பு நே. எ. 1

## அசைக்கு உறுப்பாகும் எழுத்துகள்

111. குறில்நெடில் ஆய்தம் அளபெடைஐ காரக்
குறில்குற் றிகரம் உகரம்—மறுவில்
உயிர்மெய் விராய்மெய்யொ(டு) ஆறுறு எழுத்தாம்
செயிர்வன்மை மென்மை சமன்.* யா. வி. 2. மே—ப. 30

## அசைக்கு உறுப்பாகும் எழுத்துகள் 16

112. குறிலுயிர் வல்லெழுத்துக் குற்றுகர ஆதி
குறுகிய ஐஔமவ் வாய்தம்—நெறிமையால்
ஆய்ந்த அசைதொடைதாம் வண்ணங்கட்கெண்
முறையால்
ஏய்ந்தன நானுன் கெழுத்து யா. வி. 2. மே—ப, 31

## ஐகாரக்குறுக்கத்தின் மாத்திரை அளவு ஒன்றே

113. குறுமை எழுத்தின் அளவேஐ கார
நெடுமையின் நீங்கியக் கால் நே. எ. 5

## தமிழ்ச்சிறப்பெழுத்துகள்

114. றனழஎ ஒவ்வுந் தனியு மகாரமும்
தன்மைத் தமிழ்பொது மற்று** நன். மயிலை. 149

## சொல்

115. தன்னை உணர்த்தின் எழுத்தாம் பிறபொருளைச்
சுட்டுதற் கண்ணேயாம் சொல் நன். மயிலை. 27

* என்பது நாலடி நாற்பது எழுத்துப் புறனடை என்பர்.

** பாடபேதம்: றனஎ ஒவ்வும் தனியும் மகாரமுந்
தன்மைத் தமிழ்பொது மற்று.

### வழுக்களின் தொகை

116. திணைபால் மரபு வினாச்செப்புக் காலம்
இடனொ(டு) ஏழ் ஆகும் இழுக்கு — நே. சொ. 2

### நால்வகைப் பாக்களின் மயக்கம்

117. ஆசிரியப் பாவின் அயற்பா அடிமயங்கும்
ஆசிரியம் வெண்பாக் கலிக்கணும்—ஆசிரியம்
வெண்பாக் கலிவிரவும்; வஞ்சிக்கண் வெண்பாவின்
ஒண்பா அடிவிரவா உற்று — யா. வி. 31. மே—ப. 291

### தளைமயக்கம்

118. சீர்வண்ணம் வெள்ளைக் கலிவிரவும்; வஞ்சியுள்
ஊரும் கலிப்பாச் சிறுச்சிறிதே—பாவினும்
வெண்பா ஒழித்துத் தளைவிரவும்; செய்யுளாம்
வெண்பாக் கலியுட் புகும்.
யா. வி. 31. மே—ப. 129

### உண்டி

119. உணவே அமுதம் விடமு மாகும்
பன்னிருபாட்டியல், கழகப் பதிப்பு 19—14. ப. 10

### மங்கலப்பாக்கள்

120. வெள்ளை அகவல் விருத்தம் கலியே
வஞ்சி என்றிவை மங்கலப் பாவே
பன். பா. 98—74. ப. 42

### உலா

121. காட்டிய முறையே நாட்டிய ஆண்பாற்கு
எல்லையும் பொருளும் இயல்புற ஆய்ந்து
சொல்லிய தொன்னெறிப் புலவரும் உளரே*
பன். பா. 135—94. ப. 71

* பெண்பாற்குப் பேதை முதல் பேரிளம் பெண் ஈறாக ஏழு பருவங்கள் கூறப் பெறுதலைப் போல, ஆண்பாற்கும் ஏழு பருவங்கள் உள்ளன.

(1) பாலன்—வயது 1-7 (2) மீளி—வயது 8-10 (3) மறவோன்—வயது 11-14 (4) திறலோன்-வயது 15 (5)காளை. 16 (6) விடலை. 17-30 (7) முதுமகன் 30க்கு மேல்

## அவிநயனார் பாட்டியல்

### பாலன்

122. பாலன் யாண்டே ஏழெ‌ன மொழிப பன். பா. 135–95. ப. 71

### மீளி

123. மீளி யாண்டே பத்தியை காறும்
பன். பா. 135-96. ப. 71

### மறவன்

124. மறவோன் யாண்டே பதினான் காகும்
பன். பா. 135-97. ப. 78

### திறலன்

125. திறலோன் யாண்டே பதினைந்தாகும்
பன். பா. 135-98. ப. 71

### காளை

126. பதினா றெல்லை காளைக் கியாண்டே
பன். பா. 135-99. ப. 71

### விடலை

127. அத்திறம் இறந்த முப்பதின் காறும்
விடலைக் காகும் பன். பா. 135-100. ப. 71

### முதுமகன்

128. அத்திறம் இறந்த முப்பதின் காறும்
விடலைக் காகும் மிகினே முதுமகன்
பன். பா. 135–100. ப. 71

### வாதில் வெல்லும் வழி

129. தூக்கியல் வகை ஓலையைச்
செவித்திறம் கொள்ளாது தெரியுங் காலைத்
தானே நம்பி மகனே மாணி
ஆசான் என்று அவரில் ஒருவர் இழுக்கிலை
குற்றம் வகுத்துடன் படாமல் சொல்லின்
வென்றியும் பெறுமே.

நவநீதப் பாட்டியல், பொதுமொழியியல், 96

## அவை புகும் நெறி

130. அவைபுகும் நெறியே ஆயுங் காலை
வாயினில் உரைத்துக் கூடிப் புகுங் காலை
இருவரும் புகாஅர் ஒருவர் முன்புகின்
புக்கவன் தொலையும் உய்த்தெனும் உண்மையின்
இருவருங் கூடி ஒருங்குடன் பட்ட
தெரிவுடன் உணர்ந்தோர் செப்பினர் என்ப*

நவநீதப் பாட்டியல் உரை, பொதுமொழியியல், 96

* இறுதி இரண்டையும் அவிநயனுர் கலாவியல் என்பர் நவநீதப் பாட்டியல் உரைகாரர்.

## அவிநயனூர் புறத்திணைப் படலம்

**பன்னிரு படலம் :** புறப்பொருள் வெண்பாமாலைக்கு (கி. பி. 8) முன் இந் நூலே பெருக வழங்கியது. புறத்திணைகள், (1) வெட்சி, (2) வஞ்சி, (3) உழிஞை, (4) தும்பை, (5) வாகை, (6) காஞ்சி, (7) பாடாண் என்று ஏழு என்பர். இதுவே தொல் காப்பிய முறை. இதற்கு மறுதலையாகப் புறத்திணை பன்னிரண்டு என்ற கோட்பாடும் பழங்காலத்தில் இருந்தது.

| | | | |
|---|---|---|---|
| 1. | வெட்சி | நிரைகவர்தல் | தொல்காப்பியர் |
| 2. | கரந்தை | நிரை மீட்டல் | அதங்கோட்டாசான் |
| 3. | வஞ்சி | படை எடுத்தல் | பனம்பாரனூர் |
| 4. | காஞ்சி | நிலையாமை, படையைத்தடுத்தல் | அவிநயனூர் |
| 5. | நொச்சி | மதிலைக் காத்தல் | காக்கை பாடினியார் |
| 6. | உழிஞை | மதிலை முற்றுதல் | நற்புத்தனூர் |
| 7. | தும்பை | எதிர்நின்று பொரல் | துராலிங்கர் |
| 8. | வாகை | வெற்றி கூறல் | வையாபிகன் |
| 9. | பாடாண் | புகழ்ச்சி கூறல் | வாய்ப்பியன் |
| 10. | பொதுவியல் | எஞ்சியவை | கழாராம்பன் |
| 11. | கைக்கிளை | ஒருதலைக்காமம் | செம்பூண் சேய் |
| 12. | பெருந்திணை | ஒவ்வாக்காமம் | வாமனன். |

இப்பன்னிரண்டையும் அகத்தியரின் மாணுக்கர் பன்னிருவரும் எழுதினர் என்று தெரிகிறது. அப்பன்னிருவரில் தொல்காப்பியர் முதலாமவர். வாமனர் இறுதியில் இடம் பெறுபவர். இவ்வரிசை யிலேயே இந்நூல் அமைந்திருத்தல் வேண்டும் என்று கருத இடமுண்டு. பன்னிரு மாணுக்கர்க்கும் தலைவர் தொல்காப்பியர் ஆவார். இது,

அலைகடல் அடக்கி மலையத்து இருந்த
இருந்தவன் தன்பால் இயற்றமிழ் உணர்ந்த
புலவர்பன் னிருவருள் தலைவ னுகிய
தொல் காப்பியன்

என்று அகப் பொருள் விளக்கப் பாயிரம் குறிப்பிடுவதால் உறுதியா கிறது.

நிலையாமையை வற்புறுத்துவதே காஞ்சித் திணையின் நோக்க மாகும்.

காஞ்சி தானே பெருந்திணைப் புறனே
பாங்கருஞ் சிறப்பின் பல்லாற் றானும்
நில்லா உலகம் புல்லிய நெறித்தே

என்பது தொல்காப்பியம் (புறத்திணை இயல் 18). சங்க இலக்கியங் களுள் காஞ்சி என்ற பெயர் இணைப்புள்ள 'மதுரைக் காஞ்சி' என்ற பத்துப்பாட்டு இலக்கியமும், நிலையாமையை வற்புறுத்துகிறது. ஆதலின் காஞ்சி என்பதே நிலையாமை. இதுவே பழந்தமிழர் கொள்கை. நிலையாமைக் கொள்கையைப் பெரிதும் போற்றுபவர் சைனர். அவிநயனார் சைனர். ஆதலால், பன்னிரு படலத்தில் இடம் பெற்றிருந்ததாகக் கருதப்படும் காஞ்சிப் படலத்தை அவரே படைத்திருத்தல் கூடும்.

**பன்னிரு படலமும் பன்னிருவரும் :** பன்னிரு படலம் என்ற நூல் முன்பு இருந்தது என்ற உண்மை, உரைகளால் தெரிய வருகிறது. இறையனார் அகப்பொருள் உரை 'அளவினால் பெயர் பெற்றது பன்னிரு படலம் என்று குறிப்பிடுகிறது.[1] தொல்காப்பிய இளம்பூரணம் 'ஒத்தினாற் பிண்டமாயிற்று' என்று கூறுகிறது.[2] அது, புறத்திணை பன்னிரண்டு என்று கூறும் பன்னிருபடல முறையை மறுத்து மொழிகிறது.[3] தொல்காப்பியர், பன்னிருபடலத்தின் முதல் படலமான வெட்சிப் படலத்தை இயற்றவில்லை எனப் பிறிதோர் இடத் தில் அது மறுக்கிறது.[4] அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கம் என்ற நூற்பா விளக்கவுரையில், பன்னிரு படல நூற்பாவையும் இளம் பூரணம் எடுத்துக் காட்டுகிறது.

பன்னிருபடலத்தில் முதற் படலமாகிய வெட்சிப் படலத்தைப் பன்னிருவரில் முதலாமவராகிய தொல்காப்பியர் இயற்றினார். இச் செய்தி இளம்பூரணர், தொல்காப்பியப் புறத்திணை இயல் இரண்டாம் நூற்பாவிற்கு எழுதும் உரையால் புலனாகிறது.

'பன்னிரு படலத்துள் 'தன்னுறு தொழிலே வேந்துறு தொழில் என்று அன்ன இருவகைத்தே வெட்சி' என இரண்டு கூறுபடக்

1. இறையனார் களவியல் உரை.
2. தொல். பொருள். செய்யுளியல். 165.
3. தொல். பொருள். புறத்திணை இயல் முன்னுரை.
4. தொல். பொருள். புறத்திணையியல் 2.

தொல். பொருள். புறத்திணையியல் 74. கழகப்பதிப்பு. ப. 114.

கூறினாராயினும், முன் வருகின்ற வஞ்சி, உழிஞை, தும்பை முதலாயின எடுத்துச்செலவு, எயில்காத்தல், போர் செய்தல் என்பன அரசர் மேல் இயன்று வருதலின், வேந்துறு தொழில் ஒழித்து, தன்னுறு தொழில் எனத் தன் நாட்டும் பிறர் நாட்டும் களவின் ஆன்நிரை கோடலின் இவர் அரசரது ஆணையை நீங்கினாராவார். ஆதலால் அவர் அவ்வாறு கூறல் மிகைபடக் கூறலாம். அதனால் **பன்னிருபடலத்துள் வெட்சிப் படலம் தொல்காப்பியர்** கூறினாரென்றால் பொருந்தாது' என்று இளம்பூரணர் குறிப்பது, தொல்காப்பியர் பன்னிரு படல ஆசிரியர்களுள் ஒருவர் அல்லர் என்பதைக் காட்டுவதோடு, அவர் காலத்தில், தொல்காப்பியம், பன்னிரு படலத்தின் முதலாவதான வெட்சிப் படலம் செய்தார் என்ற கருத்துப் பரவி நிலை பெற்றிருந்ததையும் காட்டுகிறது. தொல்காப்பியர் வெட்சிப் படலத்தை இயற்றினதாக இருந்தால், முறையே பன்னிருவருள் நான்காமவராக இடம் பெற்றுள்ள அவிநயனார், நான்காவது படலமாகிய காஞ்சிப் படலத்தை எழுதி இருத்தல் வேண்டும்.

**அவிநயனார் காஞ்சிப் படலம் :** இச் செய்தி, அவிநயனாரின் சைன சமயச் சார்பாலும் உறுதியாகிறது. சைன சமயம், நிலையாமையை வற்புறுத்தும் சமயமாகும். சைனர் எழுதிய அற இலக்கியங்கள் அனைத்தும் நிலையாமையைப் பெரிதும் வற்புறுத்துவதால் இதனை உறுதி செய்து கொள்ளலாம். அவிநயனார் எழுத்து, சொல், பொருள் என்ற மூன்றையும் முற்றும் எழுதினவர். எனினும், அவர் எழுதிய அகத்திணை நூற்பாக்கள் கிடைக்கும் அளவிற்குப் புறத்திணை நூற்பாக்கள் கிடைக்கவில்லை. அவர் எழுதின பன்னிரு படல நூலோடு சேர்ந்து அழிந்தது என்று உய்த்திட இடமிருக்கிறது.

நச்சினார்க்கினியர், தமது சீவக சிந்தாமணி உரையிலும், பேராசிரியர் தம் பொருளதிகார மரபியலிலும் பன்னிரு படலத்தைக் காட்டுவர். இதனால், பன்னிரு படலம் என்ற நூல் கி. பி. 12, 14, 15ஆம் நூற்றாண்டு வரை வழங்கி இருக்கிறது என்பது தெளிவாகிறது. அதற்குப் பின்பே அந்நூல் மறைந்து போயிருக்கிறது.

**பன்னிருபடலம் என்ற நூல் உண்மை :** பன்னிரு படலம் இன்றில்லை எனினும் அந்நூலை முற்றும் வழி ஒற்றி வந்த புறப்பொருள் வெண்பாமாலை இன்றும் நின்று நிலவுகிறது. பன்னிரு படலத்தில் பேசப்பட்டது போலவே வெட்சி முதல் பெருந்திணை ஈறாக, பன்னிரண்டு திணைகள் இந்நூலில் பேசப்படுகின்றன. இந்நூல் பன்னிரு படலத்தை முதனூலாகக் கொண்டு செய்யப்பட்ட வழிநூலே. இதனைப் பேராசிரியர் தம் உரையில் தெளிவாகச் சுட்டிக் காட்டுகிறார்,

பன்னிரு படலம் முதல் நூலாக வழிநூல் செய்த வெண்பாமாலை ஐயனாரிதனாரும் இது கூறினார்[5] எனவரும் பேராசிரியர் கூற்று இதனை உறுதி செய்கிறது.

பன்னிரு படலத்தைப் பின்பற்றியே ஐயனாரிதனார் வெண்பாமாலை செய்தார் என்பது, புறப்பொருள் வெண்பாமாலைச் சிறப்புப் பாயிரத்தாலும் தெரிய வருகிறது.

பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த
பன்னிரு படலமும் பழிப்பின் றுணர்ந்தோன்

என்று ஐயனாரிதனாரின் சிறப்பினைப் பாயிரம் தெரிவிக்கின்றது.

நிலைபெற்ற சிறப்பினை உடைய தேவர்கள் வேண்ட தெற்கே உள்ள பொதியமலையின்கண் அகத்திய முனிவரன் வீற்றிருந்தான். அவனிடம், பிறரால் கிட்டுதற் கரிய பெரிய புகழினையுடைய தொல்காப்பியன் என்னும் நல்லாசிரியன் முதலாக, பன்னிரு நல்லிசைப் புலவரும், குளிர்ந்த தமிழ் மொழியினைக் குற்றமின்றிக் கற்றுணர்ந்தனர். இப்பன்னிருவரும் ஒருங்கு சேர்ந்து, புறப்பொருள் இலக்கணம் பற்றி ஒவ்வொருவரும் ஒவ்வொரு படலம் இயற்றினர். அவர்கள் இயற்றிய பன்னிரண்டு படலங்களின் தொகுப்பே பன்னிரு படலம் என்னும் தனிப்பெரும் நூலாயிற்று. இச் செய்தி புறப் பொருள் வெண்பாமாலைப் பாயிரத்தில் பொதிந்து கிடக்கிறது.

மன்னிய சிறப்பின் வானோர் வேண்டத்
தென்மலை இருந்த சீர்சால் முனிவரன்
தன்பால் தண்டமிழ் தாவின் றுணர்ந்த
துன்னருஞ் சீர்த்தித் தொல்காப் பியன் முதல்
பன்னிரு புலவரும் பாங்குறப் பகர்ந்த
பன்னிரு படலம்

ஆகவே பன்னிரு படலம், பன்னிரண்டு புலவர்களால் இயற்றப் பட்டது என்பதும், அவர்கள் அகத்தியரின் மாணாக்கர் என்பதும், அவர்களுள் தொல்காப்பியன் முதலாமவன் என்பதும் மேற்கண்ட பாயிரத்தால் தெளிவாகின்றன.

அன்றியும் பிறிதொரு செய்தியும் இதனால் தெரிய வருகிறது. புறப்பொருள் வெண்பா மாலையின் காலம் கி. பி. 6 ஆம் நூற்றாண்டு என்றும், 7 ஆம் நூற்றாண்டு என்றும்,[6] 8 ஆம் நூற்றாண்டு என்றும்[7],

5. தொல். பொருள். மரபியல், 94.
6. இளவரசு, சோம., இலக்கண வரலாறு. ப. 98.
7. சாமிநாதைய்யர் உ. வே. புறப்பொருள் மாலை, பதிப்பு முகவுரை.

9ஆம் நூற்றுண்டு என்றும்[8] பலவாருகக் கூறுவர். இவற்றுள் கி பி. 8 அல்லது ஒன்பது என்பதே பெரிதும் பொருத்தமுடையது. கி. பி. 8, 9 ஆம், நூற்றுண்டுகளில், எழுதப்பட்ட புறப்பொருள் வெண்பா மாலையில், பன்னிருபடலம் சுட்டப்படுவதால், பன்னிருபடலம், இக் காலத்திற்கு முந்தியது என்பது தெளிவாகிறது. பன்னிரு படல ஆசிரியர்களுள் ஒருவராகிய அவிநயனுரின் காலமும், இக் காலத்திற்கு முந்தி இருத்தல் வேண்டும் என்ருகிறது.

**பன்னிருபடலத்தின் பழமை :** புறப்பொருள் வெண்பா மாலைக்கு முந்தியது பன்னிருபடலம், சிலப்பதிகாரத்தில், நிரை கவர்தல், கரந்தை எனக் குறிக்கப்படுகிறது. ‘கரந்தை அலறக் கவர்ந்த இனநிரை’ (வேட்டுவ வரி. கொடை) என்றும்,

‘பொதியிற் பொருப்பின் பிறர்நாட்டுக் கட்சியும் கரந்தையும்
பாழ்பட வெட்சி சூடுக விறல் வெய்யோனே’ (வேட்டுவ வரி)

என்றும் இளங்கோ, கரந்தையைக் குறிப்பிடுகிருர். இது தொல்காப்பியர்க்கு முரணுன புறத்திணைக் கோட்பாடு.

தொல்காப்பியர், உழிஞைத் திணையில் குடைநாட்கோள், வாள்நாட்கோள் (தொல். புறம். 13) ஆகியவற்றைக் கூறுகிருர். இளங்கோ, அவற்றை வஞ்சித்திணையில் கூறுகிருர். (கால்கோள் 48-45) புறப்பொருள் வெண்பாமாலையிலும் வஞ்சித்திணையிலேயே மேற்கண்டவை இடம் பெற்றுள்ளன. (வஞ்சி. சூ. 1).

தொல்காப்பியர் காஞ்சியை நிலையாமை என, இளங்கோ, ‘பல்வேல் மன்னர் காஞ்சித் தானையொடு காவலன் மலைந்தான்’ (சிலம்பு. கால்கோள். 188-191) என்று கூறியுள்ளார். புறப்பொருள் வெண்பாமாலை கூறும் காஞ்சித் திணை இலக்கணமும் இதனேடு ஒத்து வருகிறது. இவற்ருல், தொல்காப்பியர்க்கு மாருன, புறத்திணைக் கோட்பாடு ஒன்று இளங்கோ காலத்தில் இருந்தது என்பது தெளிவாகிறது. அது புறப்பொருள் வெண்பாமாலைக்கு முற்பட்டது. அது எதுவாக இருத்தல் வேண்டும்? பன்னிருபடலமே என்பது வெள்ளிடை.

**திருக்குறளும் பன்னிருபடலமும் :** திருக்குறள் சிலம்பிற்கு முற்பட்டது. அதனுள்,

கைவேல் களிற்ருெடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும் (774)

8. அருணுசலம். மு. தமிழ் இலக்கிய வரலாறு, 10, நூற். 1972. ப, 111.

என்பது நாழிலாட்டு என்னும் துறையைச் சார்ந்தது. தொல்காப்பியத்தில் நாழில் என்பது குறிக்கப்படினும் இப்பொருளில் குறிக்கப்படவில்லை.

பல்படை ஒருவற்கு உடைதலின் மற்றவன்
ஒள்வாள் வீசிய நூழில்

என்பது தொல்காப்பியம் (புறம் 17). இவ்விலக்கணத்திற்கும், திருக்குறளிற்கும் தொடர்பில்லை. மாருக, புறப்பொருள் வெண்பாமாலை, தும்பைப் படலத்தில் 'நூழில்' எனவும் 'நூழிலாட்டு' எனவும் இரண்டு துறைகள் குறிக்கப்படுகின்றன (தும்பை. 1). அவற்றுள் நூழிலாட்டின் இலக்கணம் பின்வருமாறு குறிக்கப்படுகிறது:

களங்கழுமிய படையிரிய உளம் கழிந்த வேல்
பறிந்து ஓச்சின்று.

இவ்விலக்கணம் மேற்கண்ட குறளோடு முற்றும் பொருந்துகிறது.

கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது (772)

இதனைத் 'தழிஞ்சி' எனும் துறை என்பர். தொல்காப்பியர் தழிஞ்சி என்பதை வேறுவகையில் 'அழிபடை தட்டோர் தழிஞ்சி' (புறத்திணை. 8) என விளக்குவர். மாற்றோர் படையைத் தடுத்துப் போர் செய்து புண்பட்ட வீரரைப் பொருட்கொடை, இன்சொல் முதலியவற்றால் தழுவிக்கொள்க என்பது தொல்காப்பியக் கோட்பாடு. வெண்பாமாலையார், தோற்றோடும் வீரன் முதுகில் வாள் ஓச்சா மரபினன் **தழிஞ்சியான்** என்பர். மேலே காட்டிய குறளுக்கு, வெண்பாமாலை காட்டும் இலக்கணமே பெரிதும் பொருந்துவது. வெண்பாமாலை, பன்னிரு படலத்தின் எதிரொலி. எனவே, திருவள்ளுவருக்கும் பன்னிரு படலமே உடன்பாடு என்றாகிறது.

**புறநானூறும் பன்னிருபடலமும்:** புறநானூறு 260, 261, 263, 264 என்ற எண்ணுடைய பாக்கள் கரந்தைத்திணை என்றும், கையறு நிலைத்துறை என்றும் குறிக்கப்பட்டுள்ளன. தொல்காப்பியத்தில் கரந்தைத் திணையோ, கையறு நிலைத் துறையோ இல்லை. ஆனால் புறப்பொருள் வெண்பாமாலையில் கரந்தைத் திணை தனியாக விரிவாகப் பேசப்பட்டிருக்கிறது

புறநானூறு 271, 272 ஆகியன நொச்சித்திணை என்றும் செருவிடை வீழ்தல் துறை என்றும் குறிக்கப்பட்டுள்ளன. இவை, தொல்காப்பியத்தில் கூறப்பட்டுள்ள (புறம்-9, 10) திணை துறைகளோடு

பொருந்தவில்லை. மாறாகப் புறப்பொருள் வெண்பாமாலையோடு பொருந்தியுள்ளன. இவை போன்று இன்னும் சில திணை துறைகள், தொல்காப்பியப் புறத்திணை யியலோடு பொருந்தி வராமல், புறப் பொருள் வெண்பாமாலையோடு பொருந்தி நிற்கின்றன.

**தொல்காப்பியமும் பன்னிருபடலமும்** தொல்காப்பியர் வெட்சி முதலாகப் பாடாண் ஈறாக ஏழு திணைகளைப் புறத்திணை இயலில் விளக்குகிறார். இவையன்றி வேறிரண்டு திணைகளின் பெயர் களையும் அவர் குறிப்பிடுகிறார்.

> 'அனைக்குரி மரபினது கரந்தை' (புறம். 5)
> 'அகத்தோன் வீழ்ந்த நொச்சி' (புறம். 13)

என்று குறிப்பிடும் இடங்களில், கரந்தை, நொச்சி என்ற சொற்கள் ஆளப்படுகின்றன.

சில பொதுச் செய்திகளை 'வெறியறி சிறப்பு' (புறம் 5) என்ற நூற்பாவில் குறிக்கின்றமையால், பொதுவியல் அவர்க்கு உடன்பாடு என்றாகிறது.

'அகப்புறம்' (அகத்திணை 23) எனக் குறிப்பதால், கைக்கிளை, பெருந்திணை என்பன அகத்திற்குப் புறமாகக் கருதத் தக்கன என்பதும், கைக்கிளை, பெருந்திணை எனத் தனிப்படலங்களாக இடம் பெறுதல் தக்கன என்பதும் அவை தொல்காப்பியர்க்கு உடன்பாடு என்பதும் தெரிய வருகின்றன. எனவே, தொல்காப்பியர்க்கு முன்பே புறத்திணை நூலொன்று வழங்கியது என்று தெரிகிறது.

ஆதலால், புறப்பொருள் வெண்பாமாலைக்கு முதல் நூலும், புறத்திணை பன்னிரண்டு என்று பகுத்தளிப்பதும் ஆகிய பன்னிரு படல நூலே, அப்புறத்திணை நூலாக இருக்கலாம் என்க. எனவே இப்பன்னிரு படல நூற் கொள்கையையே தொல்காப்பியர், ஏழாகத் தொகுத்துரைத்தார் என்க. 'புலம் தொகுத்தோன்' என்று தொல் காப்பியப்பாயிரம் குறிப்பதும் இதனை வலியுறுத்துகிறது என்பர் மறைந்த அறிஞர் மு. அருணாசலம் பிள்ளை.[9] பன்னிரு படலம் தொடர்பான ஆய்வில், இக்கருத்து முதன்மை வாய்ந்தது என்பதால் ஈண்டுக் காட்டப் பெற்றது.

பன்னிருபடலத்தில் அவிநயனார் எத்திணைப் படலத்தை எழுதினார் என்பதை, உறுதி செய்ய இயலாது. ஏதேனும் ஒரு படலத்தை

9. அருணாசலம் பிள்ளை, வித்துவான், மு. புறத்திணை இலக்கண ஆராய்ச்சி, தமிழியல் காட்சிகள். 1968. ப. 5-15.

எழுதினர் என்பது உறுதி. அது காஞ்சித்திணைப் படலமாக இருக்கலாம் என்பது ஓர் ஊகமே. எவ்வாறு ஆயினும் அவிநயனர் ஆய்வில் பன்னிரு படலம் தவிர்க்க முடியாதது. ஆதலால், உரையாசிரியர்கள் பன்னிருபடல நூற்பாக்களாக மேற்கோள் காட்டுவன இங்கே தொகுத்துத் தரப்படுகின்றன. மறைந்து கிடக்கும் ஏட்டுச் சுவடிகள் எல்லாம் அச்சேறுமானல், அவற்றுள் பன்னிருபடலமும் ஒன்ருக இடம் பெறுமானல் பன்னிருபடலம் என்ற மறைந்து விட்ட புற இலக்கணப் புதையல் பல செய்திகளைத் தெளிவு படுத்தும்.

## புறப்பொருள் அறமும் இன்பமும் அகலாதது

1. ஆன்ற சிறப்பின் அறம் பொருள் இன்பமென
மூன்றுவகை நுதலிய நூலக மவற்றுள்
அறமும் இன்பமும் அகலாது ஆகிப்
புறனெனப் படுவது பொருள்குறித் தன்றே

இளம்பூரணர். புறத்திணை. முகப்புரை.

## வெட்சி

2. தன்னுறு தொழிலே வேந்துறு தொழிலென்
றன்ன இருவ கைத்தே வெட்சி — இளம்பூரணர். புறத்திணை. 2

## கரந்தை

3. பல்லாக் கொண்டார் ஒல்லார் என்னும்
பூசல் கேட்டுக் கையது மாற்றி

நச்சினர்க்கினியர்
சீவகசிந்தாமணி, கோவிந்தையார் இலம்பகம். 20

## வெட்சியும், கரந்தையும்

4. வெட்சியும் கரந்தையும் தம்முள் மாறே — யா. வி ப. 571

## வஞ்சியும், காஞ்சியும்

5. வஞ்சியும் காஞ்சியும் தம்முள் மாறே — யா வி. ப. 571

## உழிஞையும், நொச்சியும்

6. உழிஞையும் நொச்சியும் தம்முள் மாறே — யா. வி. ப. 571

## தும்பை

7. பொருதல் தும்பை புணர்வது என்ப — யா. வி. ப. 571

## கணிவன் முல்லை

8. பனியும் வெயிலும் கூதிரும் யாவும்
துனியில் கொள்கையொடு நோன்மை எய்திய
தணிவுற்று அறிந்த கணிவன் முல்லை

இளம்பூரணர். புறத்திணை. 74

## அகத்திணைப் புறம்

9. கைக்கிளை என்று, பெருந்திணை என்றுங்கு
அத்திணை இரண்டும் அகத்திணைப் புறனே

யா. வி. ப. 570

## அகப்புற விரி

10. ஆய்ந்த அகப்புறம் ஐயிரண்டும் ஆயுங்கால்
காந்தள் .......... .......... ..........
அமர்த்த ஈரைந்தும் அகத்தின் புறமே யா. வி. ப. 570

இந்நூற்பாவை ஒட்டி ஒரு நூற்பா வீரசோழிய உரையில் (95) மேற் கோளாகக் காட்டப் பெற்றுள்ளது. அது பன்னிரு படலமாதல் கூடும் என்பதால் ஈண்டுக் கொடுக்கப்படுகிறது.

ஆய்ந்த அகப்புறம் ஐயிரண்டும் ஆயுங்கால்
காந்தள் கலிமடன்மா ஏறுதல்; காமமிக்
காய்ந்தவர் வள்ளி வெறியாட்டம்; வாய்ந்த
சுரநடை மாதர் வருத்தம்; சுரனுள்
முதுபாலை தன்னை மொழியின் மதுமலர்த்தார்க்
காவலன் வீயக் கவன்ற ததுவாகும்:
பாசறை முல்லை தலைமகன் பாசறைக்குள்
மாசறு மாதரை உள்ளுதல்; மாசற்ற
இல்லவள் முல்லையும் அஃதேயாம்; சொல்லுங்கால்
குற்றிடை கோல்வளை யானைத் தலைமகன்
முற்றத் துறந்த துறவாம்; குறுங்கலி
முற்றத் துறந்த தலைமகனை முன்னின்று
பொற்றொடி மாதர் பழிதூற்றும்; குற்றந்தீர்
தாபதம் காதல் தலைமகனை நீங்கிய
மேவரு மாதர் நிலையாகும்; மேவருஞ்சீர்
நீக்கப்பட் டாளை உவந்த தலைமகன்
பார்த்துறாஉம் தன்மை அதுவாம் தபுதாரம்
பத்தும் அகத்தின் புறம்

வீரசோழிய உரை. மேற். 49

## பெருந்திணை

11. அகத்திணை மருங்கின் அளவு மயங்கி
விதப்ப மற்றவை வேறு வேண்டி
வஞ்சி அடியின் யாத்தனர் புலவர்
அகத்திணை மருங்கின் அணையும் ஆறே யா. வி. ப. 128

———

# இராச பவித்திரப் பல்லவ தரையன் எழுதிய அவிநய உரைபற்றிய ஆய்வு

உரையை நூலாசிரியனைத் தவிர்த்துப் பிறர் எழுதுவதே மரபு. இம்மரபு இடைக் காலத்தில் மாறியது. தான் எழுதும் இலக்கண நூலுக்குத் தானே உரை எழுதும் புதுமை உருவாகிறது. இதனைப் புறப்பொருள் வெண்பாமாலை தெளிவாக்குகிறது. அதனாசிரியர், ஐயனாரிதனார், புறப்பொருள் இலக்கணங்களைச் சூத்திரங்களில் அமைத்தார். அவற்றைத் தொடர்ந்து துறை விளக்கம் பெறும் இடங்களில், கொளுக்களையும் அவரே எழுதினார். தொடர்ந்து ஒவ்வொரு கொளுவிற்கும் உரிய அழகான உதாரண வெண்பாக்களையும் அவரே எழுதியுள்ளார். கொளு என்பது உரையில் இடம் பெறும் நுதலிய பொருளைப் போன்றது. உதாரணம் வழங்குவது உரையின் தலைமைக்கூறு ஆகும். உதாரணம் கூறிய அளவிலேயேசில நூற்பாக்கள் சில நூல்களில் விடப்பட்டிருப்பது இதனை வலியுறுத்தும்.

மூல விளக்கத்திற்கு உரையை விட எடுத்துக்காட்டுகளே இன்றி யமையாதவை என்று கருதும் மரபும் உரையாசிரியர்களிடையே உண்டெனலாம். உரையாசிரியர்களில் சிலர், இலக்கண நூற்பாக்கள் சிலவற்றிற்கு உரை எழுதாமல் எடுத்துக்காட்டுகளை மட்டும் எழுதிச் செல்லும் வழக்கம் இக்கருத்தையே உணர்த்துகிறது. இவ்வழக்கத்திற்கு ஏற்ற சான்றுகளைத் தொல்காப்பியர் சொல்லதி காரம் பழைய உரையிலும், இலக்கணக் கொத்தின் உரையிலும் காண லாம். பெயர் தெரியாத அப்பழைய உரையாசிரியர் தொல்காப்பியச் சொல்லதிகாரத்தில் 6, 7, 8, 9 என்னும் கிளவியாக்க நூற்பாக் களுக்கு உரை எழுதவில்லை; எடுத்துக்காட்டுகள் மட்டுமே தந்துளார். சுவாமிநாத தேசிகரோ தம்முடைய நூலின் பகுதியாக நூற்பாக் களுக்கு உரை வரையாமல் எடுத்துக்காட்டுகளை மட்டுமே கொடுத் துள்ளார். பிற பழைய ஆசிரியர்களிடத்தும் இவ்வழக்கம் ஆங்காங்கே அருகிக் காணப்படுகிறது. நூற்பாக்களின் பொருள் தெளிவுக்கேற்ற உரை விளக்கமாக உதாரண விளக்கமே அமையும் என்பது இவ்வுரை ஆசிரியர்களின் கருத்தாகலாம்.[1]

நூலாசிரியரே உரையமைக்கும் இப்பாங்கிற்குப் பிறிதொரு காரணமும் உண்டு. தொல்காப்பியம் எழுதப்பட்டு, அதற்குப் பல காலத்திற்குப் பின்பே புது இலக்கண நூல்கள் தோன்றின. தோன்றியன பெரும்பாலும், தமக்கு முன்பிருந்த இலக்கணக் கோட் பாடுகளைத் தெளிவு குன்றாமல் தொகுப்பதிலும், சுருக்குவதிலும் பெருங்கவனம் செலுத்தின. 'தொகை வகை விரியின்' நன்னூல் அமைந்தது என்பது நன்னூற் சிறப்புப் பாயிரக் கருத்து. 'இகப்பரும்

1. தாமோதரன். திருக்குறள் மேற்கோள் விளக்கம். 22.

சான்றோர் இலக்கியம் நோக்கித் தொகுத்து' என்பது அகப்பொருள் பாயிரம். இவற்றால் இடைக்கால இலக்கண நோக்குகளுள் 'தொகுப்பு' என்பது தலையாய ஒன்று என்பது தெளிவாகிறது. இத்தொகுப்பு முயற்சி, விரிவில் இடம் பெற்றிருந்த விளக்கத்தை ஓரளவு குறைக்கவே செய்யும். தொல்காப்பிய நூலில் இடம் பெற்றுள்ள விளக்கம், சுருக்க நோக்கால் நன்னூலில் சில இடங்களில் இல்லாமற் போயினமையை அந்நூற் காட்டும். புணர்ச்சி விதிகளை உயிர் ஈறு, மெய்யீறு அடிப்படையில் முற்றும் அடக்க முயல்கிறார் பவணந்தி. இதனால், புணர்ச்சி விதிபெறும் சொற்களை, கிளைப் பெயர், திசைப்பெயர், முறைப்பெயர், உணவுப்பெயர், தொழிற் பெயர், எண்ணுப்பெயர், நிறைப்பெயர், அளவுப்பெயர், நாள்பெயர், திங்கள்பெயர், காலப்பெயர், பூதப்பெயர், விலங்குப்பெயர், புள் பெயர், மரப்பெயர், செடிப்பெயர், பூப்பெயர் எனத் தொல்காப்பியம் வகுத்துக்காட்டும் வரலாற்று மரபுகள் சுருக்கத்தின் காரணமாக இடம் பெறாமல் போகின்றன. இதுபோன்ற இன்னும் சில தொல் காப்பிய விளக்கங்களும் நன்னூலில் இடம்பெறாது போயின. இவற்றைத் தவிர்க்க இடைக்கால நூலாசிரியர் விரும்பி இருத்தல் வேண்டும். அன்றியும், தொல்காப்பியம் போன்ற நூல்களில் காட்டப் பட்ட இலக்கண வரையறைகளுக்குத் தம் காலத்திலேயே எடுத்துக் காட்டு இல்லாமற்போயினமையை அவர்கள் அறிந்திருந்தார்கள். பழைய உரையாசிரியர் பலர், நூற்பாக்களுக்கு உதாரணம் இல்லாமல், 'உதாரணம் வந்துழிக் கண்டு கொள்க' என்று எழுத நேருவதை அவர்கள் அறிவார்கள். இந்நிலை தம் இலக்கண நூலுக்கு நேராது தவிர்த்தல் வேண்டும் என்று அக்கால இலக்கண மூல ஆசிரியர்கள் விரும்பி இருத்தல் வேண்டும். இலக்கணம் இயல்பாகவே செறிவுடையது. இதனால் மிகுந்த விளக்கங்களை அது தன்னுள்ளடக்கி இருந்தது. இதனால் காலப் போக்கில், நூற்பாச் செறிவைக் கட்டவிழ்ப்பதில் உரையாசிரியர்களிடை கடும் கருத்து வேறுபாடு நேர்ந்தே தீரும். தொல்காப்பிய உரைகள் இதனைத் தெளிவாக்கு கின்றன. இதனால், நூலாசிரியர் நினைத்துப் படைக்கும் கருத்துப் பிற்காலத்தில் பிறழ்பட உணரப்படக் கூடும் என்ற அச்சம் மூல நூலா சிரியர்களிடம் இருந்திருத்தல் வேண்டும். ஆக, சுருக்கத்தின் காரண மாக விடைபெறும் விளக்கத்தைக் காட்டவும், தம் நூல் தமக்குப் பிற்காலத்தில் உதாரணம் காட்டப்படாமல் பயிற்றப்படுவதைத் தவிர்க்கவும், பிற்காலத்தில் பிற உரையாசிரியரால் பிறழ்பட உணரப் படுவதைத் தடுக்கவும், இலக்கணம் படைத்தவர்களே, கொளு எழுதுவதும், எடுத்துக்காட்டு நல்குவதும், உரை வரைவதும் செய்வா ராயினர்.[2] இவ்வடிப்படையில், அவிநயனாரே தாமே எடுத்துக்காட்டு

2. இலக்கணக் கொத்து நூற்பா 6.

வழங்கி, ஒரு வகையில் உரை எழுதும் பழக்கத்தை முதன்முதல் தோற்றுவித்தவர் ஆவார். இச் செய்தி 'இஃது அவிநயனுர் காட்டிய பாட்டு' என்று யாப்பருங்கல விருத்தி உரைகாரரும், யாப் பருங்கலக்காரிகை உரைகாரரும் எடுத்துக் காட்டுவதால் தெளிவா கிறது. கலிவிருத்தம் அல்லது தரவு கொச்சகத்திற்காக, அவி நயனுர் காட்டிய பாட்டுப் பின்வருமாறு :

கோழியும் கூவின; குக்கில் அழைத்தன ;
தாழியுள் நீலத் தடங்கணீர்! போதுமினோ ;
ஆழிசூழ் வையத் தறிவன் அடியேத்திக்
கூழை நனையக் குடைந்தும் குளிர்புனல்
ஊழியும் மன்னுவாம் என்றேலோர் எம்பாவாய் !

யா. வி. 93. யா. கா. 43. மேற்.

இத் திருப்பாவைப் பாட்டை அவிநயனுர் எடுத்துக் காட்டுவது, அவி நயனுர், தாம் எழுதிய யாப்பு நூலுக்குத் தாமே உரை எழுதினுர் அல்லது உதாரணம் நல்கினுர் என்பதை உறுதி செய்கிறது.

**பொருள்கோள் :** தொல்காப்பியம், நான்கு பொருள்கோள் வகைகளைக் காட்டுகிறது. (சொ. 404) நேமிநாதம் ஒன்பது (சொ. 67) என்று குறிப்பிடுகிறது. நன்னூலும் (411) இலக்கண விளக்கமும் (361) எட்டு என்று உரைக்கின்றன. இறையனுர் களவியல் உரை காரர் ஐந்து என்கிறுர். அவிநயனுர் இருபது என்று குறிப்பிடுகிறுர். அதனுடன், அவ்விருபது வகைப் பொருள்கோளிற்கும், எடுத்துக் காட்டும் நல்கி இருக்கிறுர் என்பது யாப்பருங்கல விருத்தியால் துலக்க மாகிறது.

'நிரல்நிறை, சுண்ணம், அடிமறிமொழிமாற்று, அடிமொழி மாற்று என்னும் இந்நான்கினேடும், பூட்டுவில், புனல்யாறு, தாப் பிசை, அளைமறி பாப்பு, கொண்டுகூட்டு என்னும் இவ்வைந்து செய்யுட் பொருள்கோளும் உறழ இருபதாம். அவை வந்தவழிக் கண்டு கொள்க. இருபது வகையானும் காட்டினுர் அவிநயனுர் எனக்கொள்க.'

என வரும் யாப்பருங்கல விருத்தி (ஒழிபியல். ப. 393) மேற் கண்ட செய்தியை உறுதிப்படுத்துகிறது.

உதாரணப் பாட்டைக் காட்டுதல் மட்டுமன்றி, உரிய சொற்களை யும் சொற்றொடர்களையும் எடுத்துக் காட்டாகக் காட்டுதல் அவிநயனுர் வழக்கம். 'கால்வாய் அடைகடல்...முன் மொழிப்பொருள் கருதின. வேங்கைப்பூ, கருங்குதிரை என்பன பின்மொழிப் பொருள் கருதின.

இவை ஈரிடத்திற்கும் அவிநயத்தில் காட்டினவை' என்பர் மயிலைநாதர்.[3]

அவிநயனாரைப் போன்றே, கையனார் என்பவரும், இவ்வாறு உதாரணம் எடுத்தோதினர் என்று தெரிகிறது. 'கயலோ உண்கண்' என்ற பாடலும், (யா. வி. ப. 146; யா. கா. 41), 'போதவிழ் குறிஞ்சி எனத் தொடங்கும் பாடலும் (யா. வி. ப, 159; யா. கா. 40) கையனாரால் காட்டப்பட்டவை என யாப்பருங்கல விருத்தியுரையாலும், யாப்பருங்கலக் காரிகை உரையாலும் தெரிய வருகின்றன.

இது போன்றே செய்யுளியல் என்ற யாப்பிலக்கண நூலின் ஆசிரியரும், சூத்திரங்களை எழுதித் தாமே இலக்கியங்களிலிருந்து எடுத்துக் காட்டும் நல்கினர். 'துளியொடு மயங்கிய' எனத் தொடங்கும் பாட்டையும் (யா. வி. ப. 142, யா. கா. 41 மேற்.) 'மனைக்குப் பாழ் வாணுதல்' எனவரும் நான்மணிக் கடிகைப் (20) பாட்டையும் (யா. வி. ப. 230) இவர் காட்டினர். இவையன்றி வேறுபல பாட்டுகளையும் இவர் காட்டினார் என்பது யாப்பருங்கல உரையால் (ப. 387) புலனாகிறது.

அணியியல் என்ற அலங்கார நூலாசிரியரும் (யா. வி. ப. 105, 229, 566, 578) தாமே எடுத்துக் காட்டும் நல்கினர் என்பது, யாப்பருங்கல உரையால் விளங்குகிறது. 'வைகலும் வைகல்' எனவரும் நாலடியார் (89) பாடலைக் காட்டி, 'இஃது அகவல் வெண்பா என்று அணியியல் உடையார் காட்டிய பாட்டு' என்று உரைகாரர் குறிப்பது காண்க. (யா. வி. ப. 229)

மயேச்சுரரால் எழுதப்பட்ட யாப்பு நூல், இடைக்காலத்தில் மிகப் புகழ்பெற்று விளங்கி இருத்தல் வேண்டும். இந்நூலை, யாப்பருங்கலம், காரிகை உரையாசிரியர்கள் அடிக்கடி எடுத்துக் காட்டுகின்றனர். இவரால் எழுதப்பட்ட நூல் மயேச்சுரர் யாப்பு என்றே வழங்கப்பட்டது.

இந்நூலை எழுதிய, மயேச்சுரர் உதாரணம் எடுத்தோதுவதில் தலையாயவர் போலும். யாப்பருங்கலக் காரிகையில் இடம் பெற்றுள்ள உதாரண முதல் நினைப்புக் காரிகைகள், 'மயேச்சுர யாப்பே போல உதாரணம்' எடுத்தோதப் பட்டன என்பது, யாப்பருங்கலக் காரிகையின் பாயிர உரையால் தெளிவாகிறது. மயேச்சுரர், உதாரணம் காட்டும் பாங்கினர் என்பது யாப்பருங்கல விருத்தி உரை (ப. 364) யினால் தெரிகிறது.

3. அவிநயனார் காட்டினதற்கு மாறாக இளம்பூரணர் வேறு காட்டுவர். இதனை மயிலைநாதர் எடுத்துக் காட்டுகிறார். இளம்பூரண ஆசிரியர் வேங்கைப்பூ என்பதனை முன்னிடத்திற்கும், அடைகடல் என்பதனைப் பின்னிடத்திற்கும் காட்டுவர். நன்னூல். 369. அவிநயத்தில் காட்டினவை என்பதற்கு 'அவிநயனார் காட்டினவை' என்பதைப் பாடபேதமாகக் காட்டுவர் உ. வே. சா. 'அவிநயனார் காட்டினவை' என்பதே சரியான பாடம்.

புறப்பொருள் வெண்பாமாலை ஆசிரியரும் இக்கொள்கையினரே என்பது முன்பு காட்டப்பட்டது. யாப்பருங்கலக் காரிகை ஆசிரியர் அமுதசாகரரும் இப்பிரிவினரே. ஒரு காரிகையில் (37) இலக்கியத்தையும், இலக்கணத்தையும் ஒரு சேர அமைத்துள்ளமையும், உதாரண முதல் நினைப்புக் காரிகைகள் சிலவற்றை நூலாசிரியரே எழுதி இருப்பதும் இதனை வலியுறுத்துகின்றன.

விட்டிசைத் தல்லான் முதற்கண் தனிக்குறில் நேரசை என்
றெட்டப் படாதகற் குண்ணு னுதாரணம் ஒசைகுன்று
நெட்டள பாய்விடி னேர்நேர் நிரையொடு நேரசையாம்
கிட்டத்தி னுற்குறில் சேரின் இலக்கியம் ஏர்சிதைவே

இக்காரிகையில், 'உண்ணுன் ஒளிநிருன்' என்ற நாலடியார்ப் பாட்டும் (9), 'ஏர் சிதைய' எனத் தொடங்கும் பழம்பாட்டும் உதாரணங்களாக இணைக்கப்பட்டுள்ளன.

பிரயோக விவேகம் எழுதிய சுப்பிரமணிய தீட்சிதரும் இப்போக்கைப் போற்றியவர். தண்டியாசிரியரும் இப்போக்கினரே. இதனைத் தீட்சிதர், 'தண்டி ஆசிரியர் மூலோதாரணம் காட்டினுற் போல யாமும் உரை எழுதிய தல்லது மூலோதாரணமும் காட்டினும்' (பிரயோக. 3) என்றும், 'சந்தோபிசிதமும் காரிகையும் போல இலக்கிய இலக்கணங்கள் ஒருங்கு தோன்ற மாதர்ச் சுவார்த்தம் என்ரும்' என்றும் (பிரயோ. 44) குறிப்பிடுகிருர்.

இவ்வனைத்தாலும், அவிநயனுர் தொடங்கி வைத்த உதாரணம் ஓதும்முறை, பிற்காலத்தில் தொடர்ந்து பரவி நிலவியது என்பது தெளிவாகிறது. அவிநயனுர் முதலான பன்னிருவரால் எழுதப்பட்ட பன்னிரு படலத்தை ஐயனுரிதனுர் பின்பற்றினுர் என்ற வெண்பாமாலைப் பாயிரமும் இங்கே நினைக்கத்தக்கது.

**இராசபவித்திரப் பல்லவதரையன்:** அவிநயனுர், தான் எழுதிய நூல்களுள் ஒன்ருகிய யாப்பு நூலுக்கு எடுத்துக்காட்டும் நல்கினுர் என்பது மேலே காட்டப்பட்டது. மற்றைய எழுத்து, சொல் ஆகியவற்றைக் காட்டிலும் யாப்பு நூலுக்கு எடுத்துக்காட்டுப் பாடல்கள் மிக முதன்மையானவை என்பதாலும் எடுத்துக்காட்டு நல்கி இருக்கலாம். எழுத்து, சொல் அதிகாரப் பகுதிகளுக்கு இராசபவித்திரப் பல்லவதரையர் என்பார் உரை எழுதினுர். இச்செய்தி நன்னூலுக்கு உரை எழுதிய மயிலைநாதரால் முதன் முதல் அறிவிக்கப்பட்டது (359).

இப்பத் தேச்சமும்
புவிபுகழ் புலமை அவிநய நூலுள்
தண்டலம் கிழவோன்

தகைபெறு நேமி
எண்திசை நிறைபெயர்
இராச பவித்திரப் பல்லவ தரையன்
பகர்ச்சி என்றறிக

என்பது மயிலைநாதர் தரும் குறிப்பு. இக்குறிப்பால், அவிநய நூலின் உரையாசிரியர், இராசபவித்திரப் பல்லவதரையன் என்பது உறுதியாகிறது. அவர், தண்டலம் என்ற ஊருக்கு உரியவராக இருந்தார் என்பதும், புகழ்பெற்றவர் என்பதும், 'தண்டலம் கிழவோன்' என்பதால் புலனாகின்றன. 'தகைபெறு நேமி' என்பது அரசனின் ஆணைச் சக்கரத்தைக் குறிக்கும். அரசனின் வெற்றியைக் குறிக்கும் போது திசையனைத்தையும் வென்றவன் என்று குறிப்பது மரபு. ஆணைச் சக்கரத்தையும், அனைத்துத் திசை வெற்றியையும், 'தகைபெறு நேமி எண்திசை நிறை பெயர்' என்ற சொற்கள் காட்டுகின்றன. பல்லவர் மரபினன் அல்லது பல்லவ ஆட்சியின்கீழ் இருந்த சிற்றரசன் என்பதைப் 'பல்லவ தரையன்' என்ற பட்டப் பெயர் சுட்டுகின்றது. இவன் அரசனே ஆதல்கூடும் என்பதை 'இராச' பவித்திரன் என்பது எடுத்துக்காட்டி நிற்கிறது.

**உரையின் காலம்:** மயிலைநாதர் காலம் கி.பி. 14ஆம் நூற்றாண்டு. அவர் உரையில் இராசபவித்திரப் பல்லவதரையன் உரை எடுத்துக்காட்டப் பட்டிருக்கிறது. நரசிம்மவர்மன், நந்திவர்மன் என்பன போல, வர்மன் என்ற பின்னொட்டு இன்மையால், அவன், தனிப்பல்லவ அரசன் அல்லன் என்பது தெளிவு. பெயரைப் பார்த்தாலும் இராசபவித்திரன் என்பதே இயற்பெயர் போன்றும், பல்லவதரையன் என்பது பட்டப்பெயர் போன்றும் இருக்கின்றன.[4] 'தரையர்' என்ற பின்னொட்டுடைய 'முத்தரையர்' என்ற பெயர் கி.பி. 7, 8ஆம் நூற்றாண்டுகளில் செல்வாக்கில் இருந்தது என்பதைத் தஞ்சைக்கடுத்த செந்தலைக் கல்வெட்டுகள் காட்டுகின்றன. இக்கால எல்லையிலேயே பல்லவர் ஆட்சியில் தண்டலம் என்ற பகுதியில் இவன் ஆண்டிருத்தல் வேண்டும். அவிநயம் என்ற நூலின் காலம் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு என்பது முன்பு காட்டப்பட்டது. பல்லவராட்சியில், மகேந்திரவர்மனுக்கு அடுத்தபடி சைனரை அணைத்து ஆதர வளித்தவன் இரண்டாம் நந்திவர்மனே (கி.பி. 71?–775) ஆவன். அவிநயனார் என்ற சைனரால் எழுதப்பட்ட இலக்கண நூலும் இவன் காலத்தை ஒட்டியே எழுதப்பட்டிருத்தல் வேண்டும்.

சைன இலக்கண நூல்களுக்கு எழுதப்பட்ட உரைகள் பெரும்பாலன, நூலாசிரியர் காலத்திலேயே எழுதப்பட்டிருக்கின்றன.

4. பாண்டிய மன்னர், செழிய தரையன், தென்னவ தரையன், பாண்டியன் பல்லவ தரையன் என்றபட்டப் பெயர்களை அதிகாரிகளுக்கு வழங்கியுள்ளனர், பாண்டியர் வரலாறு, ப. 178.

யாப்பருங்கலமும், யாப்பருங்கலக் காரிகையும் மூல நூலாசிரியர் காலத்திலேயே உரைகளைப் பெற்றன. நேமிநாதமும், வச்சணந்தி மாலையும் அவ்வாறே. நன்னூலிற்கு, அந்நூல் எழுந்த காலத்தை ஒட்டியே ஒரு சைனராலும், மயிலைநாதராலும் உரை இயற்றப் பெற்றன. அகப்பொருள் அந்நூலாசிரியராலேயே உரை எழுதப் பெற்றது. இவற்றை நோக்க, நூலாசிரியர் காலத்திலேயே உரை எழுதப்படல் என்பது சைன இலக்கணியாரின் பொதுமரபு என்பது தெளிவாகிறது. இம்மரபை மனத்துள் கொண்டு பார்ப்பின், இராச பவித்திரப் பல்லவ தரையரும், அவிநய நூலாசிரியர் காலத்திலேயே உரை எழுதினராதல் வேண்டும். ஆதலின், அவிநயனாரின் கால மாகிய, கி. பி. 9ஆம் நூற்றாண்டே இராசபவித்திரப் பல்லவ தரையரின் காலமும் ஆகும்.

**உரையின் சிறப்பு:** அவிநயனார், உலகனைத்தும் புகழ் பெற்றவர். பெரும்புலமை வாய்ந்தவர். அவர் நூல்களும் பெருஞ் சிறப்புப் பெற்றவை. இத்துணைச் சீர்த்தியும் கீர்த்தியும் பெற்ற நூலும் மறைந்துவிட்டது. அந்நூலிற்கு எழுதப்பட்ட உரையும் மறைந்து விட்டது. இது இலக்கண உலகில் பெரும்பேரிழப்பே. அதுவும், பெரும்புலவன் ஒருவனால் எழுதப்பட்ட நூலிற்கு, அரசன் ஒருவன் உரை எழுதியதாகத் தெரிகிறது. இது அவிநய நூலுக்குக் கிடைத்த பெருமை :[5] சைன இலக்கணத்திற்குக் கிடைத்த பெருமை. இராச பவித்திரப் பல்லவ தரையரின் உரை இன்று முழுதும் இல்லை. எனினும், சொல்லதிகாரத்தில் உள்ள ஒரு நூற்பா சிறப்பான விளக்கம் பெற்றிருக்கிறது. அவ்விளக்கம் எச்சம் பற்றிய தமிழிலக் கணக் கோட்பாடுகளுள் தலையாயது.

**எச்சங்களின் முடிபு (360):** எச்சம், சொல்லெச்சம், குறிப்பெச்சம் என இருவகை. அவற்றுள், சொல்லெச்சம், பெயரெச்சம் முதலாக இசையெச்சம் ஈறாக ஒன்பது வகை. குறிப்பெச்சம் தனி வகையினது. இச்செய்தியைத் தாங்கியுள்ள இந்நூற்பாவின் பொழிப்புப் பின் வருமாறு: பெயரெச்சமும் வினையெச் சமும், உம்மையெச்சமும், சொல்லெச்சமும், பிரிநிலை எச்சமும் என எச்சமும், ஒழியிசை எச்சமும், எதிர்மறைஎச்சமும், இசை எச்சமும் ஆகிய சொல்லெச்சம் ஒன்பதும், குறிப்பெச்சம் ஒன்றும் தத்தம் எச்சங்களைக் கொள்ளும்.

5. கி. பி. 9 நூற். கன்னட நூலான கவிராச மார்க்கம் இராட்டிரகூட பேரரச னாகிய அமோகவர்ஷன் என்ற நிருபதுங்கனால் இயற்றப்பட்டது என்பர். அதனால் அந்நூலின் பெயரே நிருபதுங்க கவிராச மார்க்கம் என்றமைந்தது. தமிழில் நைடதம், அதிவீரராம பாண்டிய அரசனால் (கி. பி. 1564-1604) செய்யப்பெற்றது. வரதுங்கராம பாண்டியன் (கி. பி. 1588) பிரமோத்தரக் காண்டம், கருவைக் கலித்துறை அந்தாதி, கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி, கருவை வெண்பா அந்தாதி என்பவற்றை எழுதினான். தமிழில் அரசர்கள், தனியாக உரையேதும் எழுதினதாகத் தெரியவில்லை.

இவ்வெச்சங்களுக்கு விளக்கம் கூறும் வகையில், இரு வேறு கொள்கைகள் பண்டு தொட்டு இருந்து வந்துள்ளன. சில கருத்து வேறு பாடுகள் இருப்பினும், இளம்பூரணர், சேனுவரையர், நச்சினார்க் கினியர் ஆகியோரின் உரை முறை ஒருவகை. சங்கர நமச்சிவாயர் உரை பெரும்பாலும் இவர்களைப் பின்பற்றி எழுதப்பட்டுள்ளது. தொல் காப்பிய உரையாசிரியர்களுள் ஒருவராகிய தெய்வச்சிலையார் உரை நெறி அவர்களினின்றும் வேறுபட்ட புதுநெறி. மயிலைநாதர் தம் முரையில் சுட்டிக்காட்டும் அவிநயநூல் உரையாசிரியர் இராசபவித் திரப் பல்லவதரையர் உரையும், தெய்வச்சிலையார் உரையும் ஒத்துள்ளன. இராசபவித்திரப் பல்லவதரையர் உரையே பழைமை யானது; முன்னது. மயிலைநாதரும் தெய்வச் சிலையாரும் அவிநய உரையைப் பின்பற்றித் தத்தம் காலத்தில் உரை இயற்றினர். இருவேறு கொள்கையினரும் காட்டும் சான்றுகளும் விளக்கங்களும் பெரிதும் வேறுபட்டுள்ளன. அவை பின் வருமாறு :

**பெயரெச்சம்; மயிலைநாதர் உரை :** ''இணரெரி தோய் வன்ன இன்ன செயினும் புணரின் வெகுளாமை நன்று'' என்பது பிறர் இன்னசெயினும் தான் வெகுளாமை நன்றென 'ஒருவன்தான்' என்ற எஞ்சிய பெயர் கொண்டு முடிதலின் பெயரெச்சம். இனி சங்கர நமச்சிவாயர் உரைக்குமாறு: ''செய்த சாத்தன்''

**வினையெச்சம்; மயிலைநாதர் உரை :** ''காலங் கருதி இருப்பர் கலங்காது, ஞாலங் கருதுபவர்''. கொள்ளும் காலம் குறித்துக் கலங்காது இருப்பர் என்பதில் 'போர் வினை மேற் கொள்ளுதல்' என்ற வினை எஞ்சி நிற்றலின் வினையெச்சம். இனி சங்கர நமச்சிவாயர் உரைக்குமாறு: 'செய்து வந்தான்'

**உம்மையெச்சம் ; மயிலைநாதர் உரை :** ''இலங்குவாள் இரண்டினல் இருகை வீசி'' என்பதில் இருகையும் வீசி என உம்மை கொண்டு முடிதலின் உம்மையெச்சம் ஆயிற்று. இனி சங்கர நமச்சிவாயர் உரைக்குமாறு : சாத்தனும் வந்தான் என்புழி முன்னே கொற்றனும் வந்தான் என இறந்தது தழுவியது உம்மை எச்சம்.

**சொல்லெச்சம் : மயிலைநாதர் உரை :** ''இசையா ஒரு பொருள் இல்லென்றல் யார்க்கும், வசையன்று'' என்பதில் இசையா ஒரு பொருள் இல்லென்று சொல்லுதல் என, ''சொல்'' என்பது கொண்டு முடிதலின் சொல்லெச்சம். இனி சங்கர நமச்சிவாயர் உரைக்குமாறு : நல்லவன் என்ருன்; 'என்று சொன்னுன்' என்பது கருத்து. ஈண்டு சொல் என்பது எஞ்சி நின்றது. இங்கு இருவரும் ஒரு கொள்கையினரே. ஆதலின் ஒத்த காட்டுக் காட்டினர்.

**பிரிப்பெச்சம் : மயிலைநாதர் உரை :** ''அறிவின் அற நெறி அஞ்சுமின் கூற்றம் ; பொறுமின் பிறர் கடுஞ்சொல் போற்று

மின் வஞ்சம் ; வெறுமின் வினை தீயார் கேண்மை எஞ்ஞான்றும் ; பெறுமின் பெரியோர் வாய்ச்சொல்'' என்ற பாவினுள் ஓரிடத்து நின்ற எஞ்ஞான்று என்பதனைப் பிரித்துப் பிறவழியும் கூட்டி முடிக்கவேண்டி இருத்தலின் பிரிநிலை எச்சமாயிற்று. இஃது தீபக அணியை ஒத்துள்ளது. இனி சங்கர நமச்சிவாயர் உரைக்குமாறு : சாத்தனே கொண்டான் என்பதில் பிறன் கொண்டிலன் என்ற கருத்துப் பெறப் படுதலின் பிரிநிலை.

**என எச்சம் : மயிலைநாதர் உரை :** ''எடுத்தலும் படுத்தலும் ஆயிரண்டல்லது, நலிதலில்லை என்மரு முளரே'' என்பதனுள் 'எடுத்தலும் படுத்தலுமென, அவ்விரண்டு அல்லதென' என்று 'என' என்பது கொண்டு முடிதலின் என எச்சமாயிற்று. இனி சங்கர நமச்சிவாயர் உரைக்குமாறு: 'கடல் ஒல்லென ஒலித்தது'—என்பதில் என வென் எச்சம் தம்மெச்சமாகிய வினையைக் கொண்டு முடிந்தது. இரு திறத்தார் கருத்துகளும் ஈண்டும் ஒத்துள்ளன.

**ஒழியிசை எச்சம் : மயிலைநாதர் உரை :** ''செறுநரைக் காணின் சுமக்க இறுவரை, காணின் கிழக்காம் தலை'' என்பதனுள் கிழக்காந் தலை என்பதன் துணிபு தோன்றுதற்கு ஒழிக்கப்பட்ட அவர் கெடுவர் என்பதைக் கொண்டு முடிகிறது. இசையென்பது சொல். ஒழிக என்னும் சொல் எஞ்சி நிற்பதைக் கருதுவர். சங்கர நமச்சிவாயர் உரை : 'கூரியதோர் வாள்மன்' இப்போது ஒடிந்தது என்ற கருத்தினது. கூரியதோர் வாளாக முன்பு இருந்தது; இன்று அந்நிலை ஒழிந்தது என்பது எஞ்சி நின்றது.

**எதிர்மறை எச்சம் : மயிலைநாதர் உரை :** 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார், இறைவ னடிசேரா தார்' என்பதில் சேர்ந்தார் நீந்துவர் என எதிர்மறை கொண்டு முடிவது. இனி சங்கர நமச்சிவாயர் உரைக்குமாறு: வரலும் உரியன்; யானே செய்தேன் என்பன எதிர்மறை எச்சம். வாராமைக்கு முரியன், யான் செய்திலன் என எதிர்மறையெச்சங்கள் கொண்டன.

**இசையெச்சம் : மயிலைநாதர் உரை :** ஒன்று சொல்ல அச்சொல்லானே வேறுபொருள் இசைத்தல். அஃதாவது இரட்டுற மொழிதல் அல்லது சிலேடை என்பது மயிலைநாதர் கருத்து. 'குமரி யாட...முந்தை நலிகின்ற முதுமூப்பு ஒழியும் என்றான்'. ஈண்டுக் 'குமரி' என்பது குமரிக்கடலையும் குமரிப் பெண்ணையும் உணர்த்தி நின்றது.

சங்கர நமச்சிவாயர் உரை : இசையென்பது சொல். நால்வகைச் சொற்களுள் வேண்டுவன எல்லாம் தந்து அகலம் (விரிவுரை, கூறவேண்டி நிற்பன இசையெச்சம் இதற்கு 'இணரெரி தோய் வன்ன... 'என்ற குறளை எடுத்துக் காட்டி அழகான அகல உரையையும் சங்கர நமச்சிவாயர் செய்து காட்டுவர்.

**குறிப்பெச்சம்: மயிலைநாதர் உரை:** பிறிதுமொழிதலணி என்பர். ‘பீலி பெய் சாகாடும்...’’, ‘‘கடலோடா...’’ என்ற குறட் பாக்களை எடுத்துக் காட்டுவர். இனி சங்கர நமச்சிவாயர் உரைக்கு மாறு: நன்னூல் 269ஆம் நூற்பாவில் கூறப்பட்ட ஒன்றொழி பொதுச் சொல் முதலானவற்றை ஈண்டுப் பொருத்திக் காட்டுவர்

**மயிலைநாதர் உரைக்கும் சங்கர நமச்சிவாயர் உரைக்கும் உள்ள வேறுபாடுகள்:** எஞ்சிய பொருட்கிளவிகள் பத்தும் இருவகைய என்பர் தொல்காப்பியர். முதல் ஏழும் ஒருவகை. பின் மூன்றும் பிறிதொரு வகை. ஆனால் தொல்காப்பிய உரை காரர்கள், நன்னூல் உரைகாரர் சங்கர நமச்சிவாயர் ஆகியோர் உரை வகுத்துக் காட்டும் முறை, முன் ஏழு வகையை ஒரு வகையாகக் காட்டவில்லை. ஆனால் மயிலைநாதர் காட்டும் இராசபவித்திரப் பல்லவதரையர் முன் ஏழினையும் ஒருப்போலக் காட்டுகின்றனர். இராச பவித்திரப் பல்லவதரையர், மயிலைநாதர், தெய்வச் சிலையார் விளக் கத்தின்படி, முதல் ஏழு எச்சங்களிலும் ஒத்திருக்கும் பொதுப்பண்பு: ‘புலப்படாத ஒரு சொல்லை வருவித்தல்’ ஆகும். இவ்வாறு வருவித்து உரைப்பதால், சொல்லாதொழிந்த பொருள் நன்கு விளங்குகின்றது. ஏனைய, தொல்காப்பியம், நன்னூல் உரைகாரர் கருத்துப்படி இப்பொதுப் பண்பு, பிரிநிலை, ஒழியிசை, எதிர்மறை என்ற மூன்று எச்சங்களிலேயே அமைந்துள்ளது. இஃது இரு கொள்கைகளின் ஊடே உள்ள இன்றியமையா வேறுபாடும் சங்கர நமச்சிவாயர் முதலானோர் உரையில் உள்ள குறைபாடும் ஆகும்.

மயிலைநாதர் மேற்கோளாகக் காட்டும் உரையால், வினையியலில் கூறப்படும் பெயரெச்சம், வினையெச்சம் ஆகியவையும் எச்சவியல் அல்லது பொதுவியலில் கூறப்படும் அப்பெயர்க்கிளவிகளையும் வேறு வேறு எனப் பிரித்துணர முடிகின்றது. மற்றவர் உரையால் அவ்வாறு பிரித்தறிய முடியவில்லை.

பிரிநிலை, ஒழியிசை, எதிர்மறை, உம்மை, என என்னும் எச்சங்களை, அவ்வவ் இடைச் சொற்கள் கொண்ட எச்சங்கள் என்று கூறுவதாகும். இடைச் சொற்களால் வரும் எச்சங்கள் பொருள் தருமாற்றை இடையியலில் கூறியிருப்ப, பொதுவியலிலும் அவற்றைக் கூறினர் பவணந்தி என்ற கருத்தைத் தோற்றுவிக்கிறது, சங்கர நமச்சிவாயர் முதலானோர் கொண்ட உரை. இஃது நூலாசிரியரைக் கூறியது கூறினர்’ என்ற குற்றத்திற் குள்ளாக்கு கிறது.

இவையனைத்தையும் நோக்க மயிலைநாதர் மேற்கோளாக வழங் கியுள்ள இராச பவித்திர பல்லவதரையர் உரையே மிகப் பொருத்தம் எனத் தோன்றுகிறது.[6]

6. அறவாணன். க. ப. நன்னூலும் அதன் உரைகளும், சென்னைப் பல்கலைக் கழக எம்.லிட் ஆய்வு. அச்சாகாதது, 1973, ப. 214-18.

# எழுத்ததிகாரம்

## எழுத்திலக்கணத்தின் பகுதி

1 என் பெயர் முறை......வழக்கே

பொருள் : எழுத்துகளின் எண், அவற்றின் பெயர், அவை அமைந்துள்ள வரிசை முறை, அவை பிறக்கும் பிறப்பியல், அவற்றிற் குரிய மாத்திரை அளவு, அவற்றின் வடிவு, அவை புணரும் முறை என்ற ஏழும் எழுத்திலக்கணத்தின் பொருந்திய பாகுபாடுகளாம்.

விரிவுரை : தொன்னூலாசிரியர் தொல்காப்பியர் எழுத்திலக் கணத்தின் பாகுபாடுகளைப் பகுத்துக் காட்டவில்லை. எனினும் உரை யாசிரியர்கள் இளம்பூரணரும் நச்சினார்க்கினியரும் எட்டு வகை என்றும், எட்டிறந்த பல வகை என்றும் விரித்துக் காட்டுவர். அவர் காட்டுவன: (1) எழுத்து இனைத் தென்றலும், (2) இன்ன பெயரின என்றலும் (3) இன்ன முறைமை என்றலும் (4) இன்ன அளவின என்றலும் (5) இன்ன பிறப்பின என்றலும் (6) இன்ன புணர்ச்சிய என்றலும், (7) இன்ன வடிவின என்றலும் (8) இன்ன தன்மைய என்றலுமாம்.

எட்டிறந்த பலவகையாவன : (9) உண்மைத் தன்மையும் (10) குறைவும், (11) கூட்டமும், (12) பிரிவும், (13) மயக்கமும், (14) மொழியாக்கமும், (15) நிலையும், (16) இனமும், (17) ஒன்று பல வாதலும், (18) திரிந்ததன் திரிபது என்றலும், (19) பிறிதென்றலும், (20) அதுவும் பிறிதும் என்றலும், (21) நிலையிற்றென்றலும், (22) நிலையாது என்றலும் (23) நிலையிற்று நிலையாது என்றலும், இன்னோரன்னவும் என இவை. அவிநயம் ஏழு என்பதைத் தழுவி நேமிநாதம், ஏழு என்று பாயிரம் அமைக்கிறது. பவணந்தி இவ்வேழுடன் முதல், ஈறு, இடைநிலை, போலி, பதம் என்ற ஐந்தையும் கூட்டி, பன்னிரண்டு என்பர் (நன்னூல் 57). இலக்கண விளக்க ஆசிரியர், நன்னூல் வழி, மொழிவர். (இ. வி. 2). தொன்னூல் விளக்க ஆசிரியர், தோற்றம், வகுப்பு, தோன்றும் விகாரம் என்று மூன்றாக்கி மொழிவர். இவையனைத்தையும் கால அடைவில் கருதும் போது, எழுத்திலக்கணத்தைப் பாகுபாடு செய்து பகுத்துக் காட்டிய முதல்வர் அவிநயனாரே என்பது பெறப்படும்.

இந்நூற்பாவால், அவிநய எழுத்ததிகாரம் ஏழாகப் பகுக்கப் பட்டிருந்ததை உய்த்துணர முடிகிறது. அவற்றுள் எழுத்துப் பிறப்பியல், எழுத்து வடிவியல் ஆகியன குறிக்கப் பட்டுள்ளன. அக்குறிப்புகள் அனைத்தும் கிடைக்காமல் போயினமை இலக்கண உலகில் பேரிழப்பே.

பொருந்திய வழக்கு என்று சிறப்பித்தமையான் இவ்வேழும் தலைமைப் பாகுபாடுகள் என்க.

## எழுத்து விரி

### 2 இருநூற்று.......இடைமை

**பொ-ள் :** தமிழ் எழுத்துகளாகிய உயிரும், உயிர் ஏறிய வன்மை, மென்மை, இடைமை ஆகியனவும் இருநூற்று இருபத்தெட்டு எழுத்துகளாக விரிந்தன.

**வி-ரை :** மெய்யெழுத்து முப்பாகுபாடுகளை 'வருக்கம்' என்றும் 'இனம்' என்றும் வீர சோழியமும், நன்னூலும் குறித்தன. இவை சமற்கிருதத் தாக்கம். இதற்கு மாருக வல்லெழுத்து, மெல்லெழுத்து, இடையெழுத்து என்று குறிப்பதே தொல்காப்பியத் தமிழ் முறை. இதற்கு முரணுமல் வன்மை, மென்மை, இடைமை என்று குறிப்பிடுகிருர் அவிநயனுர். நேமிநாத நூலாசிரியரும் அவிநயனுரைப் பின்பற்றி உரைத்தனர். உயிர் மெய் எழுத்துகளை 18 × 12 என்று உறழ 216 ஆயிற்று. இவற்றுடன் உயிர் பன்னிரண்டையும் கூட்டி இருநூற்று இருபத்தெட்டு என்றனர் அவிநயனுர். இந்தக் கணக்கை முதலில் பெருக்கிக் கூட்டிக் காட்டியவர் இவரே. பன்னிரண்டு உயிர் வேறு; அவை ஏறிய இருநூற்றுப பதினுறு உயிர்மெய் வேறு என்ற கருத்து இவர் நூற்பாவில் அமைந்து கிடக்கும் நுட்பம் ஓர்க. இதனுல்தான் யாப்பிலக்கண நூலாரும், 'குறில் நெடில் ஆவி குறுகிய மூவுயிர் ஆய்த மெய்யே மறுவறு, மூவினம் மைதீர் உயிர்மெய்' என்று உயிர் தனியேயும், உயிர் ஏறிய மெய் தனியேயும் காட்டினர். யாப்பருங்கல விருத்தியுரைகாரரும் தம் உரையில் இதனை எடுத்துக் காட்டினர்.

## குறிலும் நெடிலும்

### 3 அ இ உ எ ஒ........நேரப் படுமே

**பொ-ள் :** அ, இ, உ, எ, ஒ என்ற ஐந்தும் குற்றெழுத்துகளாகவும், எஞ்சிய ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ என்ற ஏழும் நெட்டெழுத்துகளாகவும் கொள்ளப் பெறும்.

**வி-ரை :** அச்சு, ஆவி, சுரம், பூதம் என்பன உயிர் எழுத்திற்கு உரிய வேறு பெயர்கள் (முத்து வீரியம், 6). குறுமை, இரச்சுரம்,

குறில், என்பன குற்றெழுத்திற்குரிய பிற பெயர்கள். நெடுமை, தீர்க்கம், நெடில் என்பன நெட்டெழுத்திற் குரிய பிற பெயர்கள்.

ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ என்று
ஏழும் ஏழிசைக்கு எய்தும் அக் கரங்கள்

என்பது பிங்கல நிகண்டு.

## ஆய்தம்

4 **அக்கேனம்......இதற்கே**

**பொ-ள்:** அஃகேனம், ஆய்தம், தனிநிலை, புள்ளி, ஒற்று என்பன ஆய்தத்திற்கு எய்தும் ஐந்து பெயர்களாம்.

**வி-ரை:** அகரத்தை, 'அ'வன்னு என்று கூறுதலைப் போல, ஆய்தத்தை அஃகேனம் எனக் குறித்தனர். கேனம் என்பது 'கான்' போன்றதோர் எழுத்துச் சாரியை போலும். இக்காலத்தும் ஆய்தம் 'அக்கேன்னு' என்று குறிக்கப் படுதல் கேட்க. ஒரு காலத்தில் ஆய்தம் 'க்' என்றே கருதப்பட்டது என்று கருத இடமிருக்கிறது. அஃதை என்பதை 'அகுதை' என்றே எழுதினர் (அகம். 96).

'ஆசிரதம்' என்ற சமற்கிருதச் சொல்தான், தமிழில் ஆய்தம் என்று திரிந்தது என்பர்.* அக் கருத்துப் பொருந்துவ தன்று.

## எழுத்துப்போலி

5 **அ ஐ முதலிடை......ஒரோ வழி**

**பொ-ள்:** ஒரு சில இடங்களில், மொழி முதலினும், இடையினும் அகர ஐகாரங்கள் வேற்றுமை இன்றி ஒத்து நடக்கும்.

**வி-ரை:** இந்நூற்பா மொழி முதற்போலியை உணர்த்துகிறது. பசல்-பைசல், மயல்-மையல் என்பன ஒரே பொருளன. ஆனல் அகர, ஐகார மாற்றம் நேர்ந்திருத்தல் காண்க. குணவீர பண்டிதரும் பவணந்தியும் வருமொழி எழுத்துகளாக சஞய என்பது வரும் போது முதற்போலி அமையும் என்றனர். அவர்தம் நூற்பா, அவிநய எதிரொலி எனல் பொருந்தும்.

சஞய முன் அஐயாம் ஆதி யிடை. (நேமி 9)
அஐ முதல் இடை ஒக்கும் சஞய முன். (நன். 123.)

* Dr. C. R. Sankaran, Phonemics of old Tamil, PP. 21-22. Dr. P. S. Subramania Sastri. History of Grammatical Theories in Tamil. PP. 63-64. மு. இராகவையங்கார். ஆராய்ச்சித் தொகுதி.

# ஆய்தம் யகரத்தின் மாற்றொலி

6 ஆய்தமும் யவ்வும்.......தோன்றும்

பொ-ள் : அகரத்தின் பின் ஆய்தமோ (அ+ஃ), யகர ஒற்றோ (அ+ய்) வந்தால் அவை 'ஐ' என்ற எழுத்தொடு பொருந்தி ஒலிக்கும்.

வி-ரை : ஆய்த எழுத்து வரலாற்றில் மிக அருமையானதொரு குறிப்பை, இந்நூற்பா மூலம் அவிநயம் அறிவிக்கிறது. ஐ என்பது 'அய்' என்றும் எழுதப் பெறும் என்பது பல்லோரும் ஒப்புக்கொண்ட செய்தி. யகரத்தையும் ஆய்தத்தையும் இணைத்துக் காட்டுவது அவிநயனார் வழங்கும் அரிய செய்தி. ஆய்தம், யகர மாற்றொலி யாகவும் வழங்கியது என்பதைக் கல்வெட்டுகளும், இலக்கியங்களும் எடுத்துக் காட்டுகின்றன. 'இஃது எழுதின சுத்த கேசரிப் பெரும் பணைக்காரன்' என்பதற்கு, 'இய்து எழுதின......' என்று வேள்விக் குடிச் செப்பேட்டில் எழுதப் பட்டுள்ளது. கஃசு என்பதற்குப் பகர்வாக, கைசு, கய்சு என்ற வழக்குகள் கல்வெட்டில் இடம் பெற்றுள்ளன.

ஆய்தத்திற்கு நேர் எதுகையாக யகரம் பயன்படுத்தப் பட்டுள்ளதை, புறநானூறு (397), திருக்குறள் (759), சூளாமணி (அரசியல் படலம். 205), சீவக சிந்தாமணி (1884), பெருங்கதை (1.38.108-109, 1.56.161) முதலாய இலக்கியங்களில் காணலாம்.

பவணந்தியும் அவிநயத்தை ஒட்டிய கருத்தினரே என்பது மயிலைநாதர் உரையால் புலனாகிறது. 'அம்முன் இகரம்.........'என வரும் நன்னூல் (124) நூற்பாவிற்குப் பாடபேதமாகப் பிறிதொரு நூற்பா மிதிலைப் பட்டி ஸ்ரீ அழகிய சிற்றம்பலக் கவிராயர் வீட்டி லிருந்த மயிலைநாதர் நன்னூல் உரைப் பிரதியால் தெரிய வருகிறது.

அம்முன் இகரம் ஆய்தம் என்றிவை
எய்தின் ஐயொத் திசைக்கும் அவ்வோடு
உவ்வும் வவ்வும் ஔவோர் அன்ன

இந்நூற்பாவால் பவணந்தி அவிநயனாரைப் பின்பற்றியமை தெளி வாகிறது. 'அ ஐ முதலிடை ஒக்கும் சஞய முன்' என்ற நூற்பாவின் வழி (நன்னூல் 123) அ+ய்>அய்/ஐ என்பதனை முன்பே கூறி விட்டவர், மீண்டும் 124 ஆம் நூற்பா மூலம் 'அம் முன் இகரம் யகரம் என்றிவை எய்தின் ஐ யொத்திசைக்கும்' என்று கூறத் தேவையில்லை. ஆதலால் மேலே காட்டப்பட்ட நூற்பாவே நன்னூலிற்குரிய சரி யான பாடமாதல் வேண்டும்,

ஆய்தல்—நுணுக்கம் என்ற பொருளோடு தொடர்புடைய தமிழ்ச் சொல்லே என்று அறிஞர் நிறுவினர். இதனை டாக்டர். சி. ஆர். சங்கரனும் ஒப்புக் கொண்டனர். (Tamil Culture. VoL.IX *PP*. 27-29). ஆய்தல் என்பதற்கு நுணுக்கம் என்ற பொருளும், ஆய்த ஓசையை நலிபு வண்ணம் என்று தொல்காப்பியர் குறிப்பதும் மேற்கண்ட செய்தியை வலிவு படுத்துகின்றன.

ஆய்தம், சில இடங்களில் உயிராகவும், சில இடங்களில் மெய்யாகவும் நிற்கிறது. அதனால் இவ்வெழுத்து தனிநிலை என்றும் அலி எழுத்து என்றும் குறிக்கப்பட்டது. ஆய்தம்,

அற்றார் அழிபசி தீர்த்தல் அஃதொருவன்
பெற்றான் பொருள்வைப் புழி

என்ற இடத்து உயிராகவும்,

தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலின் தோன்றாமை நன்று

என்ற இடத்து மெய்யாகவும் நிற்கிறது.

'ஈண்டுப் புள்ளி என்றதனான் ஆய்தமும் மெய்யாயிற்று' என்று ஓரிடத்தில் கூறும் நச்சினார்க்கினியர் (தொல். எழுத்து. 88) பிறிதோரிடத்தில் 'ஏனை ஒற்றுகள் போல உயிர் ஏறாது ஓசை விகாரமாய் நிற்பது' என்று குறிப்பிடுவர். அவிநயனாரும் (15), பவணந்தியும் (92), வைத்திய நாத தேசிகரும் (இலக்கண விளக்கம். 20), வீரமா முனிவரும் (தொன்னூல் விளக்கம் 18) அளபெடுக்கும் ஒற்று வரிசையில் ஆய்தத்தையும் சேர்த்து உரைப்பர். ஆய்தத்திற் குள்ள மெய்த் தன்மை இதனாலும் உறுதியாகிறது. புள்ளி, ஒற்று என்ற மெய் யெழுத்துகளுக் குரிய பெயர்கள் ஆய்தத்திற்கும் வழங்கப்படுகின்றன.

ஆய்த வடிவம் : ஆய்த வரி வடிவம் பற்றி அவிநயனார் குறித் திருத்தல் வேண்டும். அக்குறிப்புள்ள நூற்பா கிடைக்க வில்லை. எனினும் புள்ளி, ஒற்று என்பன ஆய்தத்தின் பிற பெயர்கள் என்று இந் நூற்பாவில் அவர் குறிப்பது பார்வைக் குரியது.

குறியதன் முன்னர் ஆய்தப் புள்ளி
உயிரொடு புணர்ந்த வல்லாறன் மிசைத்தே

என்று தொல்காப்பியரும் (38), பவணந்தியும் (நன். 90), வைத்திய நாத தேசிகரும் (இ.வி. 17) குறிப்பிடுவர். இக் குறிப்பில் 'ஆய்தப் புள்ளி' என்றிருப்பதும், தொல்காப்பிய இரண்டாம் நூற்பாவில், 'ஆய்தம் என்ற முப்பாற் புள்ளி' என்றிருப்பதும் ஆய்தத்தின் வடிவு

புள்ளி வடிவு என்பது பெறப்படுகிறது. 'ஆய்தப் புள்ளி வல்லாறன் மிசைத்தே' என வரும் தொல்காப்பிய நூற்பாவில் மிசைத்து என்பது அஃறிணை ஒன்றன்பால் குறிப்பு வினைமுற்று ஈருக இருப்ப தால் ஆய்தம்—என ஒரு புள்ளியிட்டே எழுதப்பட்டது என்று கருத இடனுண்டு. அங்ஙனம் கருதினுல், 'ஆய்தம் என்ற முப்பாற் புள்ளி' என்பதற்குக், 'குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்ற மூன்றும் பக்கத்தில் பெறும் புள்ளி' என்று பொருள் கொள்ளுதல் வேண்டும். காலப் போக்கில் இரண்டு புள்ளியினை உடையதாகவும், பிற்காலத்தில் மூன்று புள்ளியினை உடையதாகவும் ஆய்த வரி வடிவம் மாற்றம் பெற்றிருத்தல் வேண்டும்.

ஆய்த இடம் : உயிர், மெய், (குற்றியலிகரம், குற்றியலுகரம்) ஆய்தம் என்பது தொல்காப்பிய முறை. ஆய்தத்தின் உயிர், மெய் எழுத்துகளின் இடைத்தன்மை உணரப்பட்ட காலத்தில், உயிர், ஆய்தம், மெய், சார்பெழுத்து என்று இடம் பெற்றிருத்தல் வேண்டும். 'நடுவாய்தம்' என்ற வீரசோழியமும் (1.2), 'ஆய்தம் இடைமேவும்' என்ற நேமிநாதமும் (1.2.3) இதனைக் காட்டுகின்றன. ஔவை யாரின் ஆத்தி சூடியும் உயிரை அடுத்து ஆய்த வரிசையைப் போற்றுகிறது.

## கூட்டெழுத்து

**7 உவ்வாடு............ஆகும்**

பொ-ள் : அகரத்தின் பின் உகரமோ, வகரமோ வரின் (அ+உ, அ+வ்) ஔகார இயல்புடையதாகும்.

வி-ரை : ஔ என்பது 'அவ்' என்றும் 'அஉ' என்றும் முன்பே எழுதப்பட்டிருத்தல் வேண்டும் என்பதை இந்நூற்பா அறி விக்கிறது. தொல்காப்பியர் தொடங்கி முத்து வீர உபாத்தியாயர் வரை இக்கருத்தைத் தம் நூலுள் போற்றி யுள்ளனர். இவற்றுல் 'ஔ' என்பது தனியெழுத்து என்று எண்ணப்பட்டதைவிடக் கூட்டெழுத்து என்றே கருதப்பட்டது எனத் தெரிகிறது. ஐகாரத்தின் நிலைமையும் இதுதான். ஐ ஔ என்ற இரண்டும் தமிழ் நெடுங்கணக்கில் வேண்டாதவை; விலக்கத் தக்கவை என்பதை இந்நூற்பா வலிவு படுத்துகிறது எனலாம்.

## பிறப்பு

**8 ஆற்றல் உடை.......பிறப்பே**

பொ-ள் : சொல்லுதற்குத் திறன் வாய்ந்த உயிரினுடைய முயற்சியால் உள் நின்ற காற்று இயங்க, செவிப் புலனும் ஒலி அணுத் திரளுடன் பொருந்தி வெவ்வேறு எழுத்தாகிய ஒலிகளாகத் தோன்றுதல் பிறப்பு எனப்பெறும்.

வி-ரை : மொழிக்கு அடிப்படை அணு என்று அவிநயனுர் குறிப்பது தலைமை வாய்ந்தது. அவிநயனுரைச் சைனர் என்று முடிவு செய்யத் துணை நிற்கும் வலிமையான சான்று இதுவாகும். ஏனெனில், மொழிக்கு அடிப்படை அணு என்பது சைனர் கோட்பாடு. மொழிக்கு அடிப்படை மாயை (நாதம்) என்பது சைவர் கோட்பாடு. இது சைவராகிய சங்கர நமச்சிவாயர் நன்னூல் உரையாலும், (எழுத்தியல். 3) தருமபுர ஆதீனப் புலவராகிய வைத்தியநாதர் கூற்றாலும் (இலக்கண விளக்கம். 3) தெளிவாகிறது. ஆதலின் அணுவே மொழிக்கு அடிப்படை என்ற கருத்தை அவிநயனுர் உரைப்பதால், அவர்தம் சமயம் சைனம் என்பது உறுதியாகிறது. பவணந்தியும் இவரைத் தழுவியே 'மொழிமுதற் காரணமாம் அணுத்திரள்' என்றனர் என்பது மயிலைநாதர் உரையால் புலனாகிறது.

## மெய்யெழுத்துகள் பிறக்குமுறை

9 முதலிடை......பிறக்கும்

பொ-ள் : க, ங, ச, ஞ, ட, ண, த, ந, ப, ம என்ற வன்மை, மென்மை மெய் எழுத்துகள் முறையே, பிறக்குமாறு : அடி அண்ணமும் அடி நாவும் உற கங பிறக்கும்; இடை அண்ணமும் இடை நாவும் உற சஞ பிறக்கும்; நுனி அண்ணமும், நுனி நாவும் உற டண பிறக்கும்; பல்முதல் மருங்கை நாநுனி தீண்டத் தந பிறக்கும். இதழ்கள் இயையப் பம பிறக்கும்.

யரல வழள என்ற இடையின எழுத்துகள் பிறக்குமாறு : அடி நா அடி அண்ணத்தைச்சார யகரம் பிறக்கும்; அண்ணத்தை நுனி நாத் தடவ ரகரமும் ழகரமும் பிறக்கும்; அன்பல்லை நாவிளிம்பு புடைத்து ஒற்ற லகரம் பிறக்கும்; அண்ணத்தை நாவிளிம்பு வீங்கி மெல்ல உற ளகரம் பிறக்கும்; மேற்பல்லானது கீழிதழை உற வகரம் பிறக்கும்.

வி-ரை : யரல வழள என்ற இடையின எழுத்துகளின் பிறப்பையும் உள்ளடக்கி மும்மை எனக் குறித்தனர் போலும். அங்ஙனம் கொள்ளின், 'முதலிடை நுனி நா...மூக்கு' என்பன பிறப்பு உறுப்புகளைக் குறிக்கின்றன வாகலாம். உள்ளிருந்து புறப்பட்டு வரும் காற்று, வாய்ப் பகுதியில் முதலில் தீண்டுவது அடி யண்ணம் அடி நாவாகும். அது தொடர்ந்து இடை, நுனி, பல், இதழ் என அமைதல் இயல்பான ஒலிப்புமுறை. இந்நுட்பத்தை ஓர்ந்து அவிநயனுர் குறித்திருப்பது மகிழத் தக்கது. தொல்காப்பியர், பவணந்தி முதலானோர் கங, சஞ, டண என்ற மூன்றையே தொடர்பாகக் குறித்தனர். ஆனல் அவிநயனுர் பமக்களையும் உள்ளடக்க இதழ் வரை குறித்திருப்பது நோக்குக.

ங, ஞ, ண, ந, ம ன என்பன மூக்கொலி பெறுதலை 'மூக்கின்' என்ற நூற்பாச் சொல் குறிக்கிறது போலும்.

## குற்றியலுகரமும் குற்றியலிகரமும்

### 10 வல்லெழுத் தாரோ.........புலவர்

பொ-ள் : நெடிலை, குறிலிணையை, குறில் நெடிலை, அடுத்தும், நெடிலொற்றை, குறிலிணை ஒற்றை, குறில் நெடில் ஒற்றை அடுத்தும், குற்றொற்றை அடுத்தும் வரும கு சு டு து பு று என்ற ஆறும் குற்றிய லுகரங்களாம். இவற்றிற்குரிய ஒலியளவு அரை மாத்திரை ஆகும். கு சு டு து பு று என்ற குற்றியலுகர ஈறுகளின் முன் யகர முதன் மொழி வந்து புணருமானல் குற்றியலிகரம் தோன்றும். அவ்வாறு தோன்றும் குற்றியலிகரமும் அரை மாத்திரையில் ஒலிக்கும் என்று கூறுவர் அறிஞர்.

எ-டு :

| | | | |
|---|---|---|---|
| 1 | நெடிலை அடுத்த குற்றிய லுகரம் | | —ஆடு |
| 2 | நெடிலொற்றை | ,, | —பாட்டு |
| 3 | குறிலிணையை | ,, | —கடுகு |
| 4 | குறிலிணை ஒற்றை | ,, | —அடக்கு |
| 5 | குறில் நெடிலை | ,, | —தராசு |
| 6 | குறில் நெடில் ஒற்றை | ,, | —அணைப்பு |
| 7 | குறில் ஒற்றை | ,, | —உப்பு. |

வி-ரை : இவ்வாறு கூறுவார் குறிப்பிடும் நூற்பா பின் வருமாறு :

நெடிலே குறிலிணை குறில் நெடில் என்றிவை
ஒற்றொடு வருதலொடு குற்றொற் றிறுதியென்
றேழ்குற் றுகரக் கிடனென மொழிப.

இந்நூற்பா, யாப்பருங்கலக் காரிகை உரையில் மேற்கோளாக எடுத்தாளப் பெற்றுள்ளது சிவஞான சுவாமிகள் இந்நூற்பாவை எடுத்துக் காட்டித் தம் நன்னூல் விருத்தி உரையில் மறுப்புரையும் நல்கினர். அவர் நல்குவதாவது :

''அவ்வாறு ஏழிடம் எனக் கோடும் என்பார்க்குப் பிண்ணாக்கு சுண்ணாம்பு பட்டாங்கு விளையாட்டு இறும்பூது முதலியனவும், ஆய்தம். தொடர்ந்தனவும், நெட்டொற் றிறுதி நெடிலிறுதிக் குற்று கரம் முதலியனவும் குற்றொற் றிறுதிக் குற்றுகரமுமாய் அடங்கு மேனும், போவது வருவது ஒன்பது முதலியன அடங்காமை அறிக,

நெடில் முதலாயின ஈற்றயலில் நிற்றல் வேண்டுமென யாப்புற வின்மையின், முதற்கண் நிற்பினும் ஈற்றுகரம் அவற்றிறுதியாதல் அமையும் எனக் கொண்டு, போவது முதலியனவும் நெடிலிறுதி முதலி யனவாய் அடங்கும் என்பார்க்கும், அங்ஙனம் பாகுபடுத்துக் கருவி செய்ததனுல் போதப் பயனின்று என்பதாம் இது பிறர் நூற் குற்றம் காட்டல் என்னும் மதம்''.

சிவஞான சுவாமிகள் எடுத்துக் காட்டி மறுக்கும் நூற்பா, யாப்பருங்கலக் காரிகையிலும் மேற்கோளாய்க் காணப் படுத லாலும், யாப்பருங்கலக் காரிகை மூல நூலாசிரியர், உரையாசிரியர் இருவருமே சைனச் சான்ரோர் ஆதலானும், அவர் அவிநயம் முதலான சைன நூலை மேற்கோளாய் எடுத்துக் காட்டுவர் ஆதலானும், குற்றியலுகரத்திற்கு ஏழிடன் என்று கூறிய நூல் அவிநயம் ஒன்றே ஆதலானும் மேற்கண்ட 'நெடிலே......மொழிப' என்ற நூற்பா, அவிநய நூற்பா என்று கருத இடம் இருக்கிறது. பல்காயனும் இக் கருத்தினரே. ''எழுவகை இடத்தும் குற்றிய லுகரம், வழுவின்றி வருஉம் வல்லாறு ஊர்ந்தே'' என்பது பல்காயம்.

நெடிற்ருெடர்க் குற்றியலுகரம், ஆய்தத் தொடர் குற்றியலுகரம், உயிர்த் தொடர்க் குற்றியலுகரம், வன்ருெடர்க் குற்றியலுகரம், மென்ருெடர்க் குற்றியலுகரம், இடைத் தொடர் குற்றிலுகரம் என்று ஆறு என்பர். (தொல். 407, நன். 94, இ. வி. 16, முத்துவீரியம். ப. 227).

| | | | |
|---|---|---|---|
| 1 | நெடிருெடர்க் குற்றியலுகரம் | (6)—காடு | |
| 2 | ஆய்தத் தொடர்க் | ,, | (6)—எஃகு |
| 3 | உயிர்த் தொடர்க் | ,, | (6)—விறகு |
| 4 | வன்ருெடர்க் | ,, | (6)—கற்பு |
| 5 | மென்ருெடர்க் | ,, | (6)—நண்டு |
| 6 | இடைத் தொடர்க் | ,, | (6)—சார்பு |

36

டு, று என்பன, இடையெழுத்தை அடுத்துக் குற்றியலுகரமாக வருதல் இல்லை. ஆதலின் 36 என்ற கணக்குச் சரியன்று

## மொழி முதல் எழுத்துகள்

11 க ச த ப ஙவ்வே.......என்ப

பொ-ள் : க ச த ப ங என்பன மொழி முதலிலும், இடையிலும் வரும். ட ற என்பன மொழியிடையில் மட்டும் வரும், ண ன ர ழ

லள என்பன மொழியிடையிலும், இறுதியிலும் வரும். ஞ ந ம ய வ என்பன மொழிமுதல், இடை, கடை என மூவிடங்களிலும் வரும் என்பர் அறிஞர்.

வி-ரை : மெய்யெழுத்துகள் சொல்லில் இடம்பெறு மாற்றை இந்நூற்பா புது முறையில் விளக்குகிறது. ஏனைய இலக்கண நூல்கள் மொழி முதல் எழுத்துகள், மொழியிடை எழுத்துகள், மொழியிறுதி எழுத்துகள் என்று மூன்று பிரிவாகப் பிரித்துத் தனித் தனியே உரைத்தன. நன்னூலும் (57), இலக்கண விளக்கமும் (2) முதல்நிலை, இடைநிலை, ஈற்றுநிலை என்ற மூன்றையும் எழுத்திலக் கணப் பாகுபாடுகளாகவே போற்றின. அவிநயனார் ஒரே நூற் பாவில் பதினெட்டு மெய்களும் வருமாற்றைச் சுருங்க விவரித் துள்ளார்.

மொழிமுதலிலும், இடையிலும் வருவன : க ச த ப ங

எடுத்துக்காட்டு :

கடல், சங்கு, தங்கு, பண், (அங்)ஙனம்; பக்கம், தச்சன், பொருத்தம், செப்பு, ஈங்ஙனம்.

மொழி இடையில் வருவன : ட ற

எ-டு : நட்பு, கற்பு

மொழி இடையிலும், கடையிலும் வருவன : ண ன ர ழ ல ள

எ-டு : எண்ணம், நன்று, ஆர்ப்பு, ஆழ்ச்சி,
முல்லை, கள்ளி;
கண், அவன், சேர், வாழ், இல், கள்

மொழி, முதல், இடை, கடையில் வருவன : ஞ ந ம ய வ.

எ-டு : (1) ஞமலி, நலம், மடல், யவனர், வஞ்சி

(2) கஞ்சுகம், கந்தி, கம்பியன், பொய்யாமை, பௌவம்.

(3) உரிஞ், பொருந், படம், பாய், தெவ்

சகரம், ஙகரம் என்பவற்றை மொழி முதலாக அவிநயனார் போற்றியிருப்பது இலக்கண வரலாற்றுச் சிறப்பு வாய்ந்தது. ஙகரத்தை மொழி முதலாகப் போற்றும் கொள்கையை முதலிற்

கூறியவர் பவணந்தி எனக் கருதப்பட்டு வந்தது. இந்நூற்பாவால் அவிநயனாரே அதற்கு மூல முதல்வர் எனத் தெரிய வருகிறது. எவ்வெவ்விடங்களில் 'ங' மொழி முதலாகும் என்று அவிநயனார் தெளிவுபடுத்த வில்லை. எனினும் பவணந்தி பலவற்றில் அவிநயனாரைப் பின் பற்றியவர் ஆதலால் அவர் கூறியது, அவிநயனார் கூற்றும் ஆதல் கூடும்.

சுட்டு யா எகர வினா அவ்வை
ஒட்டி ஙவ்வும் முதலா கும்மே

என்பது நன்னூல் (106). இந்நூற்பாவிற்கு உரைகாரர் சங்கர நமச்சிவாயர் தரும் விளக்கம் ஈண்டுக் கருதத் தக்கது.

''ஙனம் என்பது, இடத்தினையும் தன்மையினையும் உணர்த்தும் பல பொருள் ஒரு சொல்லாய் வரினும், தனித்து வரும் தன்மைய தன்றி முடவன் கோலூன்றி வந்தாற் போலச் சுட்டு வினாவாகிய இடைச் சொற்களை முன்னிட்டு வருதலான் 'வழி' என்றும், ஏனைய பெயர்கள் போல முதலாகாமையின் அவ்வொடு என்னாது ஒட்டி என்றும், ஒரு வாற்றான் முதலாதலின் இழிவு சிறப்பாக ஙவ்வும் என்றும் கூறினார்.''

ட, ண, ய, ர, ல, ழ, ள, ற, ன என்பனவற்றை மொழி முதலாகக் கூற முனையாத ஔவையார் இடம்பட வீடெடேல், இணக்கம், இயல்பு, அரவம், இலவம், அழகு, இளமை, அறன், அனந்தல் என இரண்டாம் எழுத்தாகப் போற்றினர். இவ்வாறு போற்றியவர், ஙகரத்தை அவ்வாறு போற்றாது மொழி முதல் எழுத்தாகப் போற்றினர் என்பது 'ஙப் போல் வளை' என்பதால் தெளிவாகும். பல இலக்கியங்களில் ஆசிரியராகிய பாம்பன் குமரகுருதாச சுவாமிகள் சண்முகக் கவசத்தில் (14), 'ஙகரமே போல் தழீஇ ஞானவேல் காக்க' என்றனர். இவற்றால், ங மொழி முதல் எழுத்து என்று ஒரு கொள்கையினர் இருந்தனர் என்றும், மொழி முதல் எழுத்து அன்று என்று ஒரு கொள்கையினர் இருந்தனர் என்றும் தெரிய வருகின்றன. மொழி முதல் எழுத்தே 'ங' என்ற கொள்கையை முதலில் மொழிந்தவர் அவிநயனார் என்பதும், பவணந்தி முதலாயினோர் அவரைத் தழுவினர் என்பதும் புலனாகின்றன.

## மாத்திரை இலக்கணம்

12 **கண்ணிமை......எனவே**

பொ-ள் : எழுத்துகளை ஒலித்தற்குரிய கால அளவைக் கணிக்க வேண்டியதற் குரிய கருவி இந்நூற்பாவில் கூறப்பட்டது. கண்

ணிமைத்தலும், கைநொடித்தலும் மாத்திரை அளவை அறியத் துணை செய்யும் கருவிகளாம்.

வி-ரை : கண்ணிமை—இமை என்ற கண் உறுப்பை ஈண்டுக் குறிக்கவில்லை. இமைத்தல் என்ற தொழிலைக் குறித்துப் பின் அதற்கு ஆகும் காலத்தைக் குறித்தது. நொடி என்பது நொடித்தல் தொழிலைக் குறிக்கவில்லை. நொடித்தற் காகும் ஓசையைக் குறித்து, அதற்கு ஆகும் காலத்தைக் குறித்தது. கண்ணிமை—அனிச்சைச் செயல்; கைந்நொடி — இச்சைச் செயல். இச்சைச் செயலினும், அனிச்சைச் செயலே பிறழ்ச்சி இல்லாதது. ஆதலால், அனிச்சைச் செயலான கண்ணிமைப் போது முதலிற் கூறப்பட்டது.

## எழுத்துகள் பெறும் மாத்திரை

13 பதினெண்.........உரித்தே

பொ-ள்: ககர முதல் னகர ஈருக உள்ள பதினெட்டு மெய்யெழுத்துகளும் அரை மாத்திரையைப் பெறும். மகரக் குறுக்கமும், ஆய்தக் குறுக்கமும் அரை மாத்திரையினும் குறைந்த கால் மாத்திரையைப் பெறும்.

வி-ரை : 'அதுவே' என்ற சுட்டு, இந்நூற்பாவிற்கு முன், எழுத்துகள் பெறும் மாத்திரை அளவைக் கூறும் அவிநய நூற்பா இருந்தமையைக் காட்டுகிறது. அந்நூற்பாவில், குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்பன அரை மாத்திரை பெறும் என்ற செய்தி இருந்திருத்தல் வேண்டும். அவற்றை ஒட்டி பதினெட்டு மெய்யும் அரை மாத்திரை பெறும் என்பது இந்நூற்பாவின் கருத்து. 'அரை தேய்தலும் உரித்தே' என்பதால் மகரக் குறுக்கம் எனவும், ஆய்தக் குறுக்கம் எனவும் பொருள் செய்யப் பெற்றன.

அரையளவு குறுகல் மகரம் உடைத்தே. (தொல். 13)
காலம் குறுகும் ம, ஆய்தம். (நேமிநாதம்.5)
கால் குறள் மஃகான் ஆய்தம் மாத்திரை. (நன். 99)
அஃகிய மவ்வும் ஆய்தமும் காலே. (தொன். விளக்.19)
அஃகிய மகரமும் ஆய்தமுங் காலே. (மு.வீ.எழு.102)

என வரும் பிற தமிழிலக்கண நூற்பாக்களும் இச் செய்தியை வலிவு படுத்துகின்றன.

## ஐ, ஔ மாத்திரை

14 அளபெடை.... ஆகும்

பொ-ள் : ஐகாரமும், ஔகாரமும் தனியாக ஒலிக்கப்படும் போதும், அளபெடையில் இசைக்கப்படும் போதும் நெடிலெழுத்திற் குரிய இரண்டு மாத்திரை பெறும். பிற இடங்களில் ஒன்றரை அல்லது ஒரு மாத்திரை அளவையே அவை பெறும்.

வி ரை : 'ஒன்றரை யாகும் ஐ ஔ' என்பது வீரசோழியம் (5). 'ஐ ஔ அளவு ஒன்றரை' என்பது நேமிநாதம் (5). ஐ ஔ என்ற இரண்டும் தனியாக ஒலிக்கப்படும போதும், அளபெடையில் நீட்டி இசைக்கப்படும் போதும் மட்டுமே இரண்டு அல்லது ஒன்றரை மாத்திரை பெறும். அவை சொற்களில் வரும் போது ஐகார ஔகாரக் குறுக்கங்க ளாகவே ஒலிக்கின்றன. சொற்களில் குறுக் கங்களாக இடம் பெறும் போது அவை ஒரு மாத்திரையே பெறு கின்றன. இச் செய்தி எல்லா இலக்கண ஆசிரியரும் ஒப்ப முடிந்தது.

ஓரள பாகும் இடனுமார் உண்டே. (தொல். 57)
ஒன்றே குறிலொடு ஐ ஔக் குறுக்கம். (நன். 99)
ஐ ஔக் குறுக்கம் குறில் ஒன்று (இ-வி. 24)
குறிலே ஐ ஔக் குறள் ஒற்றளபு ஒன்றே (தொன்.வி. 19)
ஐ ஔக் குறுக்கம் ஒற்றள பெடை ஒன்றே. (மு. வி. எழு. 100)

சொல்லில் இருந்து இயங்குவதுதான் எழுத்தின் வாழ்வு. ஐ ஔ சொல்லில் இருந்து இயங்கும் போது இரண்டு மாத்திரையைப் பெறுவ தில்லை. ஒரு மாத்திரையே பெறுகின்றன. இதனால்தான் தனிமை என்பதற்கு ஒருமாத்திரை என்று கூறப்பட்டது. தனிமை என்பதற்கு ஏகம், ஒருமை என்றும் பொருளுண்டு.

## அளபெடுக்கும் மெய்கள்

15 வன்மையொடு......ஒரோ வழி

பொ-ள் : வன்மை எழுத்துகளாகிய க ச ட த ப ற, இடைமை மெய்களாகிய ர, ழ என்ற எட்டு மெய்களும் நீங்கலாக, எஞ்சிய ங ஞ ண ந ம ன, ய ல வ ள என்ற பத்து மெய்களும், ஆய்த எழுத்தும் ஒரு சில இடங்களில் அளபெடுக்கும்.

வி-ரை : மரங்ங் கொட்டி (மலைபடுகடாம் 200), கண்ண், தண்ண் (மலைபடு. 352) செய்ம்ம் (நற்றிணை 98-2) பசும்ம் (மணிமேகலை. 27-151) பொன்ன் (மணிமேகலை 27-157) என

ஒற்றள பெடை மிக அருகியே வழங்குகின்றன. அதனுற்ருன் அவிநயனுர், 'ஒரோ வழி' என்று நூற்பா அமைத்தனர். இவ்வொற்றள பெடையும் உலக வழக்கில் இல்லை போலும். செய்யுளில் மட்டுமே வழங்குவது என்ற கருத்துப் பட, தொல்காப்பியர் செய்யுளியலில் மட்டுமே (330) போற்றினர்.

அவிநயனுர் நூற்பாவைக் கற்ற பவணந்தி தம் நன்னூலில் சில விரிவுகளுடன் போற்றிக் கொண்டார். இக் கருத்துப்பட மயிலைநாதர் உரை அமைத்தல் காண்க (நன். 59).

ஙஞண நமன வயலள ஆய்தம்
அளபாம் குறிலிணை குறிற்கீழ் இடைகடை
மிகலே அவற்றின் குறியாம் வேறே. (நன்னூல். 92).

ஆய்தத்தை ஒற்றள பெடையுடன் சேர்த்துக் காட்டியது பார்வைக் குரியது. 'ஒற்றளபு ஆறேழ்' (6×7=42) என்றனர் பவணந்தி (நன். 61). 42 இடங்களில் ஒற்றளபெடை வரும் என்பது கணக்கில் உள்ளதே தவிர, சான்றுகள் இல்லை. அன்றியும் இவ்வொற்றளபெடை பிற்காலத்தில் முற்றும் வழக்கு வீழ்ந்தது.

## ஒற்றளபெடை அலகு இடப் பெறுதல்

16 ஒற்றள பெறா......இலவே

பொ-ள்: தனி ஒற்று அலகில் கணக்கிடப்படுவதில்லை. ஒற்றள பெடை மட்டுமே அலகிடப் பெறும்.

வி-ரை: தனி ஒற்று அலகிடப் பெருது என்பது யாப்பு நூல்களால் விளக்கமாம்.

தனிநிலை ஒற்றிவை தாமல கிலவே
அளபெடை அல்லாக் காலை யான

என்பது யாப்பருங்கலம் (3). அவிநயம் 49ஆம் நூற்பாவும் இக்கருத்தினதே.

அம்பொ ரைந்து டைய்ய காமன் ஐயன் என்ன அந்தணன்
நம்பு நீரர் அல்லர் நன்கு ரங்கு நீரர் ஆயினும்
தங்கு ரவ்வர் தாங்கொ டுப்பின் நெஞ்சு நேர்ந்து தாழ்வர்தாம்
பொங்க ரவ்வ அல்கு லாரே ளப்பு கன்று சொல்லினுன்

என்பது சிந்தாமணிச் செய்யுள் (1997). இச்செய்யுளில், உடைய-உடைய்ய என்றும், குரவர்–குரவ்வர் என்றும், அரவ–அரவ்வ என்றும் அமைந்துள. ஒற்று இல்லாத காரணத்தால் ஈண்டு ஓசை குறைந்தது. அதனால் ஓர் ஒற்று இடையே மிகுவிக்கப்பட்டு யாக்கப் பெற்றது.

மைதீர் ஒற்று
இன்றியும் செய்யுள் கெடின் ஒற்றை உண்டாக்கும்
குன்று மேல் ஒற்றளபும் கொள்

என்பது மாபுராணச் செய்யுள் (நச்சினார்க்கினியர் தொல். உரை. நூன்மரபு 6, செய்யுளியல் 18; இலக்கண விளக்கம் 20). இந்நூற்பாவானும் அலகு பெறாத ஒற்று, அளபெடையாயின் அலகு பெறுவது அறியப்பட்டது. அதனாற்றான் ஒற்றளபெடை சார்பெழுத்து என ஒற்றின் வேறாகக் கொள்ளப்பட்டது போலும்.

## அல் ஈறு அன் ஈறு ஆதல்

17 அல்வினை......பெறுமே

பொ-ள்: அல் ஈற்று வினைச் சொல் அன்னீற்றுச் சொல்லாகத் திரியவும் பெறும்.

வி-ரை: கூறுவல் என்பது கூறுவன் என்று அமையும். 'பந்தம் அடி தொடைப் பாவினம் கூறுவன்' என வரும் காரிகைக் கட்டளைக் கலித்துறைப் (1) பாச் சொல்லை எடுத்துக் காட்டுவர் நேமிநாத உரைகாரர். திரியவும் பெறும் என்று எதிர்மறை உம்மையை ஆளுவதால் திரியாமை பெரும்பான்மை.

தொல்காப்பியர் அல் என்பதைத் தன்மை ஒருமை வினைமுற்று விகுதி என்றனர் (சொல். 207). பவணந்தியும் (நன். 140), வைத்திய நாத தேசிகரும் (இ.வி. 56), அல் என்பது வியங்கோளிடத்து உடன்பாட்டின் கண்ணும், எதிர்மறையின் கண்ணும், உண்ணல் என முன்னிலை ஏவல் ஒருமை முற்றின் கண்ணும் வரும் என்றனர். உரையாசிரியரும், 'மகன் எனல் மக்கட் பதடி எனல்' என்ற திருக்குறளைச் (196) சான்றாய்க் காட்டினர். அவிநயனாரோ, அல்லின் திரிபு அன் என்றனர். அல் ஈறு வியங்கோளில் மட்டுமின்றித் தன்மை ஒருமையிலும் வரும் என்பது இவர் கருத்துப் போலும்.

## எழுத்துக் குற்றம்

18 முன்னிலை......யான

பொ-ள்: முன்னிலை நெடிலிலும், ஆவின் பின்னும் னகர ஒற்று மிகப் பெறும்.

வி-ரை : பார்க்க : 103ஆம் நூற்பா உரை. நேமிநாதத்திலும், யாப்பருங்கலத்திலும், யாப்பருங்கலக் காரிகையிலும் மேற்கோளாய் இடம் பெற்றிருக்கும் இந்நூற்பா சிறு சிறு பாட வேறுபாடுகளுடன் அமைந்துள்ளது. ஆழ்ந்து பார்த்ததில் இது ஒன்றே என்று தெரிய வருகிறது.

# சொல்லதிகாரம்

## சொல்லதிகாரப் பாகுபாடு

19 **திணைபால்...... சொல்**

பொ-ள் : திணை, பால், மரபு, வினு, செப்பு, இடம், சொல் ஆகியவற்றின் வழாநிலை, வழு வமைதி, வினை, பெயர், வேற்றுமை, காலமயக்கம், எச்ச இயல் என்ற பாகுபாடுகளைக் கொண்டு அவிநயனுர், சொல்லதிகாரத்தை ஆராய்ந்தார்.

வி-ரை : இந்நூற்பா அவிநயனுர் இயற்றியது அன்று. அவர் சொல்லதிகாரத்தை எவ்வாறு பகுத்தார் என்பதை வீரசோழிய உரையாசிரியர் இவ்வாறு எடுத்துரைக்கிருர். அவிநயக் கருத்துத் தொகுப்பில் இதுவும் பயன்படும் என்பதால் ஈண்டு எடுத்தளிக்கப் பெற்றது.

எழுத்ததிகாரத்தைப் பன்னிரு பிரிவாகப் பிரித்துக் கொண்டேன் என்று நூற்பா (57) யாத்த பவணந்தி, சொல்லதிகாரப் பாகுபாட்டைக் கூருது விட்டார். தொல்காப்பியரையும், பவணந்தியையும் கண் மூடிப் பின்பற்றிய இலக்கண விளக்க ஆசிரியரும் தம் சொல்லதிகார முகப்பில் கூருது விட்டார். ஆனல், அவிநயனுர் சொல்லதிகாரப் பகுப்பைக் கண்டார் என்பது மேற்கண்ட வீரசோழிய மேற்கோள் பாடலால் குறிப்பாக அறியப் படுகிறது.

திணை, பால், மரபு, வினு, செப்பு, இட வழுவமைதிகளும், வழாநிலைகளும் 'சொல்லியல்' என்ற இயலில் பேசப்பட்டது போலும். 'அணையாக்கவினைய பார்'—என்பதினும், 'கவினைய பேர்'—அழகை உடைய பெயரியல்—என்ற பாடம் இருத்தல் கூடும். கூடு மேல் பெயரியல், வேற்றுமை இயல், வினை இயல் (காலம் பற்றியது ஆதலின் கால மயக்கம் எனப் பெற்றது போலும்) எனப் பிற இயல்கள் பேசப் பட்டன போலும். இவற்றுள் கூறப்பெருமல் எஞ்சியவற்றை எச்ச இயலில் குறித்தார் போலும். எனினும், இடைச்சொல் உரிச்சொல் பற்றிய குறிப்பு ஈண்டு இடம் பெருமை வியப்பைத் தருகிறது.

## சொற் பாகுபாடு

20 அவைவதரம் பெயர்ச் சொல்......பயின்றே

பொ-ள் : சொல், பெயர்ச்சொல் லென்றும், தொழிற்சொல் என்றும் பயிற்சியில் இரண்டாக அடங்கும்.

வி-ரை : சொல், அடிப்படையில், பெயர், வினை என இரண்டே. பிற, இடை, உரிச் சொற்கள் முன்னவற்றைச் சார்ந்து தோன்றுவன. அதனால் இடை, உரிச் சொற்களைத் தனியே விதந்து கூறாது விட்டனரோ என்று ஐயம் தோன்றுகிறது. சொல்லாராய்ச்சி பற்றி 19ஆம் நூற்பாவிலும் இடை, உரி பற்றிய குறிப்பில்லாமை இவ்வை யத்தை உறுதி செய்கிறது.

சொல்லெனப் படுப பெயரே வினையென்று
ஆயிரண் டேன்ப அறிந்திசி னோரே

(தொல். சொல். 158)

பெயர், வினை என இரண்டாகும் (நன். 270, இ. வி. 171) எனப் பிறரும் தலைமைச் சொற்களாகப் பெயரையும் வினையையும் கூறிய பின்னரே ஏனைய இடை, உரிச் சொற்களைப் பேசுவர்.

## திணை வழுவமைதி

21 தன்மையோடு இசைந்தன.....அற்றே

பொ-ள் : தன்மை இடத்துடன் பொருந்திய முன்னிலையும் தன்மை இடமே ஆகும். படர்க்கையும் தன்மை யாகவே அமையும்.

எ-டு : நீயும் நின் படைக்கலமும் சாரீர்; அவனும் தன் களிறும் சேரும்.

வி-ரை : நீ—உயர்திணை; படைக்கலம் அஃறிணை; அவன்—உயர்திணை; களிறு—அஃறிணை; இவை மேற்கண்ட தொடர்களில் ஒன்றி அமைந்தமை காண்க. 'யானும் என் எஃகமும் சாறும்' என்பதைச் சேனாவரையர் காட்டுவர்.

தன்மைச் சொல்லே அஃறிணைக் கிளவிஎன்
றெண்ணுவழி மருங்கின் விரவுதல் வரையார்

என்பது தொல்காப்பியம் (கிளவி. 43).

என்னும் இருதிணையும் எய்தும்; அஃறிணையா
என்னி வியங்கோள்க இருதிணையும்—என்னினால்

தன்மையாம் அஃறிணையும் சொன்னமொழி தன்னினத்தை
உன்னி முடிதலும் உண்டு

என்பது நேமிநாதம் (சொல். 10).

## திணைபால் வழு அமைதிகள்

**22 உவப்பினும்........ வரையார்**

**பொ-ள்:** உவப்பு, உயர்வு, இழிப்பு, சிறப்பு என்ற நான் கிடத்தும் பாலும் திணையும் வழுவி மயங்கி வருதலை அறிஞர் விலக்கார்; ஏற்பர்.

**வி-ரை: உவப்பு:** தன் மகனை 'என் அம்மா வந்தாள்' என்று பெற்ற தாய் கொண்டாடுவது உவப்பு. 'இன்னே வருகுவர் தாயர்' (முல்லைப்பாட்டு, 15-16). இதன்கண் ஆண்பால், பெண்பாலாயிற்று.

**உயர்வு:** ஒற்றை ஆளைப் பார்த்து, 'அவர் வந்தார்' எனு மிடத்து உயர்வு. ஈண்டு ஆண்பால், பலர் பாலாயிற்று.

**இழிப்பு:** ஏவவும் செய்கலான் தான் தேறான் அவ்வுயிர்
போஒம் அளவும் ஓர் நோய் **(திருக்குறள், 848)**

என்றது இழிப்பினால் உயர்திணை ஆண்பால் ஒருமை, அஃறிணை ஒருமை ஆயிற்று. பெண் வழிச் செல்வானை நோக்கி, 'இவன் பெண்' எனுமிடத்து இழிவினால் ஆண்பால் பெண்பாலாயிற்று.

**சிறப்பு:** 'தம் பொருள் என்ப தம்மக்கள்' (திருக்குறள். 68) என்பதில் 'மக்கள்' என்ற உயர்திணை, சிறப்பினால் 'பொருள்' என அஃறிணை ஆயிற்று. 'தாயாகித் தலையளிக்கும் தண்துறை ஊர' (யா.கா.மேற்கோள்) எனுமிடத்தில் தலைவன் என்ற ஆண்பால், சிறப்பால் 'தாய்' எனப் பெண்பாலாகக் கூறப்பட்டமை காண்க.

உவப்பை முதலாகத் தனித்து எடுத்துக் காட்டிய முதல்வர் அவிநயனாரே. பவணந்தி செறல் என்ற ஒன்றையும் கூட்டி

உவப்பினும் உயர்வினும் சிறப்பினும் செறலினும்
இழிப்பினும் பால்திணை இழுக்கினும் இயல்பே. (நன். 379)

என்று காட்டினர். வைத்தியநாத தேசிகர், தொல்காப்பியர் கூறிய 'குடிமை......'முதலியவற்றை (தொல். சொல். 56, 57) மனத்துள் கொண்டு, சொல்நோக்கு என்ற ஒன்றைக் கூட்டி நன்னூல் வழி மொழிந்தனர்.

உவப்பினும் உயர்வினும் சிறப்பினும் செறலினும்
இழிப்பினும் சொல்நோக்கினும் திணைபால் அவை
வழுக்கினும் வழுஎன வரையார் என்ப

என்பது இலக்கண விளக்கம் (299).

## வண்ணச் சினைச் சொல்

23 முதலொடு குணம்.........செய்யுளாறே

பொ-ள் : அடை சினை முதல் என்று முறையே வண்ணச் சினைச்சொல் அமையும். வழக்கில் இரண்டு பண்படைகள் முதலை அடுத்து வரும். செய்யுளில் பண்படைகள் சினையை அடுத்து வரும்.

வி-ரை : செங் கால் நாரை—குணம் (அடை) சினை முதல் என்று அமையும். இவ்வாறன்றி சிறு (அடை) கருங் (அடை) காக்கை (முதல்) என்று அமைதலும் உண்டு. அவ்வாறு அமைதல் உலக வழக்கு. இதற்கு மாருக, சினைக்கு அடை வரப் பெறுதலும் உண்டு. அது செய்யுள் வழக்கில் மட்டுமே வரும்.

| *I* தொல். முறை | | | *II* வழக்கு | | |
|---|---|---|---|---|---|
| அடை | சினை | முதல் | அடை | அடை | முதல் |
| செம் | கால் | நாரை | இளம் | பெரும் | கூத்தன் |
| நெட் | டிலைத் | தெங்கு | சிறு | பைந் | தூவி |
| பெரும் | தலைச் | சாத்தன் | கரு | நெடுங் | கண் |

அடைசினை முதல்என முறைமூன்றும் மயங்காமை
நடைபெற் றியலும் வண்ணச் சினைச் சொல்

என்ற தொல்காப்பியத்துள் அவிநயனார் காட்டும் விரிவு இல்லை. பவணந்தி அவிநயனாரைப் பின்பற்றி இதனைப் போற்ற (408), வைத்தியநாத தேசிகர் வழிமொழிந்தார் (இ.வி. 314).

அடைசினை முதன்முறை அடைதலும் ஈரடை
முதலோ டாதலும் வழக்கியல் ஈரடை
சினையொடு செறிதலும் மயங்கலும் செய்யுட்கே.

(நன். 403, இ.வி. 314)

## பால் அறியும் முறை

24 திணையும் பாலும்.........விளக்கும்

பொ-ள் : விரவுத் திணைச் சொற்கள் பால் தெரியப் படாமல் இருக்கும்போது, கொண்டுமுடிக்கும் வினைச் சொல்லோ, பெயர்ச் சொல்லோதான் அவற்றது வேறுபாட்டை விளக்கும்.

வி-ரை : சாத்தன்-என்பது விரவுத் திணைச் சொல். இதனை வறிதே சொல்லத் திணை அறியப்படாது. சாத்தான் வந்தான் என்று வினைச் சொல்லாலோ, சாத்தான் ஒருவன் என்று பெயர்ச் சொல்லாலோ முடிக்கும் போதுதான் சாத்தன் ஆண்பால் ஒருமை என்றறிய முடிகிறது. சாத்தன் வந்தது, சாத்தன் ஒன்று என்று வினையையோ, பெயரையோ மாற்றிடின் அது அஃறிணை என்பது புலனாகிறது. எனவே, கொண்டு முடிக்கும் வினைச்சொல்லும், பெயர்ச் சொல்லுமே, விரவுத் திணையை வேற்றுமைப் படுத்துகின்றன. 'பாங்கார் பெயர் வினை கொண்டன்றிப் பால்தோன்றா' என்பது நேமிநாதம் (61).

அவிநய மூலத்தில் 37 என்றிருப்பது பிழை. 61 என்றிருத்தல் வேண்டும்.

## அலி முதலாயின

**25 அழிதூஉ வகையும்.........பாலே**

பொ-ள் : பெண் அவாய் ஆண் இழந்ததனைப் பேடி என்றும், ஆண் அவாய்ப் பெண் இழந்ததனை அலி என்றும் கூறுவர். பேடு என்பது பொதுப் பெயர். இவ்விருவகைப் பேடுகளும் உயர்திணையாயும் அன்றி அஃறிணையாயும் அமைக்கப்பெறும். அழிதூஉ என்பது பேடி என்ற பொருளது. அழிதூ வகையும் உயர்திணை அஃறிணைப் பால்களில் வரப்பெறும்.

வி-ரை : அலி, அழிதூ, பேடன் என்பன ஆண்பேடுகளை உணர்த்தும். மகண்மா, பேடி, என்பன பெண் பேடுகளை உணர்த்தும். ஆணாக இருந்து ஆண் தன்மையை விட்டுப் பெண்ணைப் போல நடை, உடை, உரை முதலியவற்றை மேற் கொண்டிருப்பது பேடியின் இயல்பு. மற்றொன்று : பெண்ணாக இருந்து அங்ஙனமே ஆண் தன்மையை விரும்புவது அலியின் இயல்பு.

பெண் அவாய் ஆண் இழந்த பேடி அணியாளா- (நாலடி 251)
பேடிகை வாளாண்மை- (திருக்குறள் 614)

வேயே திரள்மென்தோள் வில்லே கொடும்புருவம்
வாயே வளர்பவளம் மாந்தளிரே மேனி
நோயே முலை சுமப்பது என்றார்க்கு அருகிருந்தார்
ஏ! ஏ! இவளொருத்தி பேடியோ என்றார்
எறிமணிப்பூண் மேகலையாள் பேடியோ என்றார்

(சீவக சிந்தாமணி 652)

இலக்கண விளக்க ஆசிரியர் பேடு என்பது பொதுப்பெயர், அஃது அன் ஈறுபெற்றுப் பேடன் என்றாகி ஆண்பால் வினையையும், இகர ஈறு பெற்றுப் பேடி என்றாகிப் பெண்பால் வினையையும் கொண்டு முடியும் என்பர் (175). சிவஞான முனிவர் அவர் கருத்தைத் தம் இலக்கண விளக்கச் சூறாவளியில் மறுத்துரைப்பர். முனிவர்தம் மறுப்புப் பொருந்துவதே. பெண் அவாய் ஆண் இழந்த, ஆண் பேட்டைப் 'பேடி' என்றலே இலக்கிய மரபு. 'பெண் அவாய் ஆண் இழந்த பேடி' என நாலடியிலும் (251) 'பேடி கை வாள்' என்ற குறளடியிலும் (614) அது தெளிவாய் அமைந்துள்ளமை காண்க.

## உயர்திணையில் பால் பாகுபாடு

26 ஒருவன் ஒருத்தி.........பாலே

பொ-ள் : உயர்திணையிடத்து ஒருவன், ஒருத்தி, பலர் ஆகிய ஆண்பால், பெண்பால், பலர்பால் என்ற மூன்றும் அமையும். அவையும் படர்க்கை இடத்தே தெளிவாகும்.

வி-ரை : ஆண்பால் (ஒருவன்)—அவன் வந்தான்
பெண்பால் (ஒருத்தி)—அவள் வந்தாள்
பலர்பால் (பலர்) —அவர் வந்தார்

இப்பிரிவே எல்லாத் தமிழிலக்கணிக்கும் பொருந்துவது. நேமிநாத ஆசிரியரும், அவிநயனுரைத் தழுவி,

ஒருவன் ஒருத்தி பலர் ஒன்று பல என்று
மருவியபால் ஐந்தும் வருப்பின்-பொருவிலா
ஓங்கு திணைப்பால் ஒரு மூன்று ஒழிந்தவை
பாங்கில் அஃறிணைப்பால் ஆம்.

என்றனர் (நே. சொல் 3). ஆண் பெண் பலர் என அவரைச் சார்ந்து பவணந்தியும் (262), வைத்தியநாத தேசிகரும் (இ.வி. 163), தொன்னூல் விளக்கத்தாரும் (50-3), முத்து வீரிய ஆசிரியரும் (பெ—10) உரைத்தனர்.

படர்க்கையிடத்துத்தான் பால் தெளிவாதலின் 'படர்க்கைப் பாலே' என்றனர் போலும்.

படர்க்கை வினைமுற்று நாமம் குறிப்பின்
பெறப்படும் திணைபால் அனைத்தும் ஏனை
இடத்தவற்று ஒருமைப் பன்மைப் பாலே

என்பது நன்னூல் (265), இலக்கண விளக்கக் (167) கருத்து.

படர்க்கைப் பெயர்வினை வினைமுற்று இருதிணை பால்
அனைத்தும் பெறப்படும்

என்றனர் முத்து வீரிய ஆசிரியரும் (பெ. 12).

## அஃறிணைப் பால் பாகுபாடு

27 **ஒன்றன் படர்க்கை.........பால**

பொ-ள் : ஒன்றன்பால் படர்க்கை, பலவின்பால் படர்க்கை என்ற இரண்டும் அஃறிணைப் பிரிவுகளாம்.

எ-டு : அது வந்தது, அவை வந்தன.

வி-ரை : தொல்காப்பியர் ஒன்றறி சொல், பல அறி சொல் என வழங்குவர் (சொல். 3). ஒன்று பல என்பர் பவணந்தி. பிறரும் பவணந்தியை வழி மொழிவர் (நன். 263, இ. வி. 164, தொ. வி. 50-4, மு. வீ. பெ. 11). 'அன்றி' என்ற சொல்லை அவை என்ற பொருளில் ஆளுவது தொல்காப்பிய முறை. 'அன்றி அனைத்தும் பெயர்ப் பயனிலையே' என்பது (தொல். சொல். 66) காண்க. அவிநயனும் 'அன்றி' என்பதை அவை என்ற பொருளில் ஈண்டு ஆண்டுள்ளார். அஃறிணையில் ஆண் பெண் எனப்பகுத்தல் பெரும்பான்மை இல்லாமையின் ஒருமை, பன்மை என்ற பொதுப்பிரிவில் இலக்கணியர் அடக்கினர் போலும். அனைத்திலும் ஒருவன் அல்லது ஆண் அல்லது னஃகான் ஒற்று முதலிற் கூறப்படுவது ஆண்மையின் தலைமையை ஆளுமையைக் கருதிப் போலும்.

## கள் என்ற பன்மை விகுதி

28 **கள்ளென் இறுதி......மற்றே**

பொ-ள் : உயர்திணை, அஃறிணை என்ற இரண்டு திணைகளிலும் 'கள்' என்ற பன்மை ஈறு ஆளப் பெறும். பகர ஈறும், வகர ஈறும் மற்ற பன்மை ஈறுகளாம்.

| | | | |
|---|---|---|---|
| எ-டு : | அவர் செய்ப | — | உயர்திணையில் பகர ஈறு. |
| | அவை செய்வ | — | அஃறிணையில் வகர ஈறு. |
| | அவர்கள் கூடினர் | — | உயர்திணையில் கள் ஈறு. |
| | குயில்கள் பாடின | — | அஃறிணையில் கள் ஈறு. |

தொல்காப்பியர் கள் என்ற சொல் அஃறிணை பலவின் பால் இயற்பெயர்களில் மட்டுமே வரும் என்ற கருத்தினர்,

கள்ளொடு சிவணும் அவ்வியற் பெயரே
கொள்வழி உடைய பலவறி சொற்கே.

(தொல். சொல். 169)

காலப் போக்கில் 'கள்' என்ற பன்மை விகுதி, அஃறிணை இயற் பெயர் அன்றி, 'அவர்கள்' என்று உயர்திணைப் பெயரிலும், வருதலைக் கண்ட அவிநயனார், கள் இருதிணைக்கும் உரிய பன்மை விகுதி என்று விதி வகுத்தனர் போலும். உயர்திணை அஃறிணைப் பெயர்களில் மட்டுமன்றி, உயர்திணைப் பால் வினைகளின் ஈருகவும் 'கள்' இக்காலத்து வழங்குதல் காண்க. வருவார்கள், அவர்கள் பேசுவார்கள்.

## மூன்றும் வேற்றுமை

29 ஆலும் ஆனும்.........உருபே

பொருள் : மூன்றும் வேற்றுமை உருபுகளாம் ஆல், ஆன் என்பன.

எ-டு :

நாணால் உயிரைத் துறப்பர். (திருக்குறள் 1017)
பெண்தகையால் பேரமர்க் கட்டு. (திருக்குறள் 1083)

வி-ரை : 'ஒடுவெனப் பெயரிய வேற்றுமைக் 'கிளவி' என்றே குறித்தனர் தொல்காப்பியர் (சொ. 73). எனினும், அதன் பொருள்களைக் கூறுமிடத்தும் (சொல். 74), உருபு மயக்கம் கூறு மிடத்தும் (சொல். 108), ஆன் என்பதையும் மூன்றன் உருபாக உடன் பட்டனர்.

ஆன் என்பதே பண்டையது; ஆல் என்பது பின்னையது. இன், இல் என்ற ஐந்தனுருபுகளைப் போல.

ஆன் உருபும் ஒடு உருபும் பொருளில் உறழ்ச்சி உடையன. ஆன் உருபே ஒடு என்ற பொருளில் வரும்.

தூங்கு கையான் ஓங்கு நடைய
உறழ் மணியான் உயர் மருப்பின

(புறநானூறு 22. 1-2)

இப் புறப்பாடலில், ஆன் என்பது ஒடுவிற்குரிய உடனிகழ்ச்சிப் பொருளில் வந்துள்ளமை காண்க. இதனால்தான் அவிநயனார் 'ஆன்' எனக் கூறி அமைந்தனர் போலும். அல்லது ஆல் என்பதை உடனிகழ்ச்சிப் பொருளாக அடக்கினர் போலும்.

கருவிப் பொருளும், உடனிகழ்ச்சிப் பொருளும், பொருளைச் சற்றும் தொடர்பில்லாத இரு பொருளில் வேறுபடுத்துகின்றன. அவ்வாறு இரண்டு பொருளில் வேற்றுமைப் படுத்துவனவற்றை இரண்டு தனி வேற்றுமைகளாகக் கொள்ளாததன் நுட்பம் விளங்க வில்லை. உருபொற்றுமையால் ஒன்றாகக் கூறினர் என்பது சேனாவரையர் காட்டும் அமைதி. வியப்பென்ன என்றால் இந்தச் சிக்கல், சமற்கிருத மூன்றும் வேற்றுமையிலும் அமைந்துகிடப்பது. வேத மொழியாக இருந்த ஆரியம், தொடக்கத்தில் எழுதாக் கிளவியாக, செம்மைப் படாத மொழியாகவே இருந்தது; இந்தியா விற்கு வந்தது. இந்திய மொழியை அல்லது மொழிகளைப் பார்த்தே ஆரியம் செம்மையாக்கப் பட்டது. அதனால் 'சமஸ்கிருதம்' என்று பெயரும் எய்தலாயிற்று. அன்று இந்திய மண் முழுவதும் வழங்கிய தமிழை வைத்தே இலக்கணம் அமைக்கப் பெற்றதால், வேற்றுமை அமைவும் தமிழைப் போலவே அமைந்தது போலும்.

## ஐந்தாம் வேற்றுமை

80 **உவமம் நீக்கம்...... உருபே**

பொ-ள் : உவமம், நீக்கம், எல்லை, ஏது என்ற நான்கு பொருளில் ஐந்தாம் வேற்றுமை உருபு அமையும்.

எ-டு :

உவமப்பொருளில் — அரும் பொருள் பெறுநரின் விருந் தெதிர் கொண்டு (சிலம்பு 15.127)

நீக்கப் பொருளில் — தலையின் இழிந்த மயிரனையர் — மாந்தர், நிலையின் இழிந்தக் கடை (குறள்-964)

எல்லைப் பொருளில் — சென்னையின் தெற்குச் செங்கற் பட்டு

ஏதுப் பொருளில் — கல்வியின் பெரியன் கம்பன்

வி-ரை : வண்ணம் முதலாக பற்று விடுதல் ஈறாக இருபத் தெட்டுப் பொருளைத் தொல்காப்பியம் குறிக்கிறது முத்து வீரியம் அச்சம் முதலாக எட்டுப் பொருளைச் சுட்டுகிறது.

அச்சம் ஆக்கம் அதனோடு தீர்தல்
பற்று விடல் நீங்கல் ஒப்பு எல்லை ஏது
பிறவும் அதன் பொருள் நிலையா கும்மே

(முத்து வீரியம் பெ. 62)

பவணந்தி முறை மாற்றி அவிநயப் பொருளை அப்படியே எடுத்தாளுவர் (நன் 299).

ஐந்தாவதன் உருபு இன்னும் இல்லும்
நீங்கல் ஒப்பு எல்லை ஏதுப் பொருளே

(நன்னூல் 299)

## வினைச் சொல்

81 **காலம் அறிதொழில்......வேறே**

பொ-ள் வினைச் சொல் காலத்தை அறிவிக்கும். அது கருத்தாவுடன் பொருந்த அமையும். கருத்தாவிற்குத் தக பால் ஈற்றுச் சொற்கள் வேறுபடும்.

எ-டு :

அவன் கற்றான் — இறந்தகாலத் தொழிற்சொல்
அவன் கற்கின்றான் — நிகழ்காலத் தொழிற்சொல்
அவன் கற்பான் — எதிர்காலத் தொழிற்சொல்

அவன்/ள்/ர் என்பதற்குத் தக கற்கின்றான்/ள்/ர் என்றும், அது நின்றது, அவை நின்றன என்றும் கருத்தாவிற்குத் தக பால் ஈறுகள் வேறுபடு மாற்றை அறிக.

வி-ரை : வினைச் சொல்லைத் தொழிற்சொல் என்று குறிப்பது இவர் முறை [பார்க்க: அவிநயம் 20, 31]

வினைஎனப் படுவது வேற்றுமை கொள்ளாது
நினையுங் காலைக் காலமொடு தோன்றும்

எனவரும் தொல்காப்பியம் (வினை 1).

செய்பவன் கருவி நிலம் செயல்
செய்பொருள் ஆறும் தருவது வினையே

எனவரும் நன்னூல் (வினை 1). இவ்விரண்டையும் அவிநயக் கருத்துடன் ஒப்பிட்டோர்க.

## வினை முற்று

82 **பாலும் திணையும்......மொழிப**

பொ-ள் : பாலையும், திணையையும், இடத்தையும் காலத்துடன் கூட விளக்கும் சொல்லே வினைமுற்று என்பர் அறிஞர்.

எ-டு :

அவன் கற்றான் – வினைமுற்று

1. னஃகான் ஒற்று ஆண்பாலை உணர்த்திற்று.

2. னகர ஒற்று ஆண்பாற்குரியது என்பதால் உயர்திணையை உணர்த்திற்று.

3. ஆன் என்ற விகுதி ஈறு பெற்றுள்ளமையால் படர்க்கை இடம் உணர்த்திற்று.

4. றகர இடைநிலை இறந்தகாலம் உணர்த்திற்று.

வி-ரை : திணை பால் எண் இடம் ஆகியவற்றைத் தெரிநிலை வினைகள் துல்லியமாக உணர்த்தி விடுகின்றன. இது தமிழ் வினையின் சிறப்பு அமைப்பு. இவ்வமைப்பு ஆங்கிலம், மலையாளம் போன்ற பிறமொழிகளில் இல்லை.

| ஆங்கிலம் | மலையாளம் | தமிழ் |
|---|---|---|
| 1. He came | அவன் வந்து | வந்தான் |
| 2. She came | அவள் வந்து | வந்தாள் |
| 3. They came | அவர் வந்து | வந்தார் |
| 4. It came | அது வந்து | வந்தது |
| 5. They came | அவை வந்து | வந்தன |

வருகையைக் குறிக்க திணை பால் எண் இடம், தமிழ் வினைமுற்றுகளில் சிறப்பாக அறிவிக்கப் பெறினும், வருகையைக் குறிக்கப் பிற மொழியார் came அல்லது வந்து என ஒரு சொல்லை மட்டுமே கற்றால் போதும். தமிழிலோ ஐந்து சொற்களைக் கற்க வேண்டியுள்ளது. இது மொழிச்சுமை என்பர்.

## எச்ச வினைகள் முடியுமாறு

### 33 வினையெஞ்சு கிளவியும்......படிய

பொ-ள் : வினையெஞ்சு கிளவியும், பெயரெஞ்சு கிளவியும், தொடர்ந்து அடுக்கிவந்தாலும் ஒரு வினை முற்று கொண்டே முடியும் தகைமையன.

எ-டு :

**வினை எச்சம் பல வந்து முடிந்தவாறு :**

சொல் தளர்ந்து, கோலூன்றி, சோர்ந்த நடையினராய்
பல் கழன்று, பண்டம் பழிகாறும் இல் செறிந்து
காமநெறி படரும் கண்ணினார்க்கு இல்லையே
ஏமநெறி படரும் ஆறு. **(நாலடியார். 2.3.)**

**பெயரெச்சம் பல வந்து முடிந்தவாறு :**

இனத்த அருங்கலை பொங்க, புனத்த
கொடி மயங்கு முல்லை தளிர்ப்ப—இடி மயங்கி
யானும் அவரும் வருந்த, சிறுமாலை
தானும் புயலும் வரும். (ஐந்திணை எழுபது. 20)

**வி-ரை :** வினையெச்சம், பெயரெச்சம் என்று கூறுது, வினையெஞ்சு கிளவி, பெயரெஞ்சு கிளவி என்று அவிநயனார், தொல்காப்பியனாரைத் தழுவி உரைக்கிறார்.

## எச்சங்களின் வகையும் முடிவும்

34 **பெயர், வினை ......என்றறிக**

**பொ-ள் :** பெயரெச்சமும், வினையெச்சமும், உம்மை எச்சமும், சொல்லெச்சமும், பிரிப்பெச்சமும், ஒழியிசை எச்சமும், எதிர்மறை எச்சமும், குறிப்பெச்சமும் தத்தம் எஞ்சு கிளவிகளைக் கொண்டு முடியும்.

எ-டு :

1 **பெயரெச்சம் :**

யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்.
இக்குறளில் ஒருவன் எனும் பெயர் எஞ்சி நின்றது.

2 **வினையெச்சம் :**

காலம் கருதி இருப்பர் கலங்காது
ஞாலம் கருது பவர்

இக்குறளில் வெற்றிகொள்ளும் காலம் என வினை எஞ்சி நின்றது.

3 உம்மை எச்சம் :

இலங்குவாள் இரண்டினுல் இருகை வீசிப்பெயர்ந்து
அலங்கன் மாலேஇய விழ்ந்து ஆட ஆடும் இவள்.

இதனுள் இருகையும் வீசி என 'உம்' எஞ்சி நின்றமை காண்க.

4 சொல்லெச்சம் :

கைம்மாலேயிட்டுக் கலுழ்ந்தாள் துணையில்லார்க்
கிம்மாலே என்செய்வ தென்று

இனுதள் 'இம்மாலே என் செய்வது என்று சொல்லி' எனச்சொல் என்பது எஞ்சி நின்றது.

5 பிரிப்பெச்சம் :

அறிமின் அறநெறி ; அஞ்சுமின் கூற்றம்
பொறுமின் பிறர் கடுஞ்சொல் ; போற்றுமின் வஞ்சம்
வெறுமின் வினைதீயார் கேண்மை எஞ்ஞான்றும்
பெறுமின் பெரியோர் வாய்ச் சொல்

இந் நாலடிச் செய்யுளில் (நல்லினம் 2) 'எஞ்ஞான்றும்' என்ற சொல்லேப் பிரித்துப் பிற இடங்களில் கூட்ட வேண்டுதலின் பிரிநிலே என்பர் மயிலேநாதர். அணி இலக்கணிகள், இதனைத் தீபக அணியுள் அடக்குவர்.

6 என என் எச்சம் :

எடுத்தலும் படுத்தலும் ஆயிரண் டல்லது
நலிதல் இல்லே என்பரும் உளரே

என்பதில், 'எடுத்தலும் படுத்தலும் என ஆயிரண்டல்லது' என்று என என்ற சொல் எஞ்சி நின்றது

7 ஒழியிசை எச்சம் :

இன்ன செயினும் இனிய ஒழிகென்று
தன்னையே தானேவின் அல்லது துன்னிக்
கலந்தாரைக் கைவிடுதல் கானக நாட
விலங்கிற்கும் விள்ளல் அரிது (நாலடி, பொறை, 6)

நெருங்கிப் பழகியவரைக் கை விடுதல் என்பதன் அருமை விளங்கு தற்கு, ஒழிக்கப்பட்ட மக்கட் கெளிதோ என்பதையும் கொண்டு முடிகிறது இப்பா. ஒழியிசை—இசை என்பது சொல். சொல்லொழிந்து நிற்பது.

8 எதிர்மறை எச்சம் :

கூத்தாட் டவைக் குழாத் தற்றே பெருஞ்செல்வர்
போக்கும் அதுவிளிந் தற்று.

என்ற குறளில் அவையின் வரவும், வறிதும் எது போன்றனவோ அது போன்றது செல்வர்தம் செல்வம் என எதிர்மறைக் கருத்து எஞ்சியது.

9 இசையெச்சம் : இரட்டுற மொழிதல், சிலேடை

வல்லநெனை என்ன, 'மறைவல்லன்' ; மடவாயான்,
என்னை எவன் என்னப் 'பொருள் எய்தி முடி காறும்'
சொல்லுமினு நீவிர் கற்ற காலமெனத், தேன் சோர்
சில்லென் கிளிக் கிளவியது சிந்தை யிலனென்ருன்

(சிந்தாமணி 2027)

இச் செய்யுளுள் 'மறை வல்லன்', 'பொருள் எய்தி முடிகாறும்' என்பன இரு பொருள் உணர்த்தினமை காண்க.

10 குறிப்பெச்சம் : பிறிது மொழிதல் அணி.

கடலோடா கால்வல் நெடுந்தேர் கடலோடு
நாவாயும் ஓடா நிலத்து (குறள் 496)

இடனறிந்து செயல் புரிக என்ற கருத்தை நுவலாமல் நுவன்றது.

## தொகை நிலைத் தொடர்கள்

85 **வேற்றுமை உம்மை ..... ஆறுமே**

பொ-ள் : வேற்றுமைத் தொகை, உம்மைத் தொகை, வினைத் தொகை, பண்புத் தொகை, உவமைத் தொகை, அன்மொழித் தொகை எனத் தொகை நிலைத் தொடர்கள் ஆறும்

எ. கா :

| | | |
|---|---|---|
| இரண்டாம் வேற்றுமைத் தொகை | — | கடல் கடந்தான் |
| மூன்ரும் ,, | — | தலை வணங்கினுன் |
| நான்காம் ,, | — | தமிழர் மகன் |
| ஐந்தாம் ,, | — | அறம் நீங்கினுன். |
| ஆரும் ,, | — | அருகன் பிறப்பு |
| ஏழாம் ,, | — | மயிலை சைனுலயம் |

| | | |
|---|---|---|
| உம்மைத் தொகை : | — | இயல், இசை, நாடகம் |
| வினைத் தொகை | — | ஊறுகாய் |
| பண்புத் தொகை | — | நற் காட்சி, நல்லொழுக்கம், |
| உவமைத் தொகை | — | பூ மெத்தை |
| அன்மொழித் தொகை | — | வஞ்சிக் கொடி வந்தாள். |

வி-ரை : தொகைகளை முறை மாற்றிக் கூறி இருந்தாலும் எல்லா இலக்கண ஆசிரியரும் தொகை ஆறு என்று உடன் பட்டே கூறியுள்ளனர்.

## தொகையில் பொருள் சிறந்து நிற்கும் இடம்

**86 கால்வாய் அடைகடல்... காட்டினவை**

பொ-ள் : தொகை நிலைத் தொடர்களில் முன்மொழியிலோ, பின்மொழியிலோ அனைத்து மொழியிலோ, அனைத்து மொழிக்கும் புறமொழியிலோ பொருள் சிறந்து நிற்கும்.

எ-டு :

| | | |
|---|---|---|
| கால்வாய், | — | வாய்க்கால் என முன்மொழியில் பொருள் சிறந்திருக்கிறது. |
| முல்லைப்பூ | — | பின்மொழியில் பொருள் சிறந்துள்ளது. |
| இயல் இசை நாடகம் | — | அனைத்து மொழிகளிலும் சிறந்துளது |
| வஞ்சிக் கொடி வந்தாள் | — | எனவரும் அன்மொழித் தொகைகளில் புறமொழிப் பொருள் சிறந்துள்ளது. |

வி-ரை : உண்டான் என்ற சொல்லிடத்து, உ என்பது கால முன்; ன்-என்பது இடமுன்; அங்ஙனமே உ-என்பது இடப் பின்; ன்-என்பது காலப் பின்.

முன்மொழி பின்மொழி பன்மொழி புறமொழி
எனுநான் கிடத்தும் சிறக்குந் தொகைப் பொருள்.

என்ற நன்னூலையும் (369) மயிலைநாதர் உரையையும் காண்க.

## சொற்கள் பிரியுமாறு

**37 இரு பொருள் இயைதலின் .....வேண்டும்**

**பொ-ள்** பொருந்தி இருக்கும் இரண்டு சொற்களைப் பொருள் விளங்க, வேறு வேருகப் பிரித்து ஒலித்துக் காட்டுதல் வேண்டும்.

**வி-ரை :** நாடுரி என்பதை நாழி+உரி என்று பிரித்துக் காட்ட வேண்டும். பனாட்டு என்பதை பனை + அட்டு என்று பிரித்துக் காட்ட வேண்டும். இவ்வாறு அல்லாமல், நாடு+உரி எனவோ, பன் + ஆட்டு எனவோ பிரித்தலாகாது என்பது இந்நூற்பாவின் உட்கோள்.

மேய இருசொல் பொருள் தோன்ற வேறிருத்தி
ஆய இடைச்சொல் அடைவித்தால்—தூயசீர்
ஆவிபோம் ஒற்றுப்போம் ஆங்குயிர்மெய் போமன்றி
மேவிய சுட் டாங்கே மிகும்.

என்பது நேமிநாதம் (22).

## ஐவகை வினுக்கள்

**38 அறியான் வினுதல்...வினுவே**

**பொ-ள் :** அறியான் வினுதல், அறிவொப்புக் காண்டல், ஐயமறுத்தல்; அவனறிவு தான் கொள்ளுதல், மெய்யவனுக்குக் காட்டல் என வினுவுதல் ஐவகைப்படும்.

**எடுத்துக்காட்டு :**

1 **அறியான் வினுதல் :**

இந்நூற்பாவிற்குப் பொருள் என்ன?

2 **அறிவொப்புக் காண்டல் :**

மாணுக்கர் தமக்குள்ளே, 'இச்சூத்திரத்துப் பொருள் யான் அறிந்தபடி அறிந்தாஞ வேறுபட அறிந்தாஞ?' என வினுவிக் கொள்ளுதல்.

3 **ஐயமறுத்தல் :**

சூத்திரத்திற்குப் பொருள் தெளியாது நின்ற மாணுக்கர் ஐயந்தீர வினுவுதல்.

4 **அவனறிவுதான் கோடல் :**

இச் சூத்திரத்திற்குப் பொருள் இவன் உரைக்கு மாறு விளக்குக என வினவுதல்.

5 **மெய்யவனுக்குக் காட்டல் :**

இச் சூத்திரத்திற்குப் பொருள் வழுவ உணர்ந்தான் என்று அவனைத் தெளிவு செய்து, உணர்த்துபவன் நன்கு உணர்த்துவான் வினதல்.

ஐவகை வினக்களை **இளம்பூரணர், கல்லாடர்,** தொல்காப்பியப் பழைய சொல்லதிகார உரையாசிரியர், **நேமிநாத** உரையாசிரியர் ஆகியோர் இவ்வாறே கொண்டனர். **சேனுவரையரும், நச்சினுர்க்** கினியரும், அறியான் வினு, அறிபொருள் வினு, ஐயவினு என மூன் ருக்கினர். **பவணந்தியே** இவற்றை எல்லாம் மாற்றிப் புதுக்கி, அறிவு, அறியாமை, ஐயுறல், கொளல், கொடை, ஏவல் என்று ஆருக்கினர். **இலக்கண விளக்க** ஆசிரியரும் வழிமொழிந்தனர். அவிநயக் கொள்கை, இலக்கணச் சூத்திர உரை காண்பதை அடி யொற்றி அமைகிறது. பவணந்தியின் கொள்கை-அனைத்தையும் அடக்கிப் பொதுவான வகையை அழகாகக் கூறுகிறது.

# பொருளதிகாரம்

## அகப்புறத்திணை

39 **இனி, ஒரு சாரார்....காண்க**

**பொ-ள் :** அகத்திணை, புறத்திணை, அகப்புறத்திணை என முப்பிரிவுகளாகும்.

**வி-ரை :** அகத்திணை, புறத்திணை என்று இருபாகுபாடு கொள்வது முறை. இவற்றை மேலும் விரித்து அகப்புறம், புறப் புறம் என்று இரண்டைக் கூட்டி உரைப்பதும் உண்டு. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்று ஐந்தையும் அகத்திணைகள் என்றும், கைக்கிளை, பெருந்திணை என்ற இரண்டையும் அகப்புறத் திணைகள் என்றும் குறிப்பர். வெட்சி, கரந்தை, வஞ்சி, காஞ்சி, உழிஞை, நொச்சி, தும்பை என்ற ஏழு திணைகளையும் புறத்திணை என்றும், வாகை, பாடாண், பொதுவியல் என்ற மூன்று திணைகளையும் புறப்புறம் என்னும் குறிப்பர்.

அகப்புறம் என்ற பாகுபாடு உண்டென்பது அவிநயக் கருத்தால் தெரிய வருகிறது. புறப்புறம் என்ற பாகுபாடு உண்டு என்பது,

'வாகை பாடாண் பொதுவியல் திணைஎனப்
போகிய மூன்றும் புறப்புறப் பொருளே

என்றார் தொல்காப்பிய அகத்தியம் உடையார்' என்ற யாப்பருங்கல விருத்தியுரை (95.ப.571)யால் தெரிய வருகிறது. இங்குக் குறிக்கப் படும் தொல்காப்பிய நூற்பா, தொல்காப்பிய நூலுள் காணப்பட வில்லை. இது போன்றே 'முடிபொருள் அல்லா தடியள விலவே' எனப் பிறிதொரு நூற்பா அடி ஒத்தில் (ப. 132) மேற்கோளாகக் காட்டப்படுகிறது. இந்நூற்பாவும் இன்றைய தொல்காப்பிய நூலில் இல்லை. ஈதன்றிப் பிறிதொரு தொல்காப்பிய நூற்பா, நவநீதப் பாட்டியல் உரையில் (21) இடம் பெற்றுள்ளது.

மேவிய செய்யுளின் முதற்சீர்க் கண்ணே
விலங்கின் கதியும் நரக கதியும்
பாவியல் பாடப் பழியது முடியும்

இந்நூற்பாவும் இன்றை தொல்காப்பியப் பதிப்பில் இடம் பெறவில்லை. புறப்புறம் பற்றிய பேச்சும், விலங்குகதி, நரககதி பற்றிய பேச்சும் தொல்காப்பிய நூலுள் குறிப்பாகக் கூட எங்கும் காணப்படவில்லை. ஆதலால், இவையெல்லாம் முன்னைய தொல்காப்பியர் பெயரை ஏற்ற பிற்கால இரண்டாவது தொல் காப்பியர் ஒருவரால் இயற்றப்பட்டன என்று உய்த்தறிய இடமிருக் கிறது. இரண்டாம் தொல்காப்பியர், அவிநயனார் காலத்து வாழ்ந்த வராதல் கூடும். அக்காலத்துத்தான் பன்னிரு மாணாக்கர் போன்ற கதைகள் (?) உருவாகி இருத்தல் கூடும். கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டைச் சுற்றி அவிநயனார், ஐயனாரிதனார் முதலான இலக்கண ஆசிரியர் காலம் அமைவது கருதத்தக்கது.

## களவுக் காதல்

40 **முற்செய் வினையது....நெகிழ்ந்து**

பொ-ள்: முன்னே செய்த வினையது தொடர்ச்சி உண்மை ஆதலால், குணத்தாலும், குலத்தாலும், அழகாலும், அறிவாலும், பருவத்தாலும் ஒத்த இருபாலார் யாரும் இல்லாத ஓரிடத்தில் அன்பு மீதூரத் தாமே புணர்ந்து ஒழுகும் ஒழுக்கம் கந்தருவம் எனப்பெறும்.

வி-ரை : உள்ளம் ஆர்ந்த காதல் உறவுடையார், தாம் இருவரும் பிறவிதோறும் காதல் இணைகளாகப் பிறந்து வாழ்ந்து சிறக்க விரும்புவது இயற்கை. இஃது

'எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும்
உன் தன்னோடு உற்றோமே ஆவோம்
உனக்கே நாம் ஆட் செய்வோம்'

என்ற ஆண்டாள் பாவைப் பாடலாலும் (29) தெளிவாகும்.

'ஈண்டு நான்இருந்து இன்னுயிர் மாயினும்
மீண்டு வந்து பிறந்து, தன் மேனியைத்
தீண்ட லாவது ஓர் தீவினை தீர் வரம்
வேண்டினாள் தொழுது என்று விளம்புவாய்'

(சூடாமணிப்படலம் - 35)

என்று சீதை அனுமனிடம் கூறும் கூற்றாலும் விளக்கமாகும். தொல்காப்பியர் முதலா அகப்பொருள் ஆசிரியர் யாவரும் உண்மைக் காதலின் முன் வினைத் தொடர்பை எடுத்துக் காட்டினர். அவர் தம் நூலுட் பயின்று துய்க்க.

(பி.கு. 'ஊழ்வினை வயத்தான்......வயப்படுவர்' என்று மூலத்தில் இடம் பெற்றுள்ள வரிகள் பிழையாக அச்சேறி விட்டன.)

## கைக்கிளை நான்கு

### 41 காட்சி ஐயம்....நான்கு

பொ-ள் : முதற்கண் தலைவியைத் தனிமையில் கண்ணுறும் தலைமக்கள் காட்சி, ஐயம், தேற்றல் தெரிதல், என நான்கு நிலைகளுக்கு ஆளாகுவர்.

காட்சி : எண்ண அரு நலத்தினாள், இனையள் நின்றுழி
கண்ணொடு கண்ணினை கவ்வி, ஒன்றை ஒன்று
உண்ணவும் நிலைபெறாது உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்

[கம்பன். பால. மிதிலை. 35]

உனக்கென்ன—
ஒரு பார்வையை வீசி விட்டுப் போகிறாய்.....
என் உள்ள மல்லவா
வைக்கோலாய்ப் பற்றி எரிகிறது

(மீரா. கனவுகள்+கற்பனைகள்=காகிதங்கள்.8)

ஐயம் : * கற்பகத்தின் பூங்கொம்போ? காமன் தன் பெருவாழ்வோ?
பொற்புடைய புண்ணியத்தின் புண்ணியமோ? புயல்சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த விரைக் கொடியோ?
அற்புதமோ? சிவனருளோ? அறியேன் என் றதிசயித்தார்.

(பெரியபுராணம். தடுத்தாட். 140.)

தேற்றல் : திருநுதல் வேர்வரும்பும்; தேங்கோதை வாடும்;
இருநிலம் சேவடியும் தோயும்; அரிபரந்த
போகிதழ் உண்கணும் இமைக்கும்;
ஆடுமற்றிவள் அகலிடத் தணங்கே.

(அகப்பொருள் மேற்கோள். சூ. 121)

தெரிதல் : தலைவியின் விருப்பத்தை ஆராய்தல்.
இரு நோக்கு இவள் உண்கண் உள்ளது; ஒரு நோக்கு
நோய்நோக்கு; ஒன்று அந்நோய் மருந்து

(திருக்குறள் 1091.)

வி-ரை : காதலர் இருவரும் தம்முள் பார்ப்பது காட்சி; பார்த்த பின் மங்கையோ மயக்கும் மோகினியோ என ஆண் ஐயுறுவான்; தேவனோ? மனிதனோ? எனப் பெண் ஐயுறுவாள். அவ்வாறு ஐயுறுவது ஐயம்; ஆடை அழுக்கைக் கண்டும், கால்கள் நிலத்தில் தோய்தல் கண்டும் மனத்தில் ஏற்பட்ட ஐயத்தைப் போக்குவர். அவ்வாறு ஐயத்தை அகற்றிக் கொள்ளுவது தெளிவு. ஒருவர் அன்பை ஒருவர் உறுதி செய்து கொள்ளல் தேற்றம். இந்நான்கையும் ஒரு தலைக் காமமான கைக்கிளை என்பர்.

காட்சி ஐயம் துணிவு குறிப் பறிவு என
மாட்சி நான்கு வகைத்தே கைக்கிளை (நம்பியகப்பொருள். 118.)

* அகத்துறைப் பாக்களில் தலைவன் பெயர் அறிவிக்கப்படலாகாது என்பது தொல்காப்பியச் சட்டம். எனினும் தெளிவிற்காகவும், புதுமைக்காகவும் பழகிய பாக்கள் விடப்பட்டுப் பிற (புற) இலக்கியங்களில் இருந்தும் அகவுணர்வுப் பாக்கள் சான்றுகளாகக் காட்டப்பட்டுள்ளன. அறிஞர்கள் பிழையாகக் கொள்ளற்க.

# தலைவியின் குணங்கள்

## 42 அவட்கு நாணும்......பயிர்ப்பும்

**பொ-ள் :** நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்ற நான்கும் பெண்ணிற்குரிய குணங்களாம்.

**நாணம் :** பெண்டிர்க்கு இயல்பாக உள்ள தொரு தன்மை; **மடம் :** விளக்கியவற்றை மனத்தில் வாங்கிக்கொண்டு கொண்டது விடாமை. **அச்சம் :** காணாத பொருள் ஒன்றைக் கண்ட இடத்து அஞ்சுவது; **பயிர்ப்பு :** பழக்கம் இல்லாத பொருட்கள் பக்கம் அணுகாமல் அருவருத்து நிற்பது. தொல்காப்பியர் அச்சம், நாணம், மடம் என்ற மூன்றையுமே பெண் குணமாகக் கூறுவர். ஆனால் இறையனார் களவியல், நம்பி அகப்பொருள் முதலாயின பயிர்ப்பையும் ஒரு குணமாகப் போற்றி உரைக்கும்.

# தலைவன் குணங்கள்

## 43 உயிர்த்தகத் தடக்கிய......தேற்றமும்

**பொ-ள் :** அறிவு, நிறைவு, ஓர்ப்பு, தேற்றம் என்ற நான்கும் ஆணுக்குரிய குணங்களாம்.

**வி-ரை : அறிவு :** எப்பொருள் ஆயினும் அப்பொருட்கண் நின்று அம் மெய்ம்மை உணரும் திறன். **நிறை :** காக்க வேண்டியவற்றைக் காத்து, விலக்க வேண்டியவற்றை விலக்கி வாழும் நெஞ்சுரன். **ஓர்ப்பு :** ஒவ்வொரு பொருளையும் ஆராய்ந்து உணர்தல். **தேற்றம் :** எதிலும் எப்பொழுதும் குழப்பமற்ற மனநிலை, தெளிவு. இறையனார் களவியல் உரைகாரர் தேற்றம் என்பதற்கு மாறாக, கடைப்பிடி என்ற குணத்தைச் சுட்டுவர். அதற்கு அவர் தரும் விளக்கம்: கொண்ட பொருள் மறவாமை. தொல்காப்பியர்,

'பெருமையும் உரனும் ஆடூஉ மேன'

என இரண்டு குணங்களை ஆடவர்க்குரியன வாக்குவர் (களவியல் 95). இவற்றிற்கு இளம்பூரணர் தரும் விளக்கமாவது :

| | | |
|---|---|---|
| பெருமை | — | பழியும் பாவமும் அஞ்சுதல் |
| உரன் | — | அறிவு. |

## களவு மணம்

### 44 மறைய அவர்க்கு......மணமே

பொ-ள்: ஆணும், பெண்ணும் தாம் சந்தித்த தனி இடத்தில்-யார் பார்வையும் படாத சிறப்பான மறைவிடத்தில்-தம் அன்பு மிகப் பெருகி உடலுறத் தழுவுவர். அதனைத் தமிழியல் வழக்கம் என்றும் களவு என்றும் கந்தருவ மணம் என்றும் குறிப்பர்.

வி-ரை: தமிழில் உள்ள அகம், தமிழிற்கே உரிய தனிச் சிறப்பு. ஆதலால் அகம் என்பது தமிழ் என்றே குறிக்கப்பட்டது. அதனாற்றான் தமிழியல் வழக்கம் என்றனர் அவிநயனார். கபிலர்தம் அகம் சார்ந்த குறிச்சிப் பாட்டுத் 'தமிழ்' எனப் பட்டது. களவு மணத்தைப் பற்றி விரிவாகவும் அழகாகவும் இறையனார் களவியல் உரைகாரர் விளக்கியுள்ளார். இரண்டாம் சூத்திரத்தைப் படித்து இன்புறுக.

## மணம்

### 45 முற் செய் வினையது......மணமே

பொ-ள்: முன் வினையின் தொடர்ச்சி உறுதி. ஆதலால் அனைத்துக் குணங்களாலும் ஒத்த ஆண், பெண் காதலர் இருவர் நெஞ்சம் நெகிழ்ந்து தனியிடம் ஒன்றில் சந்தித்தனர். தொடக்கத்தில் ஒருவரை ஒருவர் மாறி மாறிப் பார்த்துத் தேவியோ தேவனோ என்று ஐயம் கொண்டனர். பின்பு ஐயம் அகற்றித் தெளிவு பெற்றனர். ஒருவர் ஒருவர் மீது கொண்ட காதற்பெருக்கால், அச்சம் மடம் நாணம் பயிர்ப்புக் குணங்களை பெண்ணிடமிருந்து மறைந்தன; அறிவு, நிறை, ஓர்ப்பு, தெளிவுக் குணங்கள் ஆணிடமிருந்து மறைந்தன. மறைய, அவர் விரும்பிய சிறந்த தனியான, மறை வானதோர் இடத்தில் அன்பு மிகுந்து பெருக உடலுறத் தழுவினர். இவ்வழக்கம் தமிழியல் அல்லது களவு அல்லது கந்தருவ மணம் எனப் பெறும்

வி-ரை: இப் பெரிய நூற்பாவைத் தெளிவு கருதி 40-44 வரை நான்கு பிரிவாகப் பிரித்து உரை கூறப்பட்டது. இவ்வரிய பெரிய நூற்பா, அவிநயனார் பொருளதிகாரத்தையும் எழுதினார் என்பதற்கு அழுத்தமான, அசையாத சான்றாகும்.

## பொழிப்புரை

**46 பொழிப்பெனப் படுவது......உரைப்பதுவே**

பொ-ள் : பாட்டில் பொருந்தி இருக்கும் பொருளைத் தொகுத்து உரைப்பது பொழிப்புரை எனப்படும்.

வி-ரை : யாப்பருங்கல விருத்தியுரை, யாப்பருங்கலக் காரிகை உரை, மயிலைநாதர் உரை, நேமிநாத உரை, நம்பி அகப்பொருள் உரை ஆகியன பொழிப்புரை பற்றிப் பேசியன. பொழிப்பு, அகலம், நுட்பம் என்ற முத்திற உரைகளுள் ஒன்ருகப் பொழிப்புரையைப் போற்றும் யாப்பருங்கல விருத்தி. மேற்கண்ட நூற்பாவை யாப்பருங் கலம், காரிகை, நேமிநாதம், நம்பி அகப்பொருள் உரைகள் எடுத்து மொழியும்.

பிண்டம் எனில் தொகுதி. தொல்காப்பியர், பிண்டப் பெயர் (வேற்றுமை மயங்கியல்.7) என்பது காண்க.

## யாப்பதிகாரம்

**47 நெடிய குறிய....எழுத்தே**

பொ-ள் : நெடில், குறில், உயிர்மெய், உயிர், வல்லெழுத்து, மெல்லெழுத்து, இடையெழுத்து, அளபெடை, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக் குறுக்கம் என்ற பதினென்றும் அசைக்குரிய எழுத்துகளாம்.

எடுத்துக்காட்டு :

1 நெடில் : ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ

2 குறில் : அ இ உ எ ஒ

8 உயிர்மெய் : ககரத்தின் மேல் ஏறிய உயிர் பன்னிரண்டு முதலாகப் பதினெட்டு மெய் மேலும் உயிரேறிய உயிர்மெய் எழுத்துகள். ஆக 18×12=216.

4 உயிர் : அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ

5 வல்லெழுத்து : க ச ட த ப ற

6 மெல்லெழுத்து : ங ஞ ண ந ம ன

7 இடையெழுத்து : ய ர ல வ ழ ள

8 அளபெடை : செய்யுளில் ஓசை குறைந்து தளை சிதைய நின்ற இடங்களில் செய்யுள் இலக்கணம் பிழையாமைப் பொருட்டு நீட்டப் பட்டவை. உயிரளபெடை, ஒற்றள பெடைஎன்ற இரண்டும் அதனுள் அடங்கும்.

9 குற்றியலிகரம் : வல்லெழுத்தின் மேல் ஏறிவரும் குற்றிய லுகரம், யகர வருமொழிகளோடு புணரும் போது இகரம் ஆதல்.

10 குற்றியலுகரம் : நெடிற் கீழும், நெடிலொற்றின் கீழும், குறிலிணைக் கீழும், குறிலிணை ஒற்றின் கீழும், குறில் நெடிற் கீழும், குறில் நெடில் ஒற்றின் கீழும், குற்றொற்றின் கீழும் ஆக ஏழிடங்களில் ஆறு வல்லொற்றின் மேல் வரும் உகரம் தனக்குரிய ஒரு மாத்திரை அளவில் குறைந்து அரை மாத்திரை அளவினதாய் ஒலிக்கும். அவ்வாறு ஒலிப்பது குற்றியலுகரம்.

11 ஐகாரக் குறுக்கம் : ஐகாரம் அளபெடை அல்லாத இடத்தும் தனியே நின்று ஒரோவிடத்து ஒரு பொருளைச் சொல்லும் இடத்தும் ஒன்றறை அல்லது ஒரு மாத்திரையாம்.

12 மெய் : க—ன வரை உள்ள பதினெட்டு மெய்கள்.

விரை : அசைக்குரிய எழுத்துகளின் எண்ணிக்கையைக் கூறுவதில் பல கருத்து வேற்றுமைகள் உள்ளன. அட்டவணை பார்க்க. ஆய்தம், ஔகாரக் குறுக்கம், மகரக் குறுக்கம் என்ற மூன்றையும் காக்கை பாடினியும், அவிநயனும் விளக்கினர். ஔகார, மகரக் குறுக்கங்களைச் சிறுகாக்கைபாடினியும், யாப்பருங் கலக் காரிகை ஆசிரியரும் விளக்கினர். அமுதசாகரரே, யாப் பெருங்கலத்தில் ஔகார மகரக் குறுக்கங்களைச் சேர்த்துக் கூறி னவர், காரிகையில் கூறாது விட்டனர். அவ்விரண்டும் அசையின் தன்மையை மாற்றுவதில்லை போலும். ஆய்தத்தைக் கூறினவரும் ஆய்தக் குறுக்கத்தைக் கூறாது விட்டது இது பற்றியே. உயிர் என்று கூறிய அளவிலேயே குறிலும், நெடிலும் அடங்கும்; அல்லது குறிலையும் நெடிலையும் கூறின அளவிலேயே உயிர் அடங்கும். இரண்டையும் கூறுவதன் பொருத்தம் புலப்படவில்லை. அது போலவே மெய் என்று கூறிய அளவில் வன்மை, மென்மை, இடைமை எழுத்துகள் அடங்கிவிடும் அவற்றைப் பிரித்துக் கூறியதன் நோக்கம் விளங்கவில்லை. இவற்றை எல்லாம் உள் வகையாகக் கொண்டவர்கள், அளபெடை என்றுகூறிய அளவில் நின்றனர். தளையின் இயல்பை மாற்றவல்ல உயிரளபெடை, ஒற்றள பெடை என்ற இரண்டையும் தனித்தனியாகக் காட்டாது விட்டனர். உரைகாரரே காட்டினர். இவற்றை நோக்க, (1) குறில், (2) நெடில், (3) மெய், (4) உயிர்மெய் (5) உயிரளபெடை (6) ஒற்றளபெடை (7) ஆய்தம் (8) குற்றியலிகரம் (9) குற்றியலுகரம் (10) ஐகாரக் குறுக்கம் என்ற பத்தே போதும் என்று தோன்றுகிறது. தற்காலப் பார்வையில், (1) குறில் (2) நெடில் (3) மெய் (4) உயிர்மெய் (5) ஆய்தம் என்ற ஐந்தே போதும். ஏனைய இன்றைய தமிழில் வழங்குவதில்லை. சில வழங்கினும் அசையை மாற்றுவதில்லை.

## அசைக்குரிய எழுத்துகள் பற்றிப் பல யாப்பிலக்கணிகளின் கருத்து

| | | காக்கை பாடினி | சிறுகாக்கை பாடினி | பெரியபம்மம் | யாப்பருங்கலம் | காரிகை | அவிநயம் |
|---|---|---|---|---|---|---|---|
| 1 | குறில் | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| 2 | நெடில் | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| 3 | அளபெடை | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| 4 | உயிர் | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| 5 | மெய் | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| 6 | உயிர்மெய் | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| 7 | வல்லெழுத்து | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| 8 | மெல்லெழுத்து | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| 9 | இடையெழுத்து | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| 10 | ஆய்தம் | ,, | — | ,, | ,, | ,, | — |
| 11 | குற்றிய லிகரம் | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| 12 | குற்றிய லுகரம் | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| 13 | ஐகாரக் குறுக்கம் | ,, | ,, | ,, | ,, | ,, | ,, |
| 14 | ஔகாரக் குறுக்கம் | — | — | ,, | ,, | — | — |
| 15 | மகரக் குறுக்கம் | — | — | ,, | ,, | — | — |

## கிரந்த எண்ணிக்கை

48 **குற்றெழுத்து......நெடிலாம்**

பொ-ள் : குற்றெழுத்துத் தொண்ணூற்று ஐந்தாகும்; நெட்டெழுத்து நூற்று முப்பத்து மூன்றும். இவ்விரண்டையும் கூட்ட இரு நூற்று இருபத்தெட்டாம். உயிர், வன்மை, மென்மை, இடைமை என்பன இவ்வாறு விரியும்.

எ-டு :

1 குறிலுயிர் ஐந்து : அ இ உ எ ஒ

2 குறிலுயிர்மெய் தொண்ணூறு: க்+அ/இ/உ/எ/ஒ. ககரம் முதலாக னகரம் ஈருகப் பதினெட்டு மென்மையும் ஐந்து குற்றுயிர்களோடு பெருக்க (18×5=90) தொண்ணூறு.

3 நெடிலுயிர் ஏழு : ஆ ஈ ஊ ஏ ஐ ஓ ஔ

4 நெடிலுயிர் மெய் நூற்று இருபத்தாறு : க+ஆ/ஈ/ஊ/ஏ/ஐ/ஓ/ஔ. ககரம் முதலாக னகரம் ஈருகப் பதினெட்டு மெய்களையும் ஏழு நெட்டுயிர்களுடன் பெருக்க 18×7=126 எழுத்துகளாம். நான்கையும்கூட்ட (5+90+7+126=228) இருநூற்று இருபத்தெட்டாம்.

வி-ரை : உயிர் மெய் மொத்தக் கணக்கைக் கணித்துக் காட்டிய முதல்வர் அவிநயனரே. இவற்றைச் சார்பெழுத்து என்று முதலில் கூறியவர் பவணந்தியே. தொல்காப்பியர் காலத்திற்கு முன் உயிர்மெய் என்ற தனிப் பாகுபாடு இருந்ததா? இதனை முதலில் கண்டு வகைப்படுத்தியவர் தொல்காப்பியரே. ஆங்கிலம் போன்ற பிற மொழிகளில் உயிர்மெய் என்ற பிரிவின்மை அறிக.

## ஆய்தமும் ஒற்றும் அலகு பெரு

49 அளபெழின் அல்லதை......புலவர்

பொ-ள் : அளபெடையிலன்றி ஆய்தமும், ஒற்றும் அலகு பெறுதலில்லை. எனவே ஆய்த அளபெடையிலும், ஒற்றளபெடையிலும் அலகிடப் பெறுதல் உண்டு என்றார் ஆயிற்று.

எ-டு : எஃஃகி லங்கிய கையராய் இன்னுயிர்
வெஃஃகு வார்க்கில்லை வீடு

(யாப்பருங்கலம் 3, யா. கா. 36)

ஆய்தம் அளபெடுத்து நேரசையாக அமைந்துள்ளது.

கண்ண் கருவிளை ; கார்முல்லை கூரெயிறு
பொன்ன் பொறிசுணங்கு ; போழ்வாய் இலவம்பூ ;
மின்ன் நுழைமருங்குல்; மேதகு சாயலாள்
என்ன் பிறமகளா மாறு ?

(யாப்பருங்கல விருத்தி, 3, யா. காரிகை 36,
பேராசிரியர், தொல். உவம. 3)

'கண்ண் தண்ண் எனக் கண்டும் கேட்டும்' (மலைபடுகடாம் 352)

என வரும் கண்ண், பொன்ன், மின்ன், என்ன் என்ற சொற்களுள் ஒற்றளபெடை அலகிடப் பெற்று நேரசை ஆயினவாறு காண்க.

வி-ரை : அலகிடப் பெறுதலில் பயனின்மை நோக்கியே தனி ஆய்தமும், தனி ஒற்றும் மகரக்குறுக்கமும் அவிநயனுரால் கூறுது விடப்பட்டனபோலும்.

## உயிரளபெடை

50 உயிரளபெடையும்......ஒற்றும்

பொ-ள் : உயிரளபெடை, குற்றியலிகரம், குற்றியலுகரம் என்ற மூன்றும் தளை குலைய அமையுமானுல் அவை அலகிடப்பெரு ; ஒற்றினைப்போல அலகிடப்படாமல் விடப்பெறும்.

எ-டு : கடாஅக் களிற்றின்மேல் கட்படா மாந்தர்
படாஅ முலைமேல் துகில் (திருக்குறள் 1087)

இதனுள் கடாஅ, படாஅ என்பன உயிரளபெடை பெற்ற சொற்கள் இவை அலகு பெற்று நேரசைகளாய் நிற்றல் காண்க. இவற்றிற்கு மாருக அலகிடப்பெரு அளபெடை இடங்களும் உள்ளன.

இடைநுடங்க ஈர்ங்கோதை மின்தாழ வாட்கண்
புடை பெயரப் போழ்வாய் திறந்து – கடைகடையின்
உப்போஒ எனவுரைத்து மீள்வாள் ஒளிமுறுவற்
கொப்போநீர் வேலி உலகு ?

(யாப். விருத்தி 4, யா. கா. 36)

இப்பாவில் 'உப்போஒ' என்ற சொல் அளபெடை பெற்று வந்துள்ளது உப்போஒ—அளபெடையையும் சேர்த்து அல கிட்டால், தேமாங்காய் என்று அலகிட வேண்டி இருக்கும். அங்ஙனமெனில் காய்முன் நேர் என்ற வெண்டளை தட்டும். எனவே, இங்கு அளபெடையை விலக்கி உப்போ-தேமா என்று அலகிடின் மாமுன் நிறை என்ற இயற்சீர் வெண்டளை அமைந்து, தளை தட்டாமல் அமைதல் காண்க.

குற்றியலிகரம், குற்றியலுகரம் அலகு இடப்பெறுதல்

வந்துநீ சேரின் உயிர்வாழும்; வாராக்கால்
முந்தியாய் பெய்த வளைகழலும்; முந்தியாம்
கோளானே கண்டனம் கோல்குறியாய் இன்னுமோர்
நாளானே நாம்புணரு மாறு

(யா. வி. 4, யா. கா. 36 மேற்கோள்)

இச்செய்யுளில், வந்து-என்பது குற்றியலுகரம்; அலகிடப் பெற்றுளது. முந்தியாய், முந்தியாம்-என்பன குற்றியலிகரம்; அலகிடப் பெற்றுள்ளன இவ்வாறு அலகு பெறு இகர உகரங்களுக்குச் சான்று பின்வருமாறு :

சிறுநன்றி யின்றிவர்க்கியாம் செய்தக்கால் நாளைப்
பெறுநன்றி மன்னும் பெரிதென்—றுறுநன்றி
தானவாய்ச் செய்வதூஉம் தானமன் றென்பவே
வானவாம் உள்ளத் தவர்.

(யா. வி. 4, யா. கா.36 மேற்கோள்)

இச்செய்யுளில் 'யின்றிவர்க்கியாம்' என்பதில் குற்றியலிகரம் அமைந்துளது. அதனை அலகிட்டால் நேர் நிரை நிரை எனக் கூவிளங்கனி வந்தமையும். அமையவே பிறதளை புகாதது வெண்பா என்ற வரம்பு சிதைந்துபோகும். ஆகவே, இங்குக் குற்றியலிகரம் அலகிடப் பெறுது. அதனுல் இச்சீர் கூவிளங்காய் ஆக அமைந்து வெண்பாத் தளை பிறழாது.

அருளல்லதி யாதெனில் கொல்லாமை கோறல்
பொருளல்ல தவ்வூன் தினல்

(திருக்குறள் 254)

இக்குறளிலும் 'அருளல்லதி' என்பதில் உள்ள குற்றியலிகரம் அலகு பெறுது. பெற்ருல் தளை குலைதல் காண்க.

கொன்று கோடு நீடு குருதிபாயவும்
சென்று கோடு நீடு செழுமலை பொருவன
வென்று கோடு நீடு விறல் வேழம்
என்று மூடு நீடு பிடியுள் போலும்

அதனுல்

இண்டிடை இரவிவண் நசைஇவரின்
வண்டுண் கோதை உயிர்வா மூலனே

(யா. வி. 4, யா. கா. 36)

இவ்வஞ்சிப்பாவில், கொன்றுகோடு நீடு, சென்று கோடு கீடு, வென்று கோடு நீடு, என்று மூடு நீடு என்பன நேர், நிரை நிரை நேர் என்று அமைகின்றன. குற்றியலுகரங்களை அலகிடாது விட்டால் நேர், நேர், நேர் என்று அமைந்து முச்சீராகும். நாலசைச்சீர் வஞ்சிப் பாவில் அருகியே வருமே அன்றி நிரம்பி வழியாது. ஆதலின் இப் பாவில், குற்றியலுகரங்களை விலக்கி முச்சீராகக் கொண்டு வஞ்சித் தளை சிதையாமல் காத்தல் வேண்டும் என்பது கருத்து.

51 **சீர்தப வரினும்......ஆகும்**

**பொ-ள் :** பாச்சீர் சிதைய அளபெடை, குற்றியலிகரம், குற்றியலுகரம் ஆகியன இடம் தருமானல் அவற்றை அலகிடாது ஒற்றுப்போலக் கொள்ளலாகும்.

**வி-ரை :** முன் நூற்பா விளக்கம் அனைத்தும் இதற்கும் பொருந்தும்.

'தனிசீர் வண்ணம் தாம்கெட வரினே
குறுகிய இகரமும் குற்றிய லுகரமும்
அளபெடை ஆவியும் அலகியல் பிலவே'

என்பது யாப்பருங்கலம் (4),

சீரும் தளையுஞ் சிதையின் கிறிய இஉ அளபோ
டாரும் அறிவர் அலகு பெருமை ஐ காரநைவேல்
ஒரும் குறிலியல் ஒற்றள பாய்விடின் ஓரலகாம்
வாரும் வடமும் திகழு முகிழ்முலை வாணுதலே

என்பது யாப்பருங்கலக் காரிகை (36). மகேச்சுரரும், காக்கை பாடினியாரும் இக்கருத்தினரே. யாப்பருங்கல நான்காம் ஒத்துரை பார்க்க.

## அசை

52 **நேரசை ஒன்றே......அறிந்திசி னேரே**

**பொ-ள் :** நேரசை என்பது ஓர் அலகாம்; நிரையசை என்பது இரண்டலகாம் என்பர் அறிஞர்.

**எ-டு :** க, கா, கண், காண் என்பன நேரசை. குறில் தனித்தோ, ஒற்றடுத்தோ, நெடில் தனித்தோ, ஒற்றடுத்தோ வருவன நேரசையாகும். இவை ஓரலகின.

கரு, அருள், அயா, விடால் என்பன நிரையசை. குறில் இணைந்தோ, குறில் இணைந்து ஒற்றடுத்தோ, குறில் நெடில் இணைந்தோ, குறில் நெடில் இணைந்து ஒற்றடுத்தோ வருவன நிரையசை. இவை ஈரலகின.

குறிலே, நெடிலே, குறிலிணை ஏனைக் குறில் நெடிலே
நெறியே வரினும், நிறைந்தொற் றடுப்பினும் நேர்நிரையென்
றறிவேய் புரையுமென் தோளி! உதாரணம் ஆழிவெள்வேல்
வெறியே சுருநிறம் விண்தோய் விளாம் என்று வேண்டுவரே

என்பது யாப்பருங்கலக்காரிகை (5).

## அசையின் அலகுகள்

### 53 நேரோர் அலகு......ஆறே

பொ-ள் : நேர் என்பது ஓரலகு ; நிரை என்பது இரண்டலகு ; நேர்பு என்பது மூன்றலகு ; நிரைபு என்பது நான்கலகு என்று உணருமாறு அறிஞர்கள் குறித்தனர்.

வி-ரை : காசு என்பதை நேர்பு என்றும், பிறப்பு என்பதை நிறைபு என்றும் குறித்தனர் போலும். நேரசையுடன் ஒன்றி வந்த குற்றியலுகரத்தையும், முற்றியலுகரத்தையும் நேர்பு என்றும், நிரையசையுடன் ஒன்றி வந்த குற்றியலுகரத்தையும், முற்றியலுகரத்தையும் நிரைபு என்றும் விளக்கினர் பேராசிரியர். (தொல். செய்யுளியல் 4) நேரசை, நிரையசை என்பவற்றை முறையே தனியசை, இணையசை என வேறு பெயரால் குறிப்பர் காக்கை பாடினியார். (யா.வி.5)

**நேரசை நான்கும் வந்த செய்யுள்**

போது சாந்தம் பொற்ப ஏந்தி
ஆதிநாதற் சேர்வோர்
சோதி வானம் துன்னு வாரே

(யா. வி. 6, 69, யா. கா. 5)

**நிரையசை நான்கும் வந்த செய்யுள்**

அணிநிழல் அசோகமர்ந்து அருள்நெறி நடாத்திய
மணிதிகழ் அவிரொளி வரதனைப்
பணிபவர் பவம்நனி பரிசு அறுப்பவரே

(யா. கா. 5)

## ஐகாரம் இரட்டிக்கும் இடத்துக் குறிலாகி அசை பெறுதல்

### 54 கடையும் இடையும்...இரட்டியும்

பொ-ள் : ஐகாரம் இரட்டித்து வரும்போது நேர்நேர் என்று அமையாமல், நிறையாகவே அமையும். மொழி முதல் தவிர்த்து, மொழி இடையிலும், கடையிலும் நிரையாக அமையும்.

எ.டு : மொழியிடை ஐகாரம் நிரையாசை ஆதலுக்குக் காட்டு

புன்னைப் பொழிலருகே போயினுள் பூங்கொம்பர்
தன்னையரும் காணத் தளர்ந்து

(யா.வி. 9)

இப்பாடலுள் 'தன்னையரும்' என்பதில் சீர்நடு ஐகாரம் குற்றெழுத்திேனாடு கூடி நிரையசை ஆயிற்று.

அன்னையையான் நோவ(து) அவமால்; அணியிழாய்!
புன்னையையான் நோவன் புலந்து
(யா வி. 9, யா.கா. 36)

இப்பாடலிலும் சீர்நடு ஐகாரம் இரண்டாய் நிரையசையாகி வருகிறது.

மொழிக்கடை ஐகாரம் நிரையசை ஆதலுக்குக் காட்டு :

கெண்டையை வென்ற கிளரொளி உண்கண்ணள்
பண்டையள் அல்லள் படி
(யா. வி. 9, யா. கா. 36)

இப்பாடலுள் 'கெண்டையை' என்பதில், ஐகாரம் இரண்டாய், நிரையசையாகி வருகிறது.

வி-ரை : ஐகாரம் ஒரு மாத்திரை அளவிலேயே இங்கு அமைதல் காண்க. 'அய்' என உயிரும், யகர ஒலியும் அமைந்தாலும் வெறும் குறிலுயிர்க்குரிய ஒலியளவை மட்டுமே பெறுதல் காண்க. இதனால் ஐகாரம் என்ற தனி எழுத்து வேண்டாம் என்பார் பக்கம் வலிமை ஏறுகிறது.

## சீர்

55. ஈரசைச்சீர்........வஞ்சி.

பொ-ள் : இரண்டசை இணைந்து நின்றது 'இயற்சீர்' எனப்படும்; அவை நான்கு. மூன்று அசையான் ஆகிய சீர் உரிச்சீர்; அவை எட்டு. அவற்றுள் நேரசையால் முடிவன வெண்பா உரிச்சீர்களாம்; நிரையால் முடிவன வஞ்சிப்பா உரிச்சீர்களாம்.

எ.டு : தேமா, புளிமா, கருவிளம், கூவிளம் என்ற நான்கும் ஈரசை இயற்சீர்களாம். இவை அமைந்த பாடல் வருமாறு :

குன்றக் குறவன் காதல் மடமகள்
வரையர மகளிர்ப் புரையும் சாயலள்
ஐயள் அரும்பிய முலையள்
செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே (ஐங்குறுநூறு 255)

தேமாங்காய், புளிமாங்காய், கருவிளங்காய், கூவிளங்காய் என்ற நான்கும் நேரசையால் முடியும் வெண்பா உரிச்சீர்களாம். அவை அமைந்த பாடல் வருமாறு :

வான்தோயும் பொன்னெயிலான் வண்டார் மலரடிக்கீழ்த்
தேன்தோய் மலர்பெய்ம்மின் சென்று
(யா. வி. 12)

தேமாங்கனி, புளிமாங்கனி, கருவிளங்கனி, கூவிளங்கனி என்ற நான்கும் நிரையீற்று வஞ்சிப்பா உரிச்சீர்களாம். அவை இடம்பெற்ற வஞ்சிப்பா வருமாறு :

சுற மறிவன துறையெல்லாம்;
இற வின்பன இல்லெல்லாம்;
மீன் திரிவன கிடங்கெல்லாம்;
தேன் தாழ்வன பொழிலெல்லாம்;

என வாங்கு

தண்பணை தழீஇய இருக்கை
மண்கெழு நெடுமதில் மன்னன் ஊரே.

(யா. வி. 12, யா. கா. 22)

வி-ரை : இயற்சீர், உரிச்சீர், பொதுச்சீர் என்று சீர் மூவகைப் படும்.

ஈரசை நாற்சீர் அகவற் குரிய வெண் பாவினமாம்;
நேரசை யாலிற்ற மூவசைச் சீர்நிரை யாலிறுப
வாரசை மென்முலை மாதே வகுத்தவஞ் சிக்குரிச்சீர்
ஓரசையே நின்றும் சீராம் பொதுவொரு நாலசையே

என்பது யாப்பருங்கலக்காரிகை (6)

தற்போது மா, விளம், காய், கனி என்று வழங்குவதற்கு மாறாக, இவற்றிற்கு வேறு பெயர்களும் வழங்கி இருக்கின்றன. அவை வருமாறு :

தேமா : பூமா, இம்மா, வேங்கை, காசு.

புளிமா: மலர்பூ, எழினி, அரிமா, பிறப்பு.

கருவிளம் : கணவிரி, மலர்மழை, இனிமொழி, வலம்புரி, வரிவளை.

கூவிளம் : பாதிரி, பூமழை, இன்மொழி, சந்தனம், நூபுரம்.

தேமாங்காய் : பூவாமா, பொன்னுக்கும், தென்மேற்கு, வேய் மென்தோள்.

புளிமாங்காய் : விரிபூமா, பொருளாக்கும், வடமேற்கு, வளை மென்தோள்.

கருவிளங்காய் : நறுவடிமா, பொருள் பெருக்கும், வடகிழக்கு, வளைகெழுதோள்

கூவிளங்காய் : பூவிரிமா, பொன்பெருக்கும், தென்கிழக்கு, வேய் கெழுதோள்.

தேமாங்கனி : மாவாழ்சுரம், பூவாழ்பதி, மீன்வாழ்துறை, பூண்மென் முலை.

புளிமாங்கனி : புலிவாழ்சுரம், திருவாழ்பதி, சுறவாழ்துறை, புணர்மென்முலை.

கருவிளங்கனி : புலிபடுசுரம், திருவுறைபதி, சுறமறிதுறை, புணரிளமுலை.

கூவிளங்கனி : மாபடுசுரம், பூவுறைபதி, மீன்மறிதுறை, பூணிளமுலை.

இவற்றின் விரிவெல்லாம் யாப்பருங்கல விருத்தியுரையில் (12) கண்டுகொள்க.

## பொதுச்சீர்த் தொகை

56. **ஈரசைச்சீர்...பதினாறும்**

பொ-ள் : ஈரசைச் சீர்களை முன் பின்னாக வைத்தமைக்க, பதினாறு பொதுச்சீர்கள் கிடைக்கப் பெறும். அவை :

| | | | |
|---|---|---|---|
| 1. | தேமாந் தண்ணிழல் | 9. | தேமா நறும்பூ |
| 2. | புளிமாந் தண்ணிழல் | 10. | புளிமா நறும்பூ |
| 3. | கருவிளந் தண்ணிழல் | 11. | கருவிள நறும்பூ |
| 4. | கூவிளந் தண்ணிழல் | 12. | கூவிள நறும்பூ |
| 5. | தேமாந்தண்பூ | 13. | தேமா நறு நிழல் |
| 6. | புளிமாந்தண்பூ | 14. | புளிமா நறு நிழல் |
| 7. | கருவிளந்தண்பூ | 15. | கருவிள நறு நிழல் |
| 8. | கூவிளந்தண்பூ | 16. | கூவிள நறு நிழல் |

எ-டு :

1. அங்கண்வானத் தமரரரசரும்
2. வெங்களியானை வேல்வேந்தரும்
3. வடிவார் கூந்தல் மங்கையரும்
4. கடிமலரேந்திக் கதழ்ந்திறைஞ்சச்

5. சிங்கஞ்சுமந்த மணியணைமிசைக்
6. கொங்கிவரசோகின் கொழுநிழற்கீழ்ச்
7. செழுநீர்ப்பவளத் திரள்காம்பின்
8. முழுமதிபுரையும் முக்குடை நீழல்
9. வெங்கண் வினைப்பகை விளிவெய்தப்
10. பொன்புனை நெடுமதில் புடைவளைப்ப
11. அனந்தசதுட்டயம் அமைவெய்த
12. நனந்தலையுலகுடை நவைநீங்க
13. மந்தமாருதம் மருங்கசைப்ப
14. அந்தரதுந்துபி நின்றியம்ப
15. இலங்குசாமரை எழுந்தலமர
16. நலங்கிளர்பூமழை நனிசொரிதர
இனிதிருந்து
அருள்நெறி நடாத்திய ஆதிதன்
திருவடி பரவுதும் சித்திபெறற் பொருட்டே

—திருப்பாமாலை

இக்குறளடி வஞ்சிப்பாவினுள் நாலசைச் சீர் பதினாறும் முதற் கண்ணே வந்தன.

## நாலசைச்சீர்

57. **நாலசைச்சீர்.... இன்றி**

பொ-ள்: பாவினுள்ளும் பாவினத்துள்ளும் கண்ணுற நிற்றல் இல்லாமல், ஒரோ இடங்களில், நாலசைச் சீரும் வரப்பெறும்.

**வி-ரை:** காக்கைபாடினியாரும் இக்கருத்தினர் என்பது,

நாலசை யானும் நடைபெறும்; ஓரசை
சீர்நிலை எய்தலும் சில விடத் துளவே

என்ற அவர் கூற்றால் தெரிய வருகிறது.

## ஓரசைச் சீர்கள்

58. **நேர் நிரை வரினே...ஒரோவழி**

பொ-ள்: நேரசையாகவோ, நிரையசையாகவோ தனித்து வரும் ஓரசைகளும் பொதுச்சீர் வகையுள் அடங்கும். இவை ஒரோ வழி பாக்களில் பயின்று வரும்.

எ-டு: நாள்-நேர்-ஓரசைச்சீர், நாள் வாய்பாடு எனப்பெறும்
மலர்-நிரை-ஓரசைச்சீர், மலர் வாய்பாடு எனப்பெறும்

இவை வெண்பாக்களின் ஈற்றில் வரப் பெறும்.

செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கும்
எஃகதனில் கூரிய தில்

என 'நாள்' என்ற ஓரசைச் சீர் வந்தது.

தெய்வத்தான் ஆகா தெனினும் முயற்சிதன்
மெய் வருத்தக் கூலி தரும்

என 'மலர்' என்ற ஓரசைச்சீர் வந்தது.

## சீர்வரும் முறை

### 59. உரிமை இயற்சீர்......புலவர்

பொ-ள்: உரிச்சீரும் இயற்சீரும் மயங்கிவரும். வேறுவேறே ஆகியும் வரும். நேரீற்று இயற்சீர் வஞ்சிப்பாவின் இறுதியிலும், ஒத்தாழிசை கலிப்பாவிலும் வரப்பெறு.

வி-ரை: பா நான்கு, வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா எனப் பொருள் படினும் 'இருமை வேறு இயல் வெண்பா வாகியும்' என்பதன் பொருள் விளங்கவில்லை. 'வேறு இயல்' என்பதற்கு வேறு வேறாகவும் இயலும் என்று பொருள் கொள்ளப்பட்டது.

மாஞ்சீர் கலியுட் புகாகலிப் பாவின் விளங்கனிவந்
தாஞ்சீர் அடையா அகவல் அகத்தும்அல் லாதஎல்லாம்
தாஞ்சீர் மயங்கும் தளையுமஃ தேவள்ளைத் தன்மை குன்றிப்
போஞ்சீர் கனிபுகிற் புல்லா தயல்தளை பூங்கொடியே.

[யா. கா. 52]

என்ற காரிகை இங்கே இணைத்துப் பார்க்கத்தக்கது.

## வஞ்சிச்சீர் இயல்பு

### 60. நிரையிறும்......இயலா

பொ-ள்: தேமாந்தண்ணிழல், புளிமாந்தண்ணிழல், கருவிளந்தண்ணிழல், கூவிளந்தண்ணிழல், தேமா நறுநிழல், புளிமா நறுநிழல் கருவிள நறுநிழல், கூவிள நறுநிழல் என்ற நிரை இறுதியாக உடைய நாலாசைச் சீர்கள் எட்டும் வஞ்சிப்பாவில் கலந்து வரும்.

வி-ரை: 'நேர் ஈற்று அல்லவை இயலா' என்பதன் பொருள் தெளிவாகவில்லை. ''வெண்பாவினுள் நாலசைச் சீர் வாரா; கலியுள்ளும் பெரும்பான்மையும் குற்றுகரம் வந்துழி அன்றி வாரா; வஞ்சியுள் குற்றுகரம் வாராதேயும் வரப்பெறும்; வஞ்சியுள் இரண்டு நாலசைச் சீர் ஓரடியுள் அருகிக் கண்ணுற்று நிற்கவும் பெறும்; அல்லனவற்றுள் பெரும்பான்மையும் ஓரடியுள் ஒன்றன்றி வாரா'' என்பது விருத்தியுரை தரும் விளக்கம் (யா வி. 19. ப. 70).

## ஆசிரியத்துறையுள் வஞ்சி உரிச்சீர்

61. **நேர் நடு இயலா. . . . உடைய**

**பொ-ள்:** நேரசையை நடுவிலே உடையதான தேமாங்கனி, புளிமாங்கனி என்ற வஞ்சி உரிச்சீர்கள், ஆசிரியப்பாவில் வரப் பெறுதலும் உடைய.

எ-டு: 'மாரியொடு மலர்ந்த மாத்தாட் கொன்றை' என்ற ஆசிரியத்துள் 'தேமாங்கனியும்' 'குறிஞ்சியொடு கமழும் குன்ற நாட' என்ற ஆசிரியத்துள் 'புளிமாங்கனி'யும் வந்தன.

சென்றூர்ந் தமைந்த சிறுநுதி வள்ளுகிர்ப்
பொறியெருத் தெறுழ்வலிப் புலவுநா றழல்வாய்ப்
புனலாமெனக் கனலாமெனப்
புகையா நின்றன புலிமான் ஏற்றை;

என்றுங்கிவை இவை இயங்கலின்
எம்திறத்தினி வரல்வேண்டலம்
தனிவரலெனத் தலைவிலக்கலின்
இறுவரைமிசை எறிகுறும்பிடை
இதுவென்னென அது நோனுர்
கரவர விடைக்கள உளமது
கற்ரோர் ஓதும் கற்பன்றே

[யா. வி. 16, 25, 70, யா.கா. 29. மேற்.]

இவ்வாசிரியத் துறையினுள் கனிச்சீர் வந்தமை காண்க.

## தளை

62. ஈரசை..........இயல்பே

பொ-ள்: தேமா, புளிமா என்ற மாச்சீரும், கருவிளம், கூவிளம் என்ற விளச்சீரும் வரும் சீருடன் ஒன்றி வருவது ஆசிரியத் தளையின் இலக்கணமாம்.

வி-ரை: காய் முன் நேர் வரின் வெண்சீர் வெண்டளை } வெண்பாவிற்
மா முன் நிரை வரின் இயற்சீர் வெண்டளை } குரியன.

மா முன் நேர் வரின் நேரொன்றிய ஆசிரியத்தளை } ஆசிரியப்
விளம் முன் நிரை வரின் நிரை ஒன்றிய ஆசிரியத் } பாவிற்
தளை } குரியன

காய் முன் நிரை வரின் கலித்தளை — கலிப்பாவிற்குரியது.

கனி முன் நேர் வரின் ஒன்ரு வஞ்சித்தளை } வஞ்சிப்பாவிற்
கனி முன் நிரை வரின் ஒன்றிய வஞ்சித் } குரியன
தளை }

இவற்றுள் ஆசிரியப் பாவிற்குரிய தளைகள் ஈண்டுக் குறிக்கப்பட்டன.

எ—டு : உள்ளார் கொல்லோ தோழி! முள்ளுடை
அலங்குகுலை ஈந்தின் சிலம்பிபோதி செங்காய்
துகில்பொதி பவளம் ஏய்க்கும்
அகில்படு கள்ளியங் காடிறந் தோரே

[ஐங்குறுநூறு, தனிப். 2]

## அடிகளுக்குரிய சீர்கள்

63. இரண்டினும் மூன்றினும்......மூன்றே

பொ-ள்: வஞ்சிப்பா, இருசீர் அடியானும் முச்சீர் அடியானும் வரப்பெறும். பிற வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, நாற்சீரடிகளால் நடக்கும்.

வி-ரை: இருசீரடி குறளடியாம்; முச்சீரடி சிந்தடியாம்; நாற்சீரடி நேரடி அல்லது அளவடியாம்; ஐஞ்சீரடி நெடிலடியாம்; ஐஞ்சீர்க்கு மேலுள்ளன கழிநெடிலடியாம். இவற்றுள் வஞ்சிப்பா, குறளடி, சிந்தடிகளைப் பெறும்; பிற பாக்கள் அளவடிகளைப் பெறும் என்பது நூற்பாவின் கருத்து.

எ-டு : அளவடி பெறும் வெண்பா :

சுனைவாய்ச் சிறுநீரை, 'எய்தாது' என்றெண்ணி
பிணைமான் இனிதுண்ண வேண்டி கலைமாதன்
கள்ளத்தின் ஊட்டும் சுரம் என்பர், காதலர்
உள்ளம் படர்ந்த நெறி.

[ஐந்திணை ஐம்பது. 38.]

அளவடி பெறும் ஆசிரியப்பா :

குரங்கின் தலைவன் குருமயிர்க் கடுவன்
சூரல்அம் சிறுகோல் கொண்டு, வியல்அறை
மாரி மொக்குள் புடைக்கும் நாட!
யாம் நின் நயந்தனம் எனினும்,எம்
ஆய்நலம் வாடுமோ அருளுதி எனினே?

[ஐங்குறுநூறு, குரக்குப்பத்து 5.]

அளவடி பெறும் கலிப்பா

பல்வளம் பகர்பூட்டும் பயனிலம் பைதறச்
செல்கதிர் ஞாயிறு செயிர்சினஞ் சொரிதலிற்
றணிவில்வெங் கோடைக்குத் தண்ணயந் தணிகொள்ளும்
பிணிதெற லுயக்கத்த பெருங்களிற் றினந்தாங்கு
மணிதிகழ் விறன்மலை வெம்ப மண்பகத்
துணிநயந் துகள்பட்ட தூங்கழல் வெஞ்சுரம் ;
கிளிபுரை கிளவியாய் நின்னடிக் கெளியவோ
தளியுறு பறியாவே காடெனக் கூறுவீர்
வளியினும் வரைநில்லா வாழுநா ளும்மாகத்
தளியென வுடையேன்யா னவலங்கொண் டழிவலோ ;
ஊறுநீ ரமிழ்தேய்க்கு மெயிற்றுய்நீ யுனல் வேட்பின்
ஆறுநீ ரிலவென அறனேச்கிக் கூறுவீர்
யாறுநீர் கழிந்தன்ன விளமைநுந் நெஞ்சென்னுந்
தேறுநீ ருடையேன்யான் றெருமந்தீங் கொழிவலோ ;
மாணெழில் வேய்வென்ற தோளாய்நீ வரிற்றுங்கு
மாணிழ லிலவாண்டை மரமெனக் கூறுவீர்
நீணிழற் றளிர்போல நிறனழித்த லறிவேனும்
தாணிழல்கை விட்டியான் றவிர்தலைச் சூழ்வலோ ;

எனவாங்கு,

அணையரும் வெம்மையை காடெனக் கூறுவீர்
கணைகழி கல்லாத கல்பிறங் காரிடைப்
பணையெருத் தெழிலேற்றின் பின்னர்ப்
பிணையுங் காணிரோ பிரியுமோ வவையே.

(பாலைக்கலி, 20)

குறளடி அல்லது சிந்தடி பெறும் வஞ்சிப்பா

பூந்தண்சினை மலர்மல்கிய பொழிற் பிண்டி
வேந்தன் கழல் பரவாதவர் வினைவெல்லார்

அதனால்

அறிவன தடியினை பரவப்
பெறுகுவர் யாவரும் பிறவியின் நெறியே.

யர். கா. மேற்கோள். 14

## பாவினங்களுக்கு அடிவரையறை

64. **எல்லா அடியினும்......இயலா**

பொ-ள்: தாழிசை, துறை, விருத்தம் என்ற பாவினங்கள் குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என எல்லா அடிகளையும் பெறும். வெண்பா, அகவற்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்ற நான்கு பாக்கள், நாற்சீருக்கு மேற்பட்ட அடிகளைப் பெறா.

எ-டு: குறளடியிற் வந்த பாவினம்

மை சிறந்த மணிவரை
கை சிறந்தன காந்தளும்
பொய் சிறந்தனர் காதலர்
மெய் சிறந்திலர் விளங்கிழாய்.

[யா. வி. 28, யா. கா. 34 மேற்.]

பத்துச்சீர் உடைய கழி நெடிலடிக்குச் சான்று:

'கல்லடைந்த சீறூர்க் கணையடைந்த வெஞ்சிலையர்
கடுவாய் வேடர் கற்பொன் றில்லாக் கலையேற் றூர்தி
சொல்லடைந்த பெண்மைச் சுரும்படைந்த பூங்கோதைச்
செவ்வாய்ச் சிதரரிக்கண் அவ்வாய் மென்தோளாள்'

[யா. வி. 28, ப. 122.]

## பாவிற்குரிய அடி எல்லை

### 65. ஒன்றும் இரண்டும்......பெருமை

**பொ-ள் :** வெண்பாவிற்குச் சிற்றெல்லை ஈரடி; ஆசிரியப்பா விற்கும் வஞ்சிப்பாவிற்கும் கீழெல்லை மூன்றடி; கலிப்பாவிற்குக் கீழெல்லை நான்கடி. பாவிற்கு மேல் எல்லை கூறப் பெருது.

**வி-ரை :** பாவிற்கு மேல் எல்லை கூறுவாரும், கூருதோரும் என இருதிறத்தார் இருந்துள்ளனர். பாவிற்கு மேல் எல்லை உண்டு என்று நற்றத்தனுர், தொல்காப்பியனுர், சங்கயாப்புடையார், பல்காயனுர், பேராசிரியர் (மயேச்சுரர்), பரிமாணனுர் ஆகியோர் கருதினர்; வரையறுத்தனர். பாவியற்றிய பாவலனின் உள்ளக் கருத்தின் அளவே பாடற்கு மேல் எல்லை என்று கொண்டனர் அவிநயனுர், அமுத சாகரனுர், காக்கை பாடினி ஆகியோர்.

பாவிற்கு கீழெல்லை 'ஓரடி' என்ற கருத்தினர் அவிநயனுர் என்பது, இந்நூற்பாத் தொடக்கத்தால் தெரிகிறது. ஒரே 'வரியில் அரிய நீதிகளை வழங்கும் ஆத்திச் சூடி, கொன்றை வேந்தன் போன்ற நீதி நூல்கள் பாவரிகள் ஒரே வரியின. இவை போன்றன, அவிநயனுர் காலத்து வழங்கின ஆதல் வேண்டும்.

> வெள்ளைக் கிரண்டடி வஞ்சிக்கு மூன்றடி மூன்றகவற்
> கெள்ளப் படாக்கலிக் கீரிரண டாகும் இழிபுரைப்போர்
> உள்ளக் கருத்தின் அளவே பெருமைஒண் போதலைத்த
> கள்ளக் கருநெடுங் கட்சுரி மென்குழல் காரிகையே.

என்பது யாப்பருங்கலக் காரிகை (14).

## மேற்கதுவாய் - கீழ்க்கதுவாய்த் தொடை

### 66. கடையயல் .... கீழ் மேல்

**பொ-ள் :** 1, 3, 4 எனச் சீர்கள் ஒத்திருப்பது மேற்கதுவாய்த் தொடை; 1, 2, 4 எனச் சீர்கள் ஒத்திருப்பது கீழ்க்கதுவாய்த் தொடை.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| எ-டு : | மேற்கதுவாய் : | அரும்பிய | கொங்கை | அவ்வளை | அமைத்தோள் |
| | | 1 | | 3 | 4 |
| | கீழ்க்கதுவாய் : | அவிர்மதி | அனைய | திருநுதல் | அரிவை |
| | | 1 | 2 | | 4 |

## ஒரூஉத் தொடை

67. **ஒரூஉத் தொடை… …புலவர்**

**பொ-ள் :** முதற் சீரும் நான்காம் சீரும் ஒத்திருப்பது ஒரூஉத் தொடையாம்.

**எ-டு :** அம்பொன் கொடிஞ்சி நெடுந்தேர் அகற்றி
1 4

## அளபெடைத்தொடை

68. **அளபெழின்……அளபெடை**

**பொ-ள் :** சீர் தோறும் அளபெடுக்குமாறு தொடுப்பது அளபெடைத்தொடை.

**எ-டு :** ஏஎர் ஆஅர் நீஇள் ஈஇர்

## முரண் தொடை

69 **மறுதலை……ஆகும்.**

**பொ-ள் :** அடிதோறும் மொழிமுதற் கண் சொல்லாலும் பொருளாலும் மறுதலைப்படத் தொடுப்பது முரண்தொடை எனப்படும்.

**எ-டு :** சிறிய பெரிய நிகர் மலர்க் கோதை.

## செந்தொடை

70 **மாறல தொவ்வா……செந்தொடை.**

**பொ-ள் :** அசையிலும், சீரிலும், இசையிலும் எதுவும் பொருந்தாமல் தொடுக்கப் பெறுவது செந்தொடையாம்.

**எ-டு :** பூத்த வேங்கை வியன்சினை ஏறி
மயிலினம் அகவும் நாடன்
நன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே

[தொல். செய். 100, பேராசிரியம். யா. வி. 50, யா. கா. 18, தமிழ் நெறி விளக்கம். 17]

## இரட்டைத் தொடை

71 ஒருசீர்... ..இரட்டை

பொ-ள் : ஓரடி முழுதும் ஒரு சொல்லே வரத் தொடுப்பது இரட்டைத் தொடையாம்.

எ-டு : நிற்பவே நிற்பவே நிற்பவே நிற்பவே

செந்நெறிக் கண்ணும் புகழ்க்கண்ணும் சால்பினும்
மெய்ந்நெறிக் கண்ணும்வாழ் வார்.

(நீலகேசி. 51 மேற்.)

## ஒரே பாவில் தொடைபல, தளைபல வரல்

72 மயங்கிய தொடை.........ஆகும்

பொ-ள் : ஒரு செய்யுளிடத்துத் தொடை பல தொடுத்து வந்தாலும், தளைபல விரவி வந்தாலும் அவற்றை முதல் வந்த தொடையாலும், முதல் வந்த தளையாலும் பெயர் கொடுத்து வழங்குதல் வேண்டும்.

வேரல் வேலி வேர்க்கோட் பலவின்
சாரல் நாட! செவ்வியை ஆகுமதி
யாரஃ தறிந்திசி னோரே? சாரற்
சிறுகோட்டுப் பெரும் பழம் தூங்கி யாங்கிவள்
உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே!

(குறுந்தொகை, 18)

இப்பாடலுள் அடி எதுகை, கூழை மோனை, ஒரூஉ எதுகை, இணை முரண், கடையிணை எதுகை, பின் முரண் வந்தன. எனினும் முதற் கண் வந்த அடிப்படையில் அடி எதுகைச் செய்யுள் என்றலே மரபு. விரிவு யாப்பருங்கல விருத்தியில் கண்டுகொள்க.

## வெண்பா

73 ஏந்திசைச் செப்பல்... .....ஆகும்

பொருள் : வெண்பாவிற்குரிய அனைத்து உறுப்புகளும் பெற்று, ஏந்திசைச் செப்பலோசை உடையதாய் வருவது ஒரு வகை வெண்பாவின் இலக்கணமாகும்.

வி-ரை : வெண்பாவிற்குரிய ஓசை ஏந்திசைச் செப்பல், தூங்கிசைச் செப்பல், ஒழுகிசைச் செப்பல் என மூவகை. வெண்சீர் வெண்டளையான் வருவது ஏந்திசைச் செப்பல்; இயற்சீர் வெண்டளை யான் வருவது தூங்கிசைச் செப்பல்; இரு தளைகளும் கலந்து வருவது ஒழுகிசைச் செப்பல்.

எ-டு: ஏந்திசைச் செப்பலோசை பெற்ற வெண்பா வருமாறு :

யாதானும் நாடாமால்; ஊராமால்; என்னொருவன்
சாந்துணையும் கல்லாத வாறு.

## வெண்பாவின் கடைசி அடியும், சீரும்

74 **முச்சீர் அடியான்......இறுதியாம்**

பொ-ள் : முச்சீர்களையுடைய சிந்தடியாய் முடியப் பெறுவதும், கடைசிச்சீர், நாள் அல்லது மலர் என ஓரசையால் இறுவதும் வெண் பாவின் இலக்கணங்களாம்.

வி-ரை : வெண்பாவின் ஈறு நாள், மலர், காசு, பிறப்பு என்னும் வாய்பாடுகளுள் ஒன்று கொண்டு முடியும்.

எ-டு: குன்றேறி யானைப் போர் கண்டற்றால் தன்கைத்து ஒன்று
உண்டாகச் செய்வான் வினை.
மலர் வாய்பாடு வந்தது.

(திருக்குறள், 785)

இன்பம் விழையான் வினை விழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண்.
நாள் வாய்பாடு வந்தது.

(திருக்குறள், 615)

## நேரிசை வெண்பா

75 **குறட்பா இரண்டவை......நேரிசை வெண்பா**

பொ-ள் : இரண்டு குறள் வெண்பாவாய், நடுவுத் தொடைக் கேற்ற தனிச் சொல் பெற்று, முதற்குறட்பாவின் முதற்றொடை, எதுகை, பகைத்தொடை, அளபெடை என்னும் நான்கு தொடையாய், ஒத்த விகற்பத்தானும் ஒவ்வா விகற்பத்தானும் வருவது நேரிசை வெண்பாவாம்.

எ டு : வஞ்சியேன் என்றவன்தன் ஊருரைத்தான் யானுமவன்
வஞ்சியான் என்பதனுல் வாய் நேர்ந்தேன்—வஞ்சியான்
'வஞ்சியேன் வஞ்சியேன்' என்றுரைத்தும் வஞ்சித்தான்
வஞ்சியாய் வஞ்சியார் கோ.

## குறள் வெண்பாவும் வெண் செந்துறையும்

76 ஈரடி......வெண்பா

பொ-ள் : இரண்டு அடிகளால், வெண்பா இலக்கணம் பிறழாமல் இயற்றப்படுவது குறள் வெண்பா. ஒலி ஒத்த அடிகளை உடையது செந்துறை வெண்பா.

வி-ரை : ஒழுகிய ஓசையினை உடையதாய்த் தம்முள் ஒத்து வந்த இரண்டு அடித்தாய், விழுமிய பொருளைத் தந்து நிற்பது வெண்செந்துறை என்றும் செந்துறை வெள்ளை என்றும் கூறப்படும்.

எ-டு : ஆர்கலி உலகத்து மக்கட் கெல்லாம்
ஓதலின் சிறந்தன் றொழுக்கம் உடைமை.

[முதுமொழிக்காஞ்சி 1]

## பஃறொடை வெண்பா

77 தொடைமிக......வெள்ளை

பொ-ள் : வெண்பா இலக்கணம் அனைத்தும் பொருந்தி, பல தொடையான் இயற்றப் பெறுவது பஃறொடை வெண்பாவாம்.

எ-டு : மலைமேல் மரங்கொணர்ந்து மாண்புடைத்தாச் செய்த
நிலையொத்த வீதி நெடுமாடக் கூடல்
விலைத்தயிர் கொள்ளீரோ? என்பாள் முலைஇரண்டும்
சோழன் உறந்தைக் குரும்பையோ? தொண்டைமான்
வேழஞ்சேர் வேங்கடத்துக் கோங்கரும்போ? ஈழத்துத்
தச்சன் கடைந்த இணைச் செப்போ? அச்சுற்றுள்
அன்னமோ? ஆய்மயிலோ? ஆரஞர்நோய் செய்தானை
இன்னந் தெரிகிற் றிலம்.

பஃறொடை வெண்பா வகைகளைப் பற்றி 'வெண்பா ஓர் ஐந்தும்...' என்று தொடங்கும் அமுதசாகர உரையில் விரிவாகக் கூறப்பெற் றுள்ளது காண்க.

# வெண்பா இனங்கள்

78 **வெண்பாத் தாழிசை......என்ப**

பொ-ள் : வெண்பா முதலான ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்ற நால்வகைப்பாக்கள் அனைத்தும், தாழிசை, துறை, விருத்தம் என்ற பாவினங்களைப் பெறும் என்பர் அறிஞர்.

வி-ரை : பாவினங்களின் வரிசை வைப்பில் இரு கருத்துகள் உண்டு. விருத்தம், துறை, தாழிசை என்று வைப்பது காக்கை பாடினியார் முறை.

வெண்பா விருத்தம் துறையொடு தாழிசை
என்றிம் மூறையின் எண்ணிய மும்மையும்
தத்தம் பெயரான் தழுவும் பெயரே.

என்பர் காக்கை பாடினியார்.

மாருக, தாழிசை துறை விருத்தம் என்பது சிறுகாக்கை பாடினியார் முறை.

பாவே தாழிசை துறையே விருத்தமென
நால்வகைப் பாவும் நானுன் காகும்

என்பது சிறுகாக்கைபாடினியம். அவிநயனுர் இவர் முறையைப் பின்பற்றினுர். அமுத சாகரரும் இம்முறையினரே என்பது அவர்தம் யாப்பருங்கல, யாப்பருங்கலக் காரிகை, அமுதசாகரம் ஆகியவற்றில் காண்க

தாழிசை துறை விருத்தம் மூன்றிற்கும் யாப்பருங்கல விருத்தியுரைகாரர் தருவது பொருத்தமான விளக்கமாம். அவர் விளக்கம் பின்வருமாறு :

தாழிசை : ஒரு புடையால் தத்தம் பாவினேடு ஒத்தலானும், ஒத்த தாழத்தால் இசைத்தலானும், ஒத்த பொருள்மேல் பெரும் பான்மையும், மூன்ருய்த் தாழ்ந்திசைத்தலானும், எல்லா அடியானும் ஒத்து நடத்தலானும் 'தாழிசை' என்பது காரணக்குறி.

துறை : ஒரு புடையால் தத்தம் பாவிற்குத் துறை போன்று நெறிப்பாடு உடைத்தாய்க் கிடத்தலானும் எல்லாத் துறைமேலும் இனிது நடத்தலானும் 'துறை' என்பதும் காரணக்குறி.

விருத்தம் : 'ஒரு புடையால் தத்தம் பாவினோடு ஒத்த ஒழுக்கத்தானும், எல்லா அடியும் ஒத்து நடத்தலானும், புராணம் முதலாகிய விருத்தம் உரைத்தலானும், 'விருத்தம்' என்பதும் காரணக்குறி. இது வடமொழித் திரிசொல் எனக் கொள்க.

தமிழில் புதுவதாக வந்து பெருகி செல்வாக்குப் பெற்றது ஆதலால் விருந்து—புதுமை—விருத்தம் என அமைந்தது எனலாம். வருந்து > வருத்தம் ; திருந்து > திருத்தம்; விருந்து ▷ விருத்தம். அங்ஙனமெனில் இது வடமொழித் திரிபன்று. தூய தமிழ்ச் சொல்லே.

## வெள்ளொத்தாழிசை

79 அடி மூன்றாகி......வெள்ளொத்தாழிசை

பொ-ள்: அடி மூன்றாய், வெண்பா வினைப் போல ஈற்றடி மூன்று சீராய் முடிவது வெள்ளொத் தாழிசையாம்.

வி-ரை : வெண்டாழிசை என்பது இதற்குப் பிறிதொரு பெயர். சிந்தியல் வெண்பாவிற்கும் இதற்கும் உள்ள வேற்றுமை என்ன? இரண்டும் அடி சீர் அளவில் ஒற்றுமை உடையன. தாழிசைக்கு வெண்பா இலக்கணம் இருத்தல் வேண்டும் ; கடப்பாடில்லை. இதுவே வேற்றுமை.

எ-டு : சீர் கொண்ட கருங்கடலிற் றிரை முகந்து வலனேந்திக்
கார்வந்த தகனெடும் கமழ் குழலாய்! நிற்பிரிந்தார்
தேர்வந்த திது காணாய்! சிறந்து!

## வெண்டுறை

80 ஐந்தா றடியின்......படுமே

பொ-ரு : மூன்றடி முதலாக ஒன்று தலைச் சிறந்து ஏழடிகாறும் வந்து, கடைக்கண் ஓரடியும் பல அடியும் ஒரு சீரும் இரு சீரும் பல சீரும் குறைந்து, (அவை எல்லாம் ஓர் இசையாய் வரினும், முதல் ஓர் இசையாய்ப் பின் ஓரிசையாய்) வரினும் வெண்டுறையாம்.

வி-ரை : காக்கைபாடினியார், மயேச்சுரர் கூறுவன அவிநயத்தோடு ஒத்தன. எனினும் அமுத சாகரர் யாப்பருங்கலத்தில் கூறுவது சற்று விரிவான இலக்கணம்.

மூன்றடி முதலா ஏழடி காறும் வந்
தீற்றடி சிலசில சீர்தப நிற்பினும்
வேற்றொலி விரவினும் வெண்டுறை யாகும்

[யா. வி. 67]

எ-டு :

கல்லாதார் நல்லவையுட் கல்லேபோற் சென்றிருந்தால்
கருமம் யாதாம்?

இல்லாதார் செல்வரைக் கண்டிணங்கியே ஏமுற்ருல்
இயைவ தென்னும்?

பொல்லாதார் நன்கலன்கள் மெய் புதையப் பூண்டாலும்
பொலிவ தென்னும்?

புல்லாதார் பொய்க்கேண்மை புணைந்துரைத்தால்
ஆவதென்னே?

அல்லாதார் பொய்யாவ தறிபவேல் அமையாதோ?

## வெளி விருத்தம்

81 **மூன்று நான்கடி.... ..வெளிவிருத்தம்மே**

பொ-ள் : மூன்று, நான்கடிகள் பெற்று, அடிதோறும் தனிச் சொல் பெற்றமைவது வெளிவிருத்தமாம்.

எ-டு : ஆடு கழை கிழிக்கும் அந்தண் புயலிற்றே—எந்தை குன்றம்;
நீடு கழைமேல் நிலா மதியம் நிற்குமே—எந்தை குன்றம்;
கூடு மழைதவழும் கோடுயர் சந்தமே—எந்தை குன்றம்.

வி-ரை : வெள்ளொத் தாழிசை, வெண்டாழிசை எனத் தாழிசை இரண்டாம்; ஓரொலி வெண் துறை, வேற்ருெலி வெண் துறை என வெண்துறை இரண்டாம்; அடிமறிமண்டில வெளி விருந்தம், நிலே வெளிவிருத்தம் என்று விருத்தம் இரண்டாம். ஆக ஆறும் என்று பகுப்பர் யாப்பருங்கல விருத்தி உரையாளர். வெண் பாவிற்குரிய தாழிசை துறை விருத்தம் பற்றியகாரிகை வருமாறு :

மூன்றடி யானும் முடிந்தடி தோறும் முடிவிடத்துத்
தான்தனி சொற்பெறும் தண்டா விருத்தம்; வெண்டாழிசையே
மூன்றடி யாய்வெள்ளை போன்றினும்! மூன்றிழி பேழுயர்வாய்
ஆன்றடி தாம்சில அந்தம் குறைந்திறும் வெண்துறையே

[யா. கா. 27]

## ஆசிரியப்பா

### 82 தன்பால் உறுப்பு......என்ப

பொ-ள் : இனிய உயிர்கட்கு அன்பாக உரைக்கப்பட்ட பா ஆசிரியப்பா ஆகும்; தனக்குரிய எல்லா இலக்கணமும் பிறழாமல் பெற்ற மெல்லிய, இனிய பாவான ஆசிரியப் பாவிற்கு அகவல் ஓசை உரியதாகும்.

வி-ரை : 'மெல்லிய இன்பா அகவல்' என்பதும், 'இன்னுயிர்க்கு அன்பா அறைந்த ஆசிரியம்' என்பதும் ஆசிரியப் பாவிற்கு அவிநயனூர் தரும் சிறப்புகளாம். அகவலோசை மூன்று திறந்தன. அவை : ஏந்திசை அகவல், தூங்கிசை அகவல், ஒழுகிசை அகவல்.

மா முன் நேர் வரும் நேரொன்றிய ஆசிரியத் தளையான் வருவது ஏந்திசை அகவல் :

அம்ம வாழி! தோழி! நம்மூர்ப்
பொய்கைப் பூத்த, புழற்கால் ஆம்பல்
தாதேர் வண்ணம் கொண்டன
ஏதில் ஆளர்க்குப் பசந்த என் கண்ணே. [ஐங்குறுநூறு 34]

விளம் முன் நிரை வரும் நிரையொன் றாசிரியத்தளை வருவது தூங்கிசை அகவல் :

நெய்யொடு மயக்கிய உழுந்துநூற் றன்ன
வயலையம் சிலம்பின் தலையது
செயலையம் பகைத்தழை வாடும் அன்னாய்!
(ஐங்குறுநூறு 211)

நேரொன்று ஆசிரியத்தளையும், நிரையொன்று ஆசிரியத்தளையும் விரவத் தொடுப்பது ஒழுகிசை அகவல்.

இந்திர விழவின் பூவின் அன்ன
புன்தலைப் பேடை வரிநிழல் அகவும்
இவ்வூர் மங்கையர்த் தொகுத்துஇனி
எவ்வூர் நின்றன்று மகிழ்ந! நின்தேரே!
(ஐங்குறுநூறு 62)

## ஆசிரியப்பா ஈறு

83 **ஏ யெனச் சொல்லின்......ஆகும்**

84 **என்னென் சொல்லும்......நிலை மண்டிலமே**

பொ-ள் : ஆசிரியப்பா பெரும்பாலன, 'ஏ' என இறுதி பெற்று முடியும். ஒரு சில ஓ, ஆ என்பனவற்றையும் பெற்று முடியும். நிலைமண்டில ஆசிரியப்பா, என் முதலான பிற சொல்லும் பெற்று முடியும்.

**வி-ரை :** இவற்றை எல்லாம் ஒருங்கு சேர்த்து, அமுதசாகரர்,

அகவல் இசையன அகவல் ; மற்றவை
ஏ ஓ ஈ ஆய் என் ஐ என்று இறுமே

என்றனர் (யா. வி. 69).

அம்ம வாழி ! தோழி ! மகிழ்நன்
ஒருநாள் நம்இல் வந்ததற்கு, எழுநாள்
அழுப என்ப, அவன் பெண்டிர்
தீ உறு மெழுகின் ஞெகிழ்வனர் விரைந்தே

(ஐங்குறுநூறு 32)

## நேரிசை ஆசிரியப்பா

85 **இற்றதன் மேலடி......ஆசிரியம்மே**

பொ-ள் : ஈற்றயலடி ஒரு சீர் குறைய முச்சீரடியான் வருவன நேரிசை ஆசிரியப்பா எனப்படும்.

எ-டு : நிலத்தினும் பெரிதே; வானினும் உயர்ந்தன்று;
நீரினும் ஆர் அளவின்றே சாரல்
கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு
பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே

(குறுந்தொகை 3)

## இணைக்குறள் ஆசிரியப்பா

86 **இடைபல......ஆகும்**

பொ-ள் : முதலடிக்கும் ஈற்றடிக்கும் இடைப்பட்ட அடிகள், நான்கு சீரின் குறைந்து இரண்டாயும், மூன்றாயும் வரப்பெறுவது இணைக்குறள் ஆசிரியப்பா வாகும்.

எ-டு : இவனினும் இவனினும் இவள் வருந்தினளே!
இவளினும் வருந்தினன் இவனே!
இவனைக் கொடுத்தோன் ஒருவனும் உளனே;
தொடிக்கை பிடித்தோன் ஒருவனும் உளனே;
நன்மலை நாடனும் உளனே;
புன்னையங் கானற் சேர்ப்பனும் உளனே !
(யா. விருத்தி மேற். 72, பக்கம் 271)

## அடிமறி மண்டில ஆசிரியப்பா

87 **கொண்ட அடி முதலா......நிலை மண்டிலமே**

பொ-ள் : முதலடி முதலாக ஈற்றடி ஈருக உள்ள அடிகள் யாவும் தம்முள் ஒத்து முடிவது அடிமறி மண்டில ஆசிரியப்பா எனப்படும்.

வி-ரை : மறி-திருப்பித் திருப்பி என்று பொருள். 'என்ன மறித்து மறித்துப் பேசுகிருய்' என்பது உலக வழக்கு. 'நேரிசை, இணைக்குறள், நிலைமண்டில ஆசிரியங்கள் முதலும் இறுதியும் ஒன்றி வந்தால், அவற்றை நேரிசை மண்டில ஆசிரியப்பா, இணைக்குறள் மண்டில ஆசிரியப்பா, மண்டில ஆசிரியப்பா, நிலைமண்டில ஆசிரியப் பா எனப் பெயரிட்டு வழங்குவர் ஒரு சார் ஆசிரியர்' என்பர் யாப் பருங்கல விருத்தி உரைகாரர் (ப. 274).

அடிமறி மண்டில ஆசிரியப்பாவின் சிறப்பான அமைப்பு, அதனை எப்படி மாற்றினுலும், எந்த அடி எங்கே மாறினுலும் பொருள் சிதையாது. இதனை மயேச்சுரர் குறிப்பிடுவர்:

எவ்வடி யானும் முதல் நடு இறுதி
அவ்வடி பொருள்கொளின் மண்டில யாப்பே

எ-டு : மாருக் காதலர் மலைமறந் தனரே
ஆருக் கட்பனி வரலானுவே
ஏரு மென்தோள் வளைநெகி ழும்மே
கூருய் தோழியாம் வாழு மாறே

## நிலை மண்டில ஆசிரியப்பா

88 **ஒத்த அடித்தாய் .....நிலை மண்டிலமே**

பொ-ள் : நேரிசை, இணைக்குறள் போல் அல்லாமல் எல்லா அடியும் சீர் ஒத்து நின்றவாறே நின்று முடிவதாயும், 'என்' என்ற சொல்லை ஈற்றிலே பெறுவதாயும் அமைவது நிலைமண்டில ஆசிரியப் பா ஆகும்.

வி-ரை : உதயணன் கதையும், கலியாண கதையும் 'என்' என்ற அசைச்சொல்லால் முடிந்த நிலைமண்டிலம் என்பர் யாப்பருங்கல விருத்தி உரைகாரர் (சூ. 74). 'என்' மட்டுமன்றி, ஏ, ஓ, ஈ, ஆ, ஐ முதலாயினவும் ஈறுக வரப் பெறும் என்பர்.

எ-டு : தகைமலி வேழம் தலைக்கடை இழிந்து
அகம்புக் கனனல் அரசவை விடுத்தென்
(கரடு பெயர்ந்தது 99—100)

வீதியின் எய்தி விழவு டமுழந்துறீஇப்
பதனறிந்து நுகுருமாற் பண்புமிகச் செறிந்தென்
(மதன மஞ்சிகை வதுவை, 157—158)

பெருங்கதையில் உள்ள எல்லா இலம்பகங்களும் 'என்' என்றே முடித்துள்ளன. இந்நூலில் உள்ள பாக்கள் அனைத்தும் நிலைமண்டில ஆசிரியப் பாவே. வீரசோழியம் இதனைச் சுட்டும் (யாப்பு 9). னகரத்தை ஈருகப் பெரும் இயைபு என்ற வனப்புச் செய்யுளுக்கு இதனைக் காட்டுவர் யாப்பருங்கல விருத்தி உரையாசிரியரும் (சூத். 69), பேராசிரியரும் (செய்யுளியல் 240), இலக்கண விளக்க ஆசிரியரும்.

## ஆசிரியத் துறை

89 **நாற்சீர் அடி நான்கு .....படுமே**

பொ-ள் : அந்தத்துத் தொடை பெற்று நாற்சீர் அடி நான்கு பெறுவன; சில ஐஞ்சீரடி பெற்றும், சில நாற்சீரடியினும் குறைந்து பெற்றும் வருவன; அறுசீர், எழுசீர் என மிக்குப் பெற்று வருவன; எண்சீர்களையுடைய நான்கடிகளைப் பெற்று, ஈற்றயலடி சீர் குறைந்து வருவன; தன் சீர்ப் பாதி அடியை முடிவில் உடையன என ஓர் ஒழுங்கில்லாமல் அடி தம்முள் வெவ்வேறு சீரடிகளைப் பெற்று முடிவது ஆசிரியத் துறையாம்.

எ-டு : போதுறு முக்குடைப் பொன்னெயில் ஒருவனை
தாதுறு தாமரை அடியிணை பணிந்தார்
தாதுறு தாமரை அடியிணை பணிந்தார்
தீதுறும் தீவினை இலரே.

## ஆசிரிய விருத்தம்

90 **அறுசீர் எழுசீர்......ஆகும்**

பொ-ள் : நான்கு அடியாய் அடிதோறும் அறுசீர், எழுசீர் முதலிய கழிநெடிலடியாய் வரப்பெறத் தொடுக்கப் பெறுவது ஆசிரிய விருத்தம் ஆகும்.

எ-டு : திங்கள்மும் மாரி பெய்க; திருவறம் வளர்க ; செங்கோல்
நன்கினி தரசன் ஆள்க ; நாடெலாம் விளைக ; மற்றும்
எங்குள அறத்தி னோரும் இனிதூழி வாழ்க; எங்கள்
புங்கவன் பயந்த நன்னூல் புகழொடும் பொலிக மிக்கே !

[சீவக சிந்தாமணி இறுதியில் இடம் பெற்றுள்ள வாழ்த்துப்பா]

## கலிப்பா வகை

91 ஒத்தா ழிசைக்கலி........ என்ப

பொ-ள் : ஒத்தாழிசைக் கலி, வெண்கலி, கொச்சகக் கலி என கலிப்பா மூவகைப்படும்.

வி-ரை : நற்றத்தனார், காக்கைபாடினியார், சங்கயாப்புடையார், பேராசிரியர், அமுதசாகரர், அவிநயனார், தொல்காப்பியர் ஆகிய அனைவரும் கலிப்பாவை மூன்றாகப் பகுத்தனர். இம் மூன்று பெயர்களும் காரணக் குறி என்பர்.

ஒத்தாழிசைக்கலி : அளவிற்பட்டு ஆழம் உடைத்தாகிய பொருளைச் சொல்லுத லானும், ஓதப்பட்ட கலிப்பாவினாலும், பொது இலக்கணத்தோடு ஒத்து ஆழ முடைத்தாய் இசைத்த லானும், ஒத்துத் தாழ்ந்த புகழிற்று ஆகலானும், ஒத்த பொருள் மேல் மூன்றாய்த் தாழ்ந்திசைக்கும் ஒத்தாழிசையைத் தனக்குச் சிறப்புறுப் பாக உடையது ஆதலானும் இப்பெயர் பெற்றது.

வெண்கலிப்பா : கலியாய் வந்து ஈற்றடி முச்சீராய் வெண்பாவே போன்று இறுதலானும் வெண்பாவினிற் சிறிதே வேறுபட்டுக் கலித்த ஓசைத்து ஆகலானும் கலிவெண்பா என்றும் வெண்கலிப்பா என்றும் பெயர் பெற்றது.

கொச்சகம் : ‘பல கோடுபட அடுக்கி உடுக்கும் உடையினைக் கொச்சம் என்ப; அது போலச் சிறியதும் பெரியதும் விராய் அடுக்கியும் தம்முள் ஒப்ப அடுக்கியும் செய்யப்படும் பாட்டதனைக் கொச்சகம் என்றனர். ‘இக்காலத்தார் அதனைப் பெண்டிர்க்குரிய உடையுறுப் பாக்கியும் கொய்ச்சகம் என்றும் சிதைத்தும் வழங்குப’ என்பார் பேராசிரியர். (தொல். பொருள், 464)

ஒத்தாழிசைக் கலிப்பா என்பது உறுப்பினுல் வந்த பெயர்; வெண்கலிப்பா என்பது ஓசையால் வந்த பெயர்; கொச்சகக்கலிப்பா என்பது பொருளால் வந்த பெயர் என்பர்.

## கலிப்பா ஓசை

92 **ஆய்ந்த உறுப்பின் ...... கலியே**

பொ-ள்: ஆசிரியத்திற்குரிய அகவலோசை பெருமல் துள்ளல் ஓசையைக் கலிப்பா பெறும்.

வி-ரை: துள்ளல் ஓசை மூவகை. அவை: ஏந்திசைத் துள்ளல், அகவல் துள்ளல், பிரிந்திசைத் துள்ளல் ஆகியனவாம்.

ஏந்திசைத் துள்ள லோசை — கலித்தளை

அகவல் துள்ள லோசை — கலித்தளையும், வெண்சீர் வெண்டளையும்

பிரிந்திசைத் துள்ள லோசை — கலித்தளையும், பிற பாவிற்குரிய தளைபலவும்

## நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா

93 **விட்டிசை முதற்பா ...... உறுப்பே**

பொ-ள்: தரவு, தாழிசை மூன்று, தனிச்சொல், சுரிதகம், என முறையே அமையும். சுரிதகம் ஆசிரிய யாப்பிலோ, வெண்பா யாப்பிலோ அமையும். இவ்வாறு அமையப் பெறுவது ஒத்தாழிசைக் கலிப்பாவின் இலக்கணமாம்.

வி-ரை: தரவு: எல்லா உறுப்பின் பொருளையும் தொகுத்துக் கொண்டு தந்து முன் நிற்பது. எருத்தம் என்றும் இதற்குப் பெயர்.

தாழிசை: ஒத்த ஒரு பொருள் முடிவினுல் ஒத்த தாழ்ச்சியால் இசைத்தலானும், தரவிற் குறைந்து இசைத்தலானும், ஒத்தாழிசை எனப்பெயர் பெற்றது. தாழிசை தாழப்பட்ட இசை. 'உச்சஸ்தாயிக்கு' மறுதலையானது. இடைநிலைப் பாட்டு என்பது இதன் மறுபெயர்.

தனிநிலை: 'மிக்கதோர் சொல்' என்பர் அவிநயனுர். ஒப்பற்ற ஒரு சொல் என்பது கருத்து. ஒரு சொல்லாய்ப் பொருள் நிரம்பித் தனியே நிற்றலின் 'தனிநிலை' எனப்பட்டது. தனிச்சொல், வீட்டிசை என்பன இதன் மறுபெயர்கள்.

சுரிதகம்: ஓரிடத்து ஓடுகின்ற நீர் குழியிலோ பள்ளத்திலோ விழும் இடத்து சுரிந்தோடும். அதனைச் 'சுரிந்து' என்றும் 'சுழி' என்றும் வழங்குவர். அதுபோல், கலியோசையாய் வருவது வெண்பா அல்லது ஆசிரியப் பாவான் தக்க தொரு பொருளை உட்கொண்டு நிற்றலான் சுரிதகம் எனப்பட்டது. அடக்கியல், வைப்பு, வாரம், போக்கியல் என்பன இதன் மறுபெயர்கள்.

எ-டு: நேரிசை ஒத்தாழிசைக் கலிப்பா

அரிமா னிடித்தன்ன அஞ்சிலை வல்விற்
புரிநாண் புடையிற் புறங்காண்ட லல்லால்
இணைப்படைத் தானை யரசோ டுறினுங்
கணைத்தொடை நாணுங் கடுந்துடி யார்ப்பின்
எருத்து வலிய எறும்நோக் கிரலை
மருப்பிற் றிரிந்து மறிந்துவீழ் தாடி
உருத்த கடுஞ்சினத் தோடா மறவர்
பொருள்கொண்டு புண்செயி னல்லதை யன்போ
டருள்புற மாறிய வாரிடை யத்தம்;

இது தரவு.

புரிபுநீ புறமாறிப் போக்கெண்ணிப் புதிதீண்டிப்
பெருகிய செல்வத்தாற் பெயர்த்தர லொல்வதோ
செயலையந் தளிரேய்க்கு மெழினல மந்நலம்
பசலையா லுணப்பட்டுப் பண்டைநீ ரொழிந்தக்கால்;
பொய்யற்ற கேள்வியாற் புரையோரைப் படர்ந்துநீ
மையற்ற படிவத்தான் மறுத்தர லொல்வதோ
தீங்கதிர் மதியேய்க்குந் திருமுக மம்முகம்
பாம்புசேர் மதிபோலப் பசப்பூர்ந்து தொலைந்தக்கால்;
பின்னிய தொடர்நீவிப் பிறர்நாட்டுப் படர்ந்துநீ
மன்னிய புணர்ச்சியான் மறுத்தர லொல்வதோ
புரியவிழ் நறுநீலம் புரையுண்கண் கலும்பானுத்
திரியுமிழ் நெய்யேபோற் றெண்பனி யுறைக்குங்கால்;

இவை தாழிசை.

எனவாங்கு,

இது தனிச் சொல்.

அனையவை போற்றி நினைஇயன நாடிக்காண்
வளமையோ வைகலுஞ் செயலாகு மற்றிவண்
முளைநிரை முறுவலா ராயத்து ளெடுத்தாய்ந்த
இளமையுந் தருவதோ இறந்த பின்னே.

இது சுரிதகம். (பாலைக்கலி, 15)

## அம்போதரங்க ஒத்தாழிசைக் கலிப்பா

94 **உரைத்த ...... தரங்கம்**

பொ-ள் : தரவு, தாழிசை, அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என முறையே அமைவது.

வி-ரை : கரைசாரக் கரைசார ஒரு காலைக் கொருகால் சுருங்கி வரும் நீர்த்தரங்கமே போல நாற்சீரடியும், முச்சீரடியும், இருசீரடியுமாக ஒன்றுனுக்கு ஒன்று சுருங்கி வரும் உறுப்பு எனப்பெறும். அம்போதரங்கம், அசையடி, பிரிந்திசைக் குறள், சொற்சீரடி, எண் என்பன ஒரே பொருளன.

எ-டு : ''கெடலரு மாமுனிவர் கிளர்ந்துடன் தொழுதேத்தக்
கடல்கெழு கனைசுடரிற் கலந்தொளிரும் வாலுளை இ
அழலவிர் சுழல்செங்கண் அரிமாவாய் மலைந்தானைத்
தாரொடு முடிபிதிரத் தமனியப் பொடிபொங்க
ஆர்புனல் இழிகுருதி அகலிடம் உடனனைப்பக்
கூருகிரான் மார்பிடந்த கொலைமலி தடக்கையோய்!

இது தரவு.

''முரைசதிர் வியன்மதுரை முழுவதூஉம் தலைபனிப்பப்
புரைதொடித் திரடிண்டோட் போர்மலைந்த மறமல்லர்
அடியோடு முடியிறுப்புண் டயர்ந்தவண் நிலஞ்சேரப்
பொடியெழ வெங்களத்துப் புடைத்ததுநின் புகழாமோ ?

''கலியொலி வியனுலகம் கலந்துட னனிநடுங்க
வலியியல் அவிராழி மாறெதிர்ந்த மருட்சோவும்
மாணுதார் உடம்போடு மறம்பிதிர வெதிர்கலங்கச்
சேணுயர் இருவிசும்பிற் செகுத்ததுநின் சினமாமோ ?

''படுமணி இனநிரைகள் பரந்துடன் இரிந்தோடக்
கடுமுரண் எதிர்மலைந்த காரொலி எழிலேறு
வெரிநொடு மருப்பொசிய வீழ்ந்துதிறம் வேருக
எருமலி பெருந்தொழுவின் இறுத்ததுநின் இகலாமோ ?

இவை தாழிசை.

''இலங்கொளி மரகதம் எழில்மிகு வியன்கடல்
வலம்புரித் தடக்கை மாஅல் ! நின்னிறம்''

''விரியிணர்க் கோங்கமும் வெந்தெரி பசும்பொனும்
பொருகளி றட்டோய் ! புரையும் நின்னுடை''

இவை பேரெண்.

''கண்கவர் கதிர்மணி கனலும் சென்னியை;
தண்சுடர் உறுபகை தவிர்த்த ஆழியை ;
ஒலியியல் உவணம் ஓங்கிய கொடியினை ;
வலிமிகு சகடம் மாற்றி அடியினை''

இவை சிற்றெண்.

''போரவுணர்க் கடந்தோய் நீ;
புணர்மருதம் பிளந்தோய் நீ;
நீரகலம் அளந்தோய் நீ ;
நிழல் திகழும் படையோய் நீ''

இவை இடையெண்.

'ஊழி நீ ; உலகு நீ ;
உருவுநீ ; அருவு நீ ;
ஆழி நீ ; அருளு நீ ;
அறமுநீ ; மறமு நீ ;

இவை அளவெண்.

எனவாங்கு,

இது தனிச்சொல்.

அடுதிறல் ஒருவ ! நிற் பரவுதும் எங்கோன்
தொடுகழற் கொடும்பூட் பகட்டெழில் மார்பிற்
கயலொடு கலந்த சிலையுடைக் கொடுவரிப்
புயலுறழ் தடக்கைப் போர்வேல் அச்சுதன்
தொன்றுமுதிர் கடலுலகம் முழுதுடன்
ஒன்றுபுரி திகிரி உருட்டுவோன் எனவே.''

[விளக்கத்தனார். யா. வி. மே. பக் 303]

## வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா

95 **குறில் வயின் ..... ஆகும்**

பொ-ள்: தரவு, தாழிசை, அம்போதரங்கம், தனிச்சொல், சுரிதகம் என்று இவற்றுடன், தாழிசைக்கும் அம்போதரங்கத்திற்கும் நடுவே அராகம் என்ற வண்ணகம் வரத் தொடுப்பது இப்பாவின் இலக்கணமாம்.

வி-ரை : அராகம், அடுக்கியல், முடுக்கியல், போக்கியல், வண்ணகம் என்பன ஒரு பொருள் பல சொற்கள். அராகம் நிரையீற்று ஈரசைச் சீராகவே வரும் என்பதால் 'குறில்வயின் நிரையசை கூடிய அடி' என அவிநயனாரால் குறிக்கப்பட்டது. கலித்தொகையிலும் பிற இலக்கியங்களிலும் வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா இல்லாமை கருதத்தக்கது.

எ-டு : ''விளங்குமணிப் பசும்பொன்னின் விரித்தமைத்துக் கதிர்கான்ற
துளங்குமணிக் கனைகழற்கால் துறுமலர் நறும்பைந்தார்ப்
பருஉத்தடக்கை மதயானைப் பகட்டெழில் நெரிகுஞ்சி
குருஉக்கொண்ட மணிப்பூணோய் ! குறையிரந்து முன்னாட்கண்
மாயாத வனப்பினையாய் மகிழ்வார்க்கும் அல்லார்க்கும்
தாயாகித் தலையளிக்கும் தண்டுறை ஊர ! நீ

இது தரவு.

''காட்சியாற் கலப்பெய்தி எந்திறத்துக் கதிப்பாகி
மாட்சியா றறியாத மரபொத்தாய் கரவினாற்
பிணிநலம் பிரிவெய்திப் பெருந்தடந்தோள் வனப்பழிய
அணிநலம் தனியேவந் தருளுவதும் அருளாமோ ?

''அன்பினால் அமிழ்தனைஇ அறிவினாற் பிறிதின்றிப்
பொன்புனை பூணும் பசப்பெய்தப் பொழிலிடத்துப்
பெருவரைத்தோள் அருளுதற் கிருளிடைத் தமியையாய்க்
கருவரைத்தோள் கதிர்ப்பிக்கும் காதலும் காதலோ ?

''பாங்கனையே வாயிலாப் பலகாலும் வந்தொழுகும்
தேங்காத கரவினையும் தெளியாத இருளிடைக்கட்
குடவரைவேய்த் தோளிணைகள் குளிர்ப்பிப்பான் தமியையாய்த்
தடவரைத்தார் அருளுநின் தகுதியும் தகுதியோ ?

இவை தாழிசை.

'தாதுறு முறிசெறி தடமலர் இடையிடை
தழலென விரவின பொழில் ;
போதுறு நறுவிரை புதுமலர் தெரிதரு
கருநெய்தல் விரிவன கழி ;
தீதுறு திறமறு கெனநனி முனமுனம்
துணையொடு பிணைவன துறை ;
முதுறும் ஒலிகெழு நுரைதரு திரையொடு
கழிதொடர் புடையது கடல்.

இவை நான்கும் அராகம்.

"கொடுந்திறல் உடையன சுறவேறு கொட்பதனால்
இடுங்கழி இரவருதல் வேண்டாவென் றிசைத்திலமோ?
கருநிறத் தெறுதோழிற் கராம்பெரி துடைமையால்
இருணிறத் தொருகானல் இரவாரல் என்றிலமோ?

இவை நாற்சீர் ஈரடி இரண்டம் போதரங்கம்.

"நாளொடு கழிந்தன்றால் பெண்ணரசி நலத்தகையே;
துஞ்சலும் ஒழிந்தன்றால் தொடித்தோளி தடங்கண்ணே;
அரற்றொடு கழிந்தன்றால் ஆரிருளெம் ஆயிழைக்கே;
நயப்பொடு கழிந்தன்றால் நனவதுவும் நன்னுதற்கே.

இவை நாற்சீர் ஓரடி நான்கு அம் போதரங்கம்.

"அத்திறத்தால் அசைந்தன தோள்;
அலரதற்கு மெலிந்தன கண்,
பொய்த்துரையால் புலர்ந்தது முகம்;
பொன்னிறத்தாற் போர்த்தன முலை;
அழலினால் அசைந்தது நகை;
அணியினால் ஒசிந்தது இடை;
குழலினால் அவிர்ந்தது முடி;
குறையினாற் கோடிற்று நிறை"

இவை மூச்சீர் ஓரடி எட்டு அம்போதரங்கம்.

"உட்கொண்ட தகைத்தொருபால்;
உலகறிந்த அலர்த்தொருபால்;
கட்கொண்டல் துளித்தொருபால்;
கழிவெய்தும் படித்தொருபால்;
பரிவுறூஉம் தகைத்தொருபால்;
படர்வுறூஉம் பசப்பொருபால்;
இரவுறூஉம் துயரொருபால்;
இளிவந்த எழிற்றொருபால்;
மெலிவுவந் தலைத்தொருபால்;
விளர்ப்புவந் தடைந்தொரு பால்;
பொலிவுசென் றகன்றொருபால்;
பொறைவந்து கூர்ந்தொருபால்;

காதலிற் கதிர்ப்பொருபால் ;
கட்படாத் துயரொருபால் ;
ஏதிலர்சென் றணைந்தொருபால் ;
இயனுணிற் செறிவொருபால் ;

இவை இருசீர் ஓரடிப் பதினறு அப்போதரங்கம்.

எனவாங்கு

இது தனிச்சொல்.

''இன்னதிவ் வழக்கம் இத்திறம் இவனலம்
என்னவும் முன்னுள் துன்னுய் ஆகிக்
கலந்த வண்மையை ஆயினும் நலந்தகக்
சிலையொடு கெழீஇத் தலையவிழ் கோதையைக்
கற்பொடு காணிய யாமே
பொற்பொடு பொலிகநும் புணர்ச்சி தானே''.

இது சுரிதகம்.

இஃது ஆறு உறுப்பும் குறைவின்றி வந்த வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா.

[யா. வி. மேற். பக். 316, யா. கா. 31. மேற்.]

## கலித்தாழிசை

### 96 ஈற்றடி மிக்கன......ஆகும்

பொ-ள்: அடி சில ஆகியும், பல ஆகியும் வந்து, தம்முள்ளொத்து, ஈற்றடி மட்டும் மிகுந்து வருவது, கலிப்பா வினமாகிய கலித்தாழிசை எனப்படும்.

எ-டு: பூண்ட பறையறையப் பூதம் மருள
நீண்ட சடையான் ஆடுமே
நீண்ட சடையான் ஆடும் என்ப ;
மாண்ட சாயல் மலைமகள் காணவே காணவே !

[யா. வி. மேற். 87, யா. கா. மேற். 33.]

# அவிநயனார் காட்டும் தரவு கொச்சகப்பாட்டு

## கோழியும் கூவின......எம்பாவாய்

பொ-ள் : வைகறைப் பொழுது விடியத் தொடங்கி இருப்பதை கோழிகள் கூவி அறிவித்து விட்டன; துயில் உணர்ந்த செம்போத்துப் பறவையும் குரல் எழுப்புகின்றது; ஆழ்ந்த நீரில் அல்லது சட்டியில் வைத்து வளர்க்கப்பட்ட மலர்ந்த நீலோற்பல மலர் போன்ற பரந்த கண்களை உடைய பெண்களே எழுந்து வாருங்கள். தலை முடி நன்கு நனையுமாறு குளிர் நீரில் மூழ்கிக்குடைந்து நீராடியபின் கடலால் சூழப் பெற்ற உலகத்து மேலோனை அறிவன்—அருக தேவன் திருவடி களைப் புகழ்ந்து பரவி, பல்லூழியும் புகழால் நிலைபெறுவோம் வாரீர்!

வி-ரை : செம்போத்து விட்டுக் குரல் எழுப்புவது ஆதலின், கோழி கூவின, குக்கில் குரல் காட்டும் என்று கூறப்பெற்றது. கண் களுக்கு அழகு மலர்ச்சி. தடங்கண்கள் என்று கூறியது மூலம், மலர வேண்டிய நீல விழிகளை மூடி உறங்குறிர்கள் என்று இடித்துரைத் தாள். அருகன் அனைத்தையும் அறிந்தவன்; அருகனை உல கனைத்தும் அறியும் என்ற இரு கருத்தில் 'வையத்து அறிவன்' என்றார். பெண்டிர், எல்லா நாளும் தலை நனைக்காமல் குளிப்பது சில இடங் களில் பழக்கம். அவ்வாறு இல்லாமல், தலை நனைத்துக் குளித்துக் குதிப்பதைக் 'கூழை நனையக் குடைந்து' என்ற தொடர் உணர்த் தியது. குளிர்புனலில் நீராடுதலே நல்லது என்ற கருத்தில் குளிர் புனல் எனப்பட்டது. அறிவனை ஏத்துதல் வேண்டா! குறைந்தது அவன் காலடியை ஏத்தினாலே போதும். ஊழி தோறும் மன்னலாம் என்பதன் மூலம்—சைனத் தமிழர் பொதுவாகக் காற்பாதங்களை வைத்து வணங்கும் மரபு நினைவூட்டப் பட்டது. இந்தச் சைனப் பாவைப் பாடலே, எல்லாப் பாவைப் பாடல்களுக்கும் முன்னையது என்று கருத இடனுண்டு. இப்பாவைக் கலிவிருத்தத்தில் அடக்குவர் (யா. வி. 93. ப. 363).

''மேல் நாற்சீர் நாலடியான் வருவது கலி விருத்தம் என்று வரை யறுத்துச் சொன்னார் (காரிகை 33); இஃது ஐந்தடியான் வந்தது ஆயினும் ஒருபுடை ஒப்புமை நோக்கிக் கலிவிருத்தத்தின் பாற்படுத்தி வழங்கப்படும். இதனைத் தரவு கொச்சகம் எனினும் இழுக்காது. இஃது அவிநயனார் காட்டியது'' என்பது யாப்பருங்கலக் காரிகை உரை (43. ப. 192).

## வெண்கலிப்பா

97 **கலியொலி......ஆகும்**

பொ-ள்: கலியோசை கலந்து, கலித்தளை இடம் பெற்று, கடைஅடி, வெண்பா இறுதிலைப் போல முச்சீராய் முடிவது வெண் கலிப்பா ஆகும்.

வி-ரை: வெண்கலிப்பா, கலி வெண்பா என்ற இரண்டும் ஒன்றே என்பர். சிலர் இரண்டும் வெவ்வேறு என்பர். அவர் காட்டும் வேறுபாடு வருமாறு:

வெண்கலிப்பா: பெரும்பாலும் கலித்தளையாலும், சிறுபான்மை வெண்டளையாலும் துள்ளலோசை பெற்று வருவது சிறப்பில் வெண் கலிப்பா. கலித்தளையானே வருவதும், வெண்சீர் வெண்டளையானே வருவதும் சிறப்புடை வெண்கலிப்பா.

கலிவெண்பா: இயற்சீர் வெண்டளையும், வெண்சீர் வெண்டளையும் விரவப் பெற்று, வெள்ளோசைப் பெற்றுத் துள்ளலோசை கலந்து வருவது.

பஃறொடை வெண்பா: வெண்டளை மட்டும் விரவப் பெற்றுச் செப்பலோசையுடையதாய் வருவது.

பிற்காலத்து உலா, தூது ஆகியன கலிவெண்பாவான் இயற்றப் பெற்றன. இவை நேரிசை வெண்பாவினைப் போலக் கண்ணி தோறும் தனிச் சொல் பெற்று முடிவன.

எ-டு: மரையா மரல்கவர மாரி வறப்ப
வரையோங் கருஞ்சுரத் தாரிடைச் செல்வோர்
சுரையம்பு மூழ்கச் சுருங்கிப் புரையோர்தம்
உண்ணீர் வறப்பப் புலர்வாடு நாவிற்குத்
தண்ணீர் பெறாஅத் தடுமாற் றருந்துயரம்
கண்ணீர் நனைக்கும் கடுமைய காடென்றால்
என்னீர் அறியாதீர் போல இவை கூறின்
நின்னீர அல்ல நெடுந்தகாய் எம்மையும்
அன்பறச் சூழாதே ஆற்றிடை நும்மொடு
துன்பம் துணையாக நாடின் அதுவல்ல
தின்பமும் உண்டோ எமக்கு [பாலைக்கலி 6]

## கலித்துறை

98 **ஐஞ்சீர்.......ஆகும்**

பொ-ள் : அடிதோறும் ஐஞ்சீரினை உடையதாய், நான்கடியான் ஆக்கப் பெறுவது கலித்துறை ஆகும்.

வி-ரை : 'நெடி லடி நான்காய் நிகழ்வது கலித்துறை' என்பது யாப்பருங்கலம் (88). காக்கை பாடினியாரும் இக்கருத்தினரே.

எ-டு : கொற்றங்கொள் நேமி நெடுமால் குணம் கூறஇப்பால்
உற்றிங்கொர் காதல் கிளரத் தமிழ்நூற்கல் உற்றேன்;
மற்றிங்கொர் குற்றம் வருமா யினுநங்கள் போல்வார்
அற்றங்கள் காப்பார் அறிவிற் பெரியார்கள் அன்றே

[சூளாமணி 3.]

## கலி விருத்தம்

99 **நாற்சீர் நாலடி......கலிவிருத்தம்மே**

பொ-ள் : அடிதோறும் நாற்சீரினை உடையதாய், நான்கு அடிகளால் அமைவது கலிவிருத்தம் எனப் பெறும்.

வி-ரை : 'அளவடி நான்கின கலிவிருத் தம்மே' என்பது யாப்பருங்கலம் (89). காக்கை பாடினி, 'காரிகை (அழகு) சார்ந்த கலிவிருத்தம்' எனப் புகழ்வார்.

எ-டு : வாடலில் கண்ணியன்; மலர்ந்த மார்பினன்;
தாடவிழ் தடக்கையன்; தயங்கு சோதியன்;
கோடுயர் குன்றெனக் குவவுத் தோளினன்;
பீடுடை நடையினன் பெரிய நம்பியை.

[சூளாமணி 76]

பிணிநிலை பெயர்ப்பன; பிறவி தீர்ப்பன;
மணிநிலை விசும்பொடு வரங்கள் ஈவன;
கணைநிலை யிலாத்திறற் கடவுள் தானக
மணிநிலைச் சுடரொளி மலர்ந்து தோன்றவே.

[சூளாமணி 180]

கலித்தாழிசை, துறை, விருத்தம் பற்றி உரைக்கும் காரிகை வருமாறு.

அடிவரை இன்றி அளவொத்தும் அந்தடி நீண்டிசைப்பின்
கடிதலில் லாக்கலித் தாழிசை ஆகும் கலித்துறையே
நெடிலடி நான்காய் நிகழ்வது நேரடி ஈரிரண்டாய்
விடினது வாகும் விருத்தந் திருத்தகு மெல்லியலே

[யா. கா. 43]

## வஞ்சிப்பா

100 தூங்கல் இசை......பாவே

பொ-ள்: தூங்கலோசை உடையதாய், தனிச்சொல், சுரிதகம் பெறுவதாய், தனக்குரிய அடிகளை உடையதாய், ஒன்றிய, ஒன்று வஞ்சித்தளை பெறுவதாய், எல்லை இன்றி எஞ்சாது வருவது வஞ்சிப் பாவாகும்.

வி-ரை: ஏந்திசைத் தூங்கல், அகவல் தூங்கல், பிரிந்திசைத் தூங்கல் எனத் தூங்கலோசை மூவகையாம். சுரிதகம் ஆசிரிய யாப்பால் அமையும் என்பது யாப்பருங்கலம் உடையார் கருத்து.

தூங்கல் இசையன வஞ்சி; மற்றவை
ஆய்ந்த தனிச்சொலோ டகவலின் இறுமே.

[யா. வி. 90]

I இன்னியல் வஞ்சிப்பா

1. இன்னியல் குறளடி வஞ்சிப்பா
2. இன்னியல் சிந்தடி வஞ்சிப்பா

II விரவியல் வஞ்சிப்பா

1. விரவியல் குறளடி வஞ்சிப்பா
2. விரவியல் சிந்தடி வஞ்சிப்பா

எனப் பாகுபாடு காட்டுவர் யாப்பருங்கல விருத்தி உரைகாரர். பட்டினப்பாலையை வஞ்சி நெடும் பாட்டு என்பர் யாப்பருங்கல விருத்தியுரைகாரரும் (81. ப. 127) யாப்பருங்கலக் காரிகை உரை காரரும் (43. ப. 154).

வஞ்சிப்பாவிற்குக் காட்டு :

[ குறளடி வஞ்சிப்பா ]

பூந்தாமரை போதலமரத்
தேம்புனலிடை மீன்திரிதரும்
வளவயலிடைக் களவயின்மகிழ்
வினைக்கம்பலை மனைச்சிலம்பவும்
மனைச்சிலம்பிய மணமுரசொலி
வயற்கம்பலைக் கயலார்ப்பவும்

நாளும்

மகிழும் மகிழ்தூங் கூரன்
புகழ்தல் ஆனுப் பெருவண் மையனே.

[யா. கா. மேற். 9]

தொடியுடைய தோண்மனந்தனன்
கடிகாவிற் பூச்சூடினன்
தண்கமழுஞ் சாந்து நீவினன்
செற்றோரை வழிதபுத்தனன்
நட்டோரை யுயர்பு கூறினன்
வலியரென வழிமொழியலன்
மெலியரென மீக்கூறலன்
பிறரைத்தா னிரப்பறியலன்
இரந்தோர்க்கு மறுப்பறியலன்
வேந்துடையவையத் தோங்குபுகழ் தோற்றினன்
வருபடை யெதிர் தாங்கினன்
பெயர்படை புறங்கண்டனன்
கடும்பரிய மாக்கடவினன்
நெடுந்தெருவிற் றேர்வழங்கினன்
ஓங்கியல களிறூர்ந்தனன்
தீஞ்செறி தசும்பு தொலைச்சினன்
பாணுவப்பப் பசிதீர்த்தனன்
மயக்குடைய மொழிவிடுத்தனன்,

ஆங்குச்,

செய்ப வெல்லாஞ் செய்தன னுகலின்
இடுக வொன்றோ சுடுக வொன்றோ
படுவழிப் படுகவிப் புகழ்வெய்யோன் றலையே!

(புறநானூறு, 239)

இது பிரிந்திசைத் தூங்கல் குறளடி வஞ்சிப்பா.

## வஞ்சித் தாழிசையும், வஞ்சித்துறையும்

*101* இருசீர் நாலடி......துறையே

பொ-ள் : வஞ்சித் தாழிசை, இருசீர் அடி நான்காய், ஒரு பொருள் மேல் மூன்றடுக்கி வரும். அப் பா, நான்கடியாய் ஒரு பொருள் மேல் ஒன்ருய் வருவது வஞ்சித்துறை எனப்படும்.

வி-ரை : காக்கை பாடினி, மயேச்சுரர், அமுதசாகரர் ஆகியோர் இக் கருத்தினரே.

வஞ்சித்தாழிசை : 1. இரும்பிடியை இகல் வேழம்
பெருங்கையால் வெயில் மறைக்கும்
அருஞ்சுரம் இறந்தார்க்கே
விரும்புமென் மனனேகாண் ;

2. மடப் பிடியை மதவேழம்
தடக்கையால் வெயில்மறைக்கும்
இடைச்சுரம் இறந்தார்க்கே
நடக்குமென் மனனேகாண் ;

3. பேடையை இரும்போத்துத்
தோகையால் வெயில் மறைக்கும்
காடகம் இறந்தார்க்கே
ஓடுமென் மனனேகாண்

[யா. வி. மேற். 25]

வஞ்சித்துறை : ஊன் உயர்ந்த உரத்தினன்
மேல் நிமிர்ந்த மிடுக்கினன்
தான் உயர்ந்த தவத்தினன்
வான் உயர்ந்த வரத்தினன்

(கம்பன். யுத்த. கும்பகருணன். 115)

## யாப்பு புறனடை

*102* ஒத்த அடியினும்......படுமே

பொ-ள் : மேலே கூறப்பட்ட அடி, விகற்பம் முதலாயின வரையறுக்கப்பட்டதிலிருந்து திரிந்தும் மிக்கும் குறைந்தும் வந்தால் அவ் வவற்றின் பாற்படுத்து அமைத்துக் கொள்க.

வி-ரை : 'நாற்சீர் நாலடியால் வருவது கலி விருத்தம்' என்பது வரையறை. 'கோழியும் கூவின...' என்ற பாடல் ஐந்தடிப்பா ஆயினும் கலிவிருத்தத்தில் அமைத்துக் கொள்க. இது போன்று மேலும் பலவற்றை அமுதசாகர நூலாரும், உரைகாரரும் காட்டினர். காண்க.

## எழுத்துக் குற்றம்

103 முன்னிலை......யான

பொ-ள் : முன்பாட்டில் நிலத்திணைப் பொருளாகிய மாமரத்திற்கு (மா என்ற சொல்லிற்கு) னகர ஒற்று மிகுத்து 'இயங்குதிணை ஆக்கியது எழுத்துக் குற்றம் ஆகும்.

வி-ரை : முன்னிலை நெடில மாவும் மாவும்
னம்மிகப் புணரும் இயங்குதிணையான

என்பதே சரியான பாடம். இது எழுத்ததிகாரத்திலும் நேமி நாதத்தை ஒட்டி இடம் பெற்றிருப்பது அத்துணைத் தேவை இல்லை.

எ-டு : வெறிகமழ் தண் சிலம்பின் வேட்டமே அன்றிப்
பிறிதுங் குறையுடையான் போலும்—செறிதொடீஇ
தேமான் இதணத்தே யாமாக நம்புனத்து
வாமான்பின் வந்த மகன்

தேமா இதணம்-மாமரத்துப் பரண் என்பது பொருள். தேமா—மாமரம். தவறாக, தேமான் என்று னகர ஒற்று அமைந்தது நிலத்திணை ஆகிய மாமரத்தை இயங்கு திணையாகிய மான் எனப் பிறழ் பொருளாக்கி விட்டது. இது எழுத்துக் குற்றமாம். வாமான்—தாவுகின்ற மான்.

## வகையுளி

104 எழுத்தல் கிளவி......உரித்தே

பொ-ள் : அசை, சீர், அடி, தளை இவை பாவில் சிதையுமிடத்து, சிதையாமல் எழுத்தை முன் பின் சீரின் மாற்றி அமைப்பது வகையுளி ஆகும்.

வி-ரை : மலர்மிசை ஏகினுன் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்

இப்பாடலுள் 'வாழ்வார்' என்பது ஈற்றுச் சீராக அமையின், குறள் வெண்பா ஒலிச் சிறப்பு எய்தாது நீடு எனத் தேமா முன் நேர் வரலால் தளையும் கெடும். இவற்றைத் தவிர்க்க, வாழ் என்பது முன் சீரில் சேர்க்கப் பெற்றது. இதுவே வகையுளி எனப் பெறும்.

கோடி நுண்துகி லும்குழை யும்நினக்
காடு சாந்தமும் அல்லவும் நல்குவேன்
மாட மேநெடி யாய்மழை தோய்ந்துளாய்
நாடி நண்பனை நண்ணுக நன்றரோ

[சிந்தாமணி, 1369]

இப்பாடலில் துகிலும், குழையும், மாடமே, நெடியாய் என்பவை வகையுளி.

## தனிச் சொல் நிற்குமிடம்

105 **தனியே அடிமுதல்......என்ப**

பொ-ள் : பின்வரும் அடிகளின் பொருளை விளங்கிக் கொள்ள உதவுவது தனிச் சொல்லாம். அது வஞ்சிப்பாவில் இறுதியில் வரும் என்பர்.

விரிவிற்கு யாப்பருங்கல விருத்தியைப் பார்க்க. [நூ. 94, ப. 434]

அடிமுதற் பொருள்பெற வருவது தனிச்சொல்; அஃ
திறுதியும் வஞ்சியுள் இயலும் என்ப.

என்பது யாப்பருங்கலம் (94).

எ-டு: அவரே

கேடில் விழுப்பொருள் தருமார் பாசிலை
வாடா வள்ளியங் காடிறந் தோரே

இதனுள் 'அவரே' என்பது தனிச்சொல்.

புறநானூறு ஆறும் பாட்டுள் 'வடாஅது' எனத் தொடங்கும் முதற்சொல் தனிச் சொல்லே.

## பொருள்கோள்

106 **நிரனிறை......கொள்க**

பொ-ள் : நிரனிறை முதலாகக் கொண்டு கூட்டு ஈறாக உள்ளன பொருள்கோளாம்.

| | | |
|---|---|---|
| வி-ரை : | I நிரனிறை | பூட்டுவில் (1) |
| | ,, | புனல்யாறு (2) |
| | ,, | தாப்பிசை (3) |
| | ,, | அளைமறி பாப்பு (4) |
| | ,, | கொண்டு கூட்டு (5) |
| | II சுண்ணம் | பூட்டுவில் (6) |
| | ,, | புனல்யாறு (7) |
| | ,, | தாப்பிசை (8) |
| | ,, | அளைமாறிபப்பு (9) |
| | ,, | கொண்டு கூட்டு (10) |
| | III அடிமறி மொழிமாற்று | பூட்டுவில் (11) |
| | ,, | புனல்யாறு (12) |
| | ,, | தாப்பிசை (13) |
| | ,, | அளைமறிபாப்பு (14) |
| | ,, | கொண்டு கூட்டு (15) |
| | IV அடிமொழி மாற்று | பூட்டுவில் (16) |
| | ,, | புனல்யாறு (17) |
| | ,, | தாப்பிசை (18) |
| | ,, | அளைமறிபாப்பு (19) |
| | ,, | கொண்டு கூட்டு (20) |

பொருள் கோள் நான்கே என்பது தொல்காப்பியம் (சொல். 404); நேமிநாதம் ஒன்பது என்று கூறும் (சொல். 67); நன்னூலும் (411) இலக்கண விளக்கமும் (361) எட்டு என்றிடும். இறையனுர் களவியல் உரை (56) ஐந்து என்றிடும். அவிநயமோ இருபது என்றிடும். இவையனைத்திற்கும் சான்றுதான் கிட்டவில்லை.

## வண்ணங்கள்

107 **அவிநயனுர்......என்ருர்**

பொ ருள்: தூங்கிசை வண்ணம் முதலானவற்றை உறழ நூறு வண்ணங்கள் கிடைக்கும்.

| | | | |
|---|---|---|---|
| வி-ரை : | தூங்கிசை | வண்ணம் : | 20 |
| | ஏந்திசை | வண்ணம் : | 20 |
| | அடுக்கிசை | வண்ணம் : | 20 |
| | பிரிந்திசை | வண்ணம் : | 20 |
| | மயங்கிசை | வண்ணம் : | 20 |

அவை உறழுமாறு :

## தூங்கிசை வண்ணம் 20

### (அகவல்)

குறில் அகவல் தூங்கிசை வண்ணம், நெடில் அகவல் தூங்கிசை வண்ணம், வலி அகவல் தூங்கிசை வண்ணம், மெலி அகவல் தூங்கிசை வண்ணம், இடை அகவல் தூங்கிசை வண்ணம் எனவும்;

### (ஒழுகல்)

குறில் ஒழுகல் தூங்கிசை வண்ணம், நெடில் ஒழுகல் தூங்கிசை வண்ணம், வலி ஒழுகல் தூங்கிசை வண்ணம், மெலி ஒழுகல் தூங்கிசை வண்ணம், இடை ஒழுகல் தூங்கிசை வண்ணம் எனவும்;

### (வல்லிசை)

குறில் வல்லிசைத் தூங்கிசை வண்ணம், நெடில் வல்லிசைத் தூங்கிசை வண்ணம், வலி வல்லிசைத் தூங்கிசை வண்ணம், மெலி வல்லிசைத் தூங்கிசை வண்ணம் இடை வல்லிசைத் தூங்கிசை வண்ணம் எனவும்;

### (மெல்லிசை)

குறில் மெல்லிசைத் தூங்கிசை வண்ணம், நெடில் மெல்லிசைத் தூங்கிசை வண்ணம், வலி மெல்லிசைத் தூங்கிசை வண்ணம், மெலி மெல்லிசைத் தூங்கிசை வண்ணம், இடை மெல்லிசைத் தூங்கிசை வண்ணம் எனவும் இவை குறில் அகவல் தூங்கிசை வண்ணம் முதலிய இருபது தூங்கல் வண்ணம்.

அவைதாம் முதுபிடி நடந்தாற்போலவும், கோம்பி நடந்தாற் நாரை நடந்தாற் போலவும் வரும். அவை ஒரு புடை ஒப்பினால் தூங்கிசை வண்ணம் எனக் கொள்க.

## ஏந்திசை வண்ணம் 20

### (அகவல்)

குறில் அகவல் ஏந்திசை வண்ணம், நெடில் அகவல் ஏந்திசை வண்ணம், வலி அகவல் ஏந்திசை வண்ணம், மெலி அகவல் ஏந்திசை வண்ணம், இடை அகவல் ஏந்திசை வண்ணம் எனவும்;

### (ஒழுகல்)

குறில் ஒழுகல் ஏந்திசை வண்ணம், நெடில் ஒழுகல் ஏந்திசை வண்ணம், வலி ஒழுகல் ஏந்திசை வண்ணம், மெலி ஒழுகல் ஏந்திசை வண்ணம், இடை ஒழுகல் ஏந்திசை வண்ணம் எனவும்;

(வல்லிசை)

குறில் வல்லிசை ஏந்திசை வண்ணம், நெடில் வல்லிசை ஏந்திசை வண்ணம், வலி வல்லிசை ஏந்திசை வண்ணம், மெலி வல்லிசை ஏந்திசை வண்ணம், இடை வல்லிசை ஏந்திசை வண்ணம் எனவும்;

(மெல்லிசை)

குறில் மெல்லிசை ஏந்திசை வண்ணம், நெடில் மெல்லிசை ஏந்திசை வண்ணம், வலி மெல்லிசை ஏந்திசை வண்ணம், மெலி மெல்லிசை ஏந்திசை வண்ணம், இடை மெல்லிசை ஏந்திசை வண்ணம், எனவும் இவை குறில் அகவல் ஏந்திசை வண்ணம் முதலிய இருபது ஏந்திசை வண்ணம்.

அவைதாம் மதயானை நடந்தாற் போலவும், பாம்பு பணைத் தாற் போலவும், ஓங்கிப் பறக்கும் புட் போலவும் வருமெனக் கொள்க.

## அடுக்கிசை வண்ணம் 20

(அகவல்)

குறில் அகவல் அடுக்கிசை வண்ணம், நெடில் அகவல் அடுக்கிசை வண்ணம், வலி அகவல் அடுக்கிசை வண்ணம், மெலி அகவல் அடுக்கிசை வண்ணம், இடை அகவல் அடுக்கிசை வண்ணம் எனவும்;

(ஒழுகல்)

குறில் ஒழுகல் அடுக்கிசை வண்ணம், நெடில் ஒழுகல் அடுக்கிசை வண்ணம் வலி ஒழுகல் அடுக்கிசை வண்ணம், மெலி ஒழுகல் அடுக்கிசை வண்ணம், இடை ஒழுகல் அடுக்கிசை வண்ணம், எனவும்;

(வல்லிசை)

குறில் வல்லிசை அடுக்கிசை வண்ணம், நெடில் வல்லிசை அடுக்கிசை வண்ணம், வலி வல்லிசை அடுக்கிசை வண்ணம், மெலி வல்லிசை அடுக்கிசை வண்ணம் இடை வல்லிசை அடுக்கிசை வண்ணம் எனவும்;

(மெல்லிசை)

குறில் மெல்லிசை அடுக்கிசை வண்ணம், நெடில் மெல்லிசை அடுக்கிசை வண்ணம், வலி மெல்லிசை அடுக்கிசை வண்ணம்,

மெலி மெல்லிசை அடுக்கிசை வண்ணம், இடை மெல்லிசை அடுக்கிசை வண்ணம் எனவும் இவை குறில் அகவல் அடுக்கிசை வண்ணம் முதலிய இருபது அடுக்கிசை வண்ணம்.

அவைதாம் ஒவ்வா நிலத்திற் பண்டி உருண்டாற் போலவும், நாரை இரைத்தாற் போலவும், தாராவும் தார்மணி ஓசையும் போலவும் வரும்.

### பிரிந்திசை வண்ணம் 20

(அகவல்)

குறில் அகவல் பிரிந்திசை வண்ணம், நெடில் அகவல் பிரிந்திசை வண்ணம், வலி அகவல் பிரிந்திசை வண்ணம், மெலி அகவல் பிரிந்திசை வண்ணம், இடை அகவல் பிரிந்திசை வண்ணம் எனவும்;

(ஒழுகல்)

குறில் ஒழுகல் பிரிந்திசை வண்ணம், நெடில் ஒழுகல் பிரிந்திசை வண்ணம், வலி ஒழுகல் பிரிந்திசை வண்ணம், மெலி ஒழுகல் பிரிந்திசை வண்ணம், இடை ஒழுகல் பிரிந்திசை வண்ணம் எனவும்;

(வல்லிசை)

குறில் வல்லிசைப் பிரிந்திசை வண்ணம், நெடில் வல்லிசைப் பிரிந்திசை வண்ணம், வலி வல்லிசைப் பிரிந்திசை வண்ணம், மெலி வல்லிசைப் பிரிந்திசை வண்ணம், இடை வல்லிசைப் பிரிந்திசை வண்ணம் எனவும்;

(மெல்லிசை)

குறில் மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம், நெடில் மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம், வலி மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம், மெலி மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம், இடை மெல்லிசைப் பிரிந்திசை வண்ணம் எனவும் இவை குறில் அகவல் பிரிந்திசை வண்ணம் முதலிய இருபது பிரிந்திசை வண்ணம்.

அவைதாம் பெருங்குதிரைப் பாய்த்தலும், ஒன்று கொட்டியும் இரண்டு கொட்டியும் முதலாக உடையறுத்துக் கொட்டுப் போலவும் வரும்.

### மயங்கிசை வண்ணம் 20

(அகவல்)

குறில் அகவல் மயங்கிசை வண்ணம், நெடில் அகவல் மயங்கிசை வண்ணம், வலி அகவல் மயங்கிசை வண்ணம், மெலி அகவல் மயங்கிசை வண்ணம், இடை அகவல் மயங்கிசை வண்ணம் எனவும்;

(ஒழுகல்)

குறில் ஒழுகல் மயங்கிசை வண்ணம், நெடில் ஒழுகல் மயங்கிசை வண்ணம், வலி ஒழுகல் மயங்கிசை வண்ணம், மெலி ஒழுகல் மயங்கிசை வண்ணம், இடை ஒழுகல் மயங்கிசை வண்ணம் எனவும்;

(வல்லிசை)

குறில் வல்லிசை மயங்கிசை வண்ணம், நெடில் வல்லிசை மயங்கிசை வண்ணம், வலி வல்லிசை மயங்கிசை வண்ணம், மெலி வல்லிசை மயங்கிசை வண்ணம், இடை வல்லிசை மயங்கிசை வண்ணம் எனவும்;

(மெல்லிசை)

குறில் மெல்லிசை மயங்கிசை வண்ணம், நெடில் மெல்லிசை மயங்கிசை வண்ணம், வலி மெல்லிசை மயங்கிசை வண்ணம் , மெலி மெல்லிசை மயங்கிசை வண்ணம், இடை மெல்லிசை மயங்கிசை வண்ணம் எனவும் இவை குறில் அகவல் மயங்கிசை வண்ணம் முதலிய இருபது மயங்கிசை வண்ணம்.

அவைதாம் நகரம் இரைந்தாற் போலவும், நாரை இசையும் ஆர்ப்பிசையும் இயமர இசையும் தேரைக் குரலும் போலவும் வரும்.

சூறைக் காற்றும் நீர்ச்சுழியும் போல வருவது, அகவல் வண்ணம். நீரொழுக்கும் காற்றெழுக்கும் போல வருவது, ஒழுகல் வண்ணம். தோற்கயிறும் இரும்பும் திரித்தாற் போலவும், கன்மேற் கல் உருட்டினுற் போலவும் வருவது, வல்லிசை வண்ணம். அன்ன நடையும் தண்ணம் பறையும் போலவும், மணன் மேல் நடந்தாற் போலவும் வருவது, மெல்லிசை வண்ணம். இவை தொழில் வகையால் ஒரு புடை ஒப்புமை காட்டியவாறு.

இவை நூறு வண்ணமும் தம்முள் மயங்கி வரினும், மிக்கதனுற் பெயர் கொடுத்து வழங்கப் பெறும்.

[யாப்பருங்கல விருத்தி, பக். 411-416]

## பாக்களும் அவை பெறும் வண்ணங்களும்

1. ஆசிரியம் — குறில் அகவல் தூங்கிசை வண்ணம்.
2. வஞ்சி — ஒழுகிசைத் தூங்கல் வண்ணம்.
3. கலிப்பா — குறில் அகவல் ஏந்திசை வண்ணம்.

வண்ணங்களின் விரிவு யாப்பருங்கல விருத்தியிலும், யாப்பருங் கலக் காரிகை உரையிலும் கூறப்பட்டுள்ளது. அவற்ருல் வண்ணம் பற்றி இரு கொள்கைகள் இருந்தனவாகத் தெரிகின்றன. இருபது வண்ணம் என்பது தொல்காப்பியர் கொள்கை; நாறு வண்ணம் என்பது அவிநயனுர் கொள்கை. ஆனல் காலப்போக்கில் இரண்டுமே வழக்கிழந்து விட்டன.

## வண்ணம்

108 **தத்தம் பாவின...... ஆகும்.**

பொ-ள்: தத்தம் பாவினங்கள் ஒப்பினும், குறைந்தாலும், ஒரோ வொன்று சில வேற்றுமைகளால் ஒவ்வா வேனும், பாவிற் குரிய வண்ணங்கள் பொருந்தாமற் போயினும் பாவினத்தின் பண்ணி சைக்குத்தக அவை கொள்ளப்பெறும்.

யாப்பருங்கலக் காரிகை (23) இல் இது எடுத்துக்காட்டப்பெற் றுளது. இதன் அடிப்படையிலேயே செப்பலோசையில் சிறிது வழுவி வந்த நேரிசை இன்னிசை வெண்பாக்களை ஒரு புடை ஒப்புமை நோக்கி வெண்துறைப்பாற் படுத்துவர்.

## அவிநயப் புறனடை

### சிறப்புப்பாயிரம்

109 **வணக்கம் அதிகாரம்...... ஆம்**

பொ-ள்: வணக்கம், அதிகாரம் என்ற இரண்டும் சிறப்புப் பாயிரத்தின் கண் கூறப் பெறும்.

வி-ரை: நூலை இனிதே முடித்தற்கு இறை வணக்கமும், அதிகரிக்கப்படும் பொருளையும் சிறப்புப் பாயிரம் உணர்த்த வேண்டும் என்பது கருத்து.

'பூமலி அசோகின் புனை நிழல் அமர்ந்த
நான்முகன் தொழுது நான்கியம்புவன் எழுத்தே'
'முச்சக நிழற்று முழுமதி முக்குடை
அச்சுதன் அடிதொழுது அறைகுவன் சொல்லே'

என்ற நூற்பாக்கள் (நன். 56, 258) இதற்குப் பொருந்திய காட்டாகும். 'நான்முகன்' 'அச்சுதன்' என வணக்கமும், 'இயம்புவன் எழுத்தே',

'அறைகுவன் சொல்லே' என அதிகாரமும் கூறப்பட்டன. அதிகாரம்—நூலில் அதிகரிக்கப்படும் நூற்பொருள். அதிகாரம் என்பதற்குச் சிவஞான முனிவர் தம் நன்னூல் புதுக்கிய உரையில் எழுதியமை இங்குச் சுட்டத் தக்கதாம்.

'அதிகாரம்—அதிகரித்தல். அஃது இருவகைப்படும். அவற்றுள் ஒன்று, வேந்தன் இருந்துழி இருந்து தன் நிலம் முழுவதும் தன் ஆணையின் நடப்பச் செய்வது போல, ஒரு சொல் நின்றுழி நின்று பல சூத்திரங்களும் பல ஒத்துகளும் தன் பொருளே நுதலி வரச் செய்வது. ஒன்று, சென்று நடாத்தும் தண்டத் தலைவர் போல, ஓரிடத்து நின்ற சொல் பல சூத்திரங்களோடும் சென்று இயைந்து தன் பொருளைப் பயப்பிப்பது. இவற்றிற்கு, முறையே யதோத்தேச பக்கம் எனவும், காரியகால பக்கம் எனவும் கூறுப... அவற்றுள் ஈண்டு அதிகாரம் என்றது முன்னையது'.

[நன்னூல் விருத்தி உரை, எழுத்ததிகார முகவுரை]

## முதல் வைப்பு எழுத்துகள்

### 110 அகரம் முதலாக.........வைப்பு

பொ-ள்: அகரம் முதல் ஔ ஈறாக உள்ள உயிர் எழுத்து பன்னிரண்டும், ஆய்தம் ஒன்றும், ககரம் முதலாக னகரம் ஈறாக உள்ள மெய்யெழுத்துப் பதினெட்டும் முதல் வைப்பெழுத்துகளாம்.

எ-டு: அ ஆ இ ஈ உ ஊ எ ஏ ஐ ஒ ஓ ஔ, ஃ, க ங ச ஞ ட ண த ந ப ம ய ர ல வ ழ ள ற ன.

வி-ரை: முதல் எழுத்து என்ற கருத்தினது முதல் வைப்பு என்பது போலும். முதல் வைப்பு என்ற ஆட்சி புதுமையானது. இவரைப் பார்த்தே நேமிநாத ஆசிரியரும் இவ்வாட்சியை வழிமொழிந்தார் போலும்.

ஆவி அகர முதல் ஆறிரண்டாம் ஆய்தமிடை
மேவும் ககர முதன் மெய்களாம் – மூவாறும்
கண்ணு முறைமையால் காட்டியமுப் பத்தொன்று
நண்ணு முதல் வைப்பாகு நன்கு

என்பது நேமிநாதம் (2).

இரண்டாம் வைப்பு அல்லது சார்பெழுத்து என்ற நிலைக்கு மேலாக ஆய்தம் முதல் வைப்பு நிலையை எய்தி இருப்பது எழுத்து வரலாற்றில் குறிப்பிடத் தக்கது.

## அசைக்கு உறுப்பாகும் எழுத்துகள்

**111 குறில் நெடில்......சமன்**

பொ-ள் : குறில், நெடில், ஆய்தம், உயிரளபெடை, ஒற்றளபெடை, ஐகாரக் குறுக்கம், குற்றியலிகரம், குற்றியலுகரம், உயிர்மெய், மெய், வல்லொலி ஆறு, மெல்லொலி ஆறு, இடையொலி ஆறு என்பன அசைக்குரிய எழுத்துகளாம்.

வி-ரை : 'மறுவில் உயிர்மெய்' என்பது ஆசிரியனின் ஆன்ம விழைவைக் காட்டுகிறது. வன்மையை 'செயல் வன்மை' என்றது வல்லொலி உடைமை பற்றி. செயிர்—சினம். இடைநிலை—நடுநிலை—சமநிலை என்ற கருத்தில் இடையெழுத்துச் 'சமன்' எனக் குறிக்கப் பட்டது,

## அசைக்கு உறுப்பாகும் எழுத்துகள் 16

**112 குறிலுயிர்.....எழுத்து**

பொ-ள் : குறிலுயிர் ஐந்து, வல்லெழுத்து ஆறு, குற்றியலுகரம், ஐகாரக் குறுக்கம், ஔகாரக் குறுக்கம், மகரக்குறுக்கம், ஆய்தக் குறுக்கம், என்ற பதினாறு எழுத்துகளும் அசை தொடை வண்ணங்கட்கு, முறையாகப் பொருந்தி வருவனவாம்.

வி-ரை : முன்னதற்கும்(111) இதற்கும் உள்ள வேற்றுமை. முன்னது அசைக்குரிய எழுத்துகளைக் கூறுகிறது. சில எழுத்துகளால் வண்ணம் சிறந்து செய்யுட்கள் அமைக்கப்படுவதை இந் நூற்பா எடுத்துரைக்கிறது. உயிர்மிக்கு வந்த செய்யுள், மெய் மிக்கு வந்த செய்யுள் என்ற விரிவான செய்திகளைத் தக்க எடுத்துக்காட்டுகளுடன் யாப்பருங்கல விருத்தி உரைகாரர் விளக்குவர். (எழுத்தோத்து, ப. 31).

## ஐகாரக் குறுக்கத்தின் மாத்திரை அளவு

**118 குறுமை எழுத்தின்......கால்**

பொ-ள் : ஐகாரம் தன் இயல்பிற்குத் தக நெடிலாக வாராமல், குறுக்கமாக வருமிடங்களில், குற்றுயிருக்குரிய ஒரு மாத்திரையே அதற்கும் உரியகால அளவாம்.

வி-ரை : ஐகாரம் தனி எழுத்தாகச் சொல்லப்படும் இடம், அளபெடுத்து நிற்கும் இடம் தவிர, பிற இடங்களில் எல்லாம் தனக்குரிய ஒலியளவில் குறைந்தே ஒலிக்கும்.

தற்சுட்டு அளபொழி ஐம் மூ வழியும்
நையும் ஔவும் முதல் அற்றகும்

என்பது நன்னூல் (95 இலக்கணவிளக்கம், 21), இது பற்றிய விரிவானவிளக்கம் 14ஆம் நூற்பா உரையில் சொல்லப்பட்டிருக்கிறது.

## தமிழ்ச் சிறப்பெழுத்துகள்

### 114 றனழ எ ஒ......மற்று

பொ-ள் : றனழ எ ஒ என்பன முதலாயின(?) தமிழிற்கே உரிய சிறப்பெழுத்துகளாம். ஏனைய தமிழிற்கும் ஆரியத்திற்கும் உரிய பொது எழுத்துகளாம்.

வி-ரை : 'தனியும் மகாரமும்' என்பதன் பொருள் தெளியக் கூடவில்லை. மகாரம் மகரமெய்யைக் குறிப்பதெனின் அது தமிழிற்கே உரிய சிறப்பெழுத்து ஆகாதே. தனி-என்பது ஆய்தக் குறுக்கத்தையும், மகரம் என்பது மகரக் குறுக்கத்தையும், குறித்திருக்கலாமா? ஆய்தம் என்பது 'தனிநிலை' என நன்னூலிலும், யாப்பருங்கல விருத்தியிலும் குறிக்கப்படுகிறது. றனழ என மெய்யை முன்னே குறித்துப் பின்னே மெய்க் குறுக்கத்தைக் குறித்தார் எனக் கருதலாமா? இவை ஆய்விற்குரியன. இந்நூற்பாவிற்குப் பாடபேதம் வேறு உள்ளது. பவணந்தி, றனழ எ ஒ என்ற ஐந்தும், உயிர் மெய்யும், உயிரளபெடையும் நீங்கிய சார்பெழுத்துகள் (1) ஆய்தம், (2) ஒற்றளபெடை, (3) குற்றியலிகரம், (4) குற்றியலுகரம், (5) ஐகாரக் குறுக்கம் (6) ஔகாரக் குறுக்கம் (7) மகரக்குறுக்கம் (8) ஆய்தக்குறுக்கம் என்ற எட்டும் தமிழிற்கே உரிய சிறப்பெழுத்துகள் என்பர் (149).

றனழ எ ஒவ்வும் உயிர்மெய்யும் உயிரளபு
அல்லாச் சார்பும் தமிழ்பிற பொதுவே

பவணந்திக்கு வழிகாட்டியவர் அவிநயனாரே என்பது இந்நூற்பாவாலும், மயிலைநாதர் நன்னூல் உரையாலும் தெளிவாகிறது. அவிநயனார்தம் ஒப்பீட்டு இலக்கண அறிவை இந்நூற்பா சாற்றுகிறது.

## சொல்

### 115 தன்னை உணர்த்தின்......சொல்

பொ-ள் : உரிய ஒலி தன்னை உணர்த்துகிறபொழுது எழுத்தாம். உரிய பொருளை அது உணர்த்துகிறபொழுது சொல்லாம்.

எ-டு : ஆ—நெட்டுயிர் எழுத்து

ஆ—பசு என்ற பொருளை உணர்த்துகிறபொழுது சொல்

வி—ரை : மிக அருமையான நூற்பா இது. தற்கால மொழியியலார்,* பொனீம் (Phoneme) என்பதற்கும், மார்பீம் (Morpheme) என்பதற்கும் எங்கே எங்ஙனம் வேறுபாடு நல்குகிறார்களோ அதனை அவிநயனார், பன்னூறு ஆண்டுகட்கு முன் நல்கி இருப்பது வியக்கத் தக்கது. பவணந்தி அவிநயக் கருத்தை உட்கொண்டே 'எழுத்தே தனித்தும் தொடர்ந்தும் பொருள்தரின் பதமாம்' என்றார் (நன். 171).

அவிநய மூலத்தில் நன். மயிலை 271 என்றிருப்பது 171 என் றிருத்தல் வேண்டும்.

## வழுக்களின் தொகை

116 **திணைபால் மரபு......இழுக்கு**

பொ-ள் : திணைவழு, பால்வழு, மரபுவழு, வினாவழு, செப்பு வழு, காலவழு, இடவழு என வழு ஏழாகும்.

எ-டு : (1) திணை வழு — அவன் வந்தது

(2) பால் வழு — அவன் வந்தாள்

(3) மரபு வழு — மனிதக் குட்டி

(4) வினா வழு — பஞ்ச பாண்டவர் என்றால் எத்தனைப் பேர்?

(5) செப்பு வழு — தமிழ் நாட்டின் தலைநகரம் எது என்று வினவினால் இந்தியாவின் தலைநகரம் தெரியாது என விடையளிப்பது

(6) கால வழு — நேற்றைக்கு வாங்கி வா

(7) இட வழு — அவன் வந்தேன்

* Phonemes have no meanings ; morphemes have meanings. Gleason. H. A, An Introduction to *Descriptive Linguistics P 11.*

Morphemes are the smallest individually meaningful elements in the utterences of a Language.Hockett. C. F. A course in Modern *Linguistics P. 123*

வி-ரை : அவிநயனுர்தாம் வழுக்களை முதன்முதல் ஓரிடத்தில் தொகுத்தளித்தவர் எனத் தெரிகிறது. குணவீர பண்டிதர், பவணந்தி, வைத்தியநாத தேசிகர் முதலானோர் அவரை அப்படியே வழி மொழிந்தனர்.

## நால்வகைப் பாவிற்குரிய அடி மயக்கம்

117 **ஆசிரியப் பாவின்......உற்று**

பொ-ள் : ஆசிரியப் பாவில் பிற பாவிற்குரிய அடிகள் மயங்கி வரும்; வெண்பா அடியும் கலியடியும் ஆசிரியத்துள் மயங்கும். ஆசிரியப் பாவிற்குரிய அடியும் வெண்பாவிற்குரிய அடியும் கலிப் பாவில் சென்று மயங்கும்; வஞ்சிப்பாவின் கண், வெண்பாவிற்குரிய அடிகள் சென்று பொருந்தா. (பிற ஆசிரிய அடியும் கலியடியும் வந்து பொருந்தும்.)

வி-ரை : ஆசிரியம் வெண்பா என்பதை எண்ணும்மைத் தொகையாகக் கொண்டு ஆசிரியமும் வெண்பாவும் கலிக்கண் ஆகும் எனப் பொருளுரைக்கப் பெற்றது.

'கலியினுள்ளான் முயக்கப்படும் முதற்கால் இருபாவும் முறைமையினுனே என்றது கலிப்பாவினுள் வெண்பாவும் ஆசிரியப்பாவும் புக்கு மயங்கப்படும்' என்ற யாப்பருங்கலக் காரிகை உரை (89) காண்க.

'ஆசிரியம் வெண்பாக் கலி விரவும்' என்பதற்கு வெண்பா அடியும், கலி அடியும், ஆசிரியத்துள் மயங்கும் எனப் பொருள் செய்யப் பெற்றது.

'இயற்றளை வெள்ளடி வஞ்சியின் பாதம் அகவலுள்ளான் மயக்கப்படா அல்ல' என்றது இயற்சீர் வெண்டளையின் வந்த வெண்பா அடியும் வஞ்சி அடியும் ஆசிரியப்பாவினுள் மயங்கப் பெறும்' என்பது காரிகை உரை.

> இயற்சீர் வெள்ளடி ஆசிரிய மருங்கு
> நிலைக்குரி மரபின் நிற்கவும் பெறுமே

என்பது தொல்காப்பியம். (செய்யுளியல், 59)

வஞ்சிப்பாவினுள் பிற ஆசிரிய அடியும், கலியடியும் வந்து பொருந்தும் என வருவித்து உரைக்கப்பட்டது.

'வஞ்சி மருங்கின் எஞ்சா அகவல் கலிப்பாதமும் நண்ணும்'

என்பது காரிகை (39).

வஞ்சியுள் அகவல் மயங்கினும் வரையார்

என்பது யாப்பருங்கலம் (31).

இவ் வவிநயப் புறநடை வெண்பாவை, யாப்பருங்கல உரையாசிரியரும், காரிகை உரையாசிரியரும் தம் உரையில் (யா. 31, யா. கா. 39) எடுத்துக் காட்டினர். காரிகை இவ்வெண்பாவினை வழி மொழிந்து எழுதப்பெற்றது போலும்.

இயற்றடி வெள்ளடி வஞ்சியின் பாதம் அகவலுள்ளான்
மயக்கப்படா அல்ல வஞ்சி மருங்கின்எஞ் சாஅகவல்
கயற்கண்நல் லாய்! கலிப் பாதமும் நண்ணும் கலியினுள்ளான்
முயக்கப் படுமுதற் காலிரு பாவு முறைமையினே

என்பது காரிகை (39).

## பல மயக்கங்கள்

**118 சீர் வண்ணம்.....புகும்**

பொ-ள்: மாச்சீர் தவிர ஏனைய சீர்களும் வண்ணங்களும், கலிப்பாவில் மயங்கும். வஞ்சிப்பாவில், கலிப்பாவிற்குரிய சீர் சென்று அருகி மயங்கும்; வெண்பாவில், அதற்குரிய வெண்டளைகளைத் தவிர பிற தளைகள் மயங்கப் பெறுது. வெண்பா, கலிப்பாவில் வெண்கலியாகவும், கலிவெண்பாவாகவும் சென்று மயங்கும்.

வி-ரை: இதனேடு யாப்பருங்கலக் காரிகை ஒத்து வைத்துப் பார்க்கத் தக்கது.

மாஞ்சீர் கலியுட் புகாகலிப் பாவின் விளங்கனி வந்
தாஞ்சீர் அடையா அகவல் அகத்துமல் லாதஎல்லாம்
தாஞ்சீர் மயங்கும் தளையும்அஃ தேவெள்ளைத் தன்மை குன்றிப்
போஞ்சீர் கனிபுகின் புல்லா தயற்றளை பூங்கொடியே

என்பது காரிகை (38).

# அவிநயனார் பாட்டியல்

## உண்டி

**119* உணவே அமுதம்......ஆகும்**

பொ-ள் : அமுதம், விடம் என உணவு இருவகை ஆகும்.

வி-ரை : உணவானது அமுதம், விடம் என்று இருவகைப்படும். எழுத்துகளிலும் சில எழுத்துகள் நன்மை செய்யும். சில தீமை செய்யும் நன்மை செய்வன அமுத எழுத்து என்றும், தீமை செய்வன விடம் அல்லது நஞ்செழுத்து என்றும் பாட்டியல் நூல்களால் கூறப்பெற்றன. அமுதம் என்பது அமிழ்தத்தை உணர்த்தாமல், அமிழ்தம் போன்ற உணவையும் உணர்த்தாமல், எழுத்தை உணர்த்தியமையால் இருமடியாகு பெயராம். விடம் என்பதும் அன்னது.

அ இ உ எ என்ற நான்கு உயிரெழுத்துகளையும், க ச த ப ந ம வ என்ற மெய் யெழுத்துகளையும் அமுத எழுத்து என்பர். ஆ ஓ என்ற உயிரெழுத்துகளும், ய ர ல என்ற மெய்களும், அவற்றின் உயிர்மெய்களும் நஞ்செழுத்து என்பர். இவற்றின் விரிவைப் பன்னிரு பாட்டியலிலும், இந்திரகாளியத்திலும் பார்க்க.

## மங்கலப் பாக்கள்

**120 வெள்ளை அகவல்......பாவே**

பொ-ள் : வெண்பா, அகவற்பா, விருத்தப்பா, கலிப்பா, வஞ்சிப்பா ஆகியன மங்கலப் பாக்கள் எனப் பெறும்.

வி-ரை : 'அகவல் விருத்தம்' என்பதற்கு ஆசிரிய விருத்தம் எனப்பொருள் கொள்ளாமல், அகவலும் விருத்தமும் என எண்ணும்மையாகப் பொருள் கொள்ளப் பெற்றது. காரணம்,

வெள்ளையும் அகவலும் விருத்தமும் கலியும்
வஞ்சியும் எஞ்சா மங்கலம் பொருந்தும்

என்பது பன்னிரு பாட்டியல் ஆதலின் (98).

* அவிநயனார் பாட்டியல் எண் 122விருந்து தொடங்குவதாக மூலத்திலும், 'சைனரின் தமிழிலக்கண நன்கொடை' என்ற நூலிலும் (பக்கம் 199) அமைந்திருப்பது அச்சுப்பிழை. என் 119இலிருந்தே அவிநயனார் பாட்டியல் என்று கொள்க.

இந்நூற்பாவால், அவிநயனார் தம் காலம் தெளிவாகிறது. தொல்காப்பியர் நால்வகைப் பாக்களையே போற்ற இவர், 'விருத்தம்' என்ற பாவையும் குறிப்பிடுகிறார். ஆதலின் இவர் தொல்காப்பியர் உடன் பயின்றவர் ஆகார். அல்லது, தொல்காப்பியர் உடன் பயின்ற அவிநயனார் ஒருவர்; இவர் பிறிதொருவர் என்று கொள்ளல் வேண்டும். சங்க இலக்கியங்களிலோ, தொல்காப்பியத்துள்ளோ அவிநயனார் பற்றிய குறிப்பெதுவும் இல்லை. ஆதலின் அவிநயனாரைத் தொல்காப்பியருடன் இணைத்துக் காட்டியது கதை என்றே கொள்ளல் தகும். தமிழின்கண் விருத்தப்பாக்கள் செல்வாக்குப் பெற்ற காலத்தில்தான் இவர் வாழ்ந்திருத்தல் வேண்டும். கி.பி. 7, 8, 9ஆம் நூற்றாண்டுகளில் விருத்தப்பா செல்வாக்குப் பெற்றதை மூவர் தேவாரமும், சீவக சிந்தாமணியும் உணர்த்துகின்றன. அவிநயனார் சைன அறிஞர். ஆதலால் தம் மொத்த திருதக்கதேவர்தம் விருத்தப்பா வெற்றியைக் கண்டே, விருத்தப்பாவையும் மங்கலப் பாவாகச் சேர்த்திருத்தல் வேண்டும். அங்ஙனமெனில் அவிநயனார் காலம் திருதக்க தேவர்காலம் என்றாகிறது. அஃதாவது கி. பி. 9ஆம் நூற்றாண்டு.

## உலா

121 காட்டிய முறையே......உளரே

பொ-ள்: பெண்பாற்குப் பருவப் பிரிவுகள் காட்டியது போல, ஆண்பாற்கும் எல்லை, பொருள் இவை ஆராயப்பட்டு எழுபருவங்களைப் பாகுபடுத்திக் கூறிய அறிஞர்கள் உள்ளனர்.

வி-ரை: பாட்டுடைத் தலைவன் உலாவையும், அவனைக் காணுகிற பெண்களின் காதலையும் கலிவெண்பாவில் அமைத்துப் பாடுவர். இவ்வீதியுலா,

'ஊரோடு தோற்றமும் உரித்தென மொழிப'

என்ற (புறத்திணை இயல் 30) நூற்பா நச்சினார்க்கினியர் உரையிலும் விளக்கப் பெற்றுள்ளது. வீதியுலாவின் போது, தலைவனைக் காணும் பெண்களைப் பருவ அடிப்படையில் ஏழாகப் பகுக்கிறது பன்னிரு பாட்டியல்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | பேதை | 5 முதல் | 8 வரை | — | 4 | ஆண்டுகள். |
| 2. | பெதும்பை | 9 ,, | 10 ,, | — | 2 | ,, |
| 3. | மங்கை | 11 ,, | 14 ,, | — | 4 | ,, |
| 4. | மடந்தை | 15 ,, | 18 ,, | — | 4 | ,, |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 5. | அரிவை | 19 ,, | 24 ,, | — | 6 ஆண்டுகள் |
| 6. | தெரிவை | 25 ,, | 29 ,, | — | 5 ,, |
| 7. | பேரிளம்பெண் | 30 ,, | 36 ,, | — | 7 ,, |

வச்சணந்திமாலை, இலக்கண விளக்கம் என்ற இருநூல்களும் சற்று மாறுபடுகின்றன.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | பேதை | 5 முதல் | 7 வரை | — | 3 ஆண்டுகள் |
| 2. | பெதும்பை | 8 ,, | 11 ,, | — | 4 ,, |
| 3. | மங்கை | 12 ,, | 13 ,, | — | 2 ,, |
| 4. | மடந்தை | 14 ,, | 19 ,, | — | 6 ,, |
| 5. | அரிவை | 20 ,, | 25 ,, | — | 6 ,, |
| 6. | தெரிவை | 26 ,, | 31 ,, | — | 6 ,, |
| 7. | பேரிளம் பெண் | 32 ,, | 40 ,, | — | 9 ,, |

பெண்டிர்க்கு மட்டுமல்லாமல் ஆடவர்க்கும் ஏழு பருவநிலைகள் உண்டு என்பது அவிநயக் கருத்து. அது அடுத்து வரும் நூற்பாக்களில் விளக்கப்படுகிறது.

## பாலன்

### 122 பாலன் யாண்டே......மொழிப

பொ-ள் : பாலன் என்ற முதற் பருவத்தின் காலம் முதல் வயது முதல் ஏழு வயது வரை ஏழாண்டுகளாம்.

வி-ரை : ஆடவர்தம் ஏழு பருவங்கள் பாலன், மீளி, மறவோன், திறலோன், காளை, விடலை, முதுமகன் எனப் பெயர் பெறும் இவ்விளக்கம் பிற யாராலும் கூறப்படாதது. அவிநயனாரே கூறிய முதலமாவர் ஆவார். பிற இலக்கணங்களிலோ, இலக்கியங்களிலோ இப்பருவங்கள் போற்றப்பட்டனவா என்பது ஆய்விற்குரியது.

### 123—128 மீளியாண்டே......முதுமகன்

பொ-ள் : ஏழு ஆண்பாற் பருவப் பெயர்களும், அவற்றிற்குரிய காலமும் :

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | பாலன் | 1 முதல் | 7 வரை | — | 7 ஆண்டுகள் |
| 2. | மீளி | 8 ,, | 10 ,, | — | 3 ,, |
| 3. | மறவோன் | 11 ,, | 14 ,, | — | 4 ,, |
| 4. | திறலோன் | 15 தொடக்கம் | 15 ,, | — | 1 ,, |
| 5. | காளை | 16 ,, | 16 ,, | — | 1 ,, |
| 6. | விடலை | 17 முதல் | 30 ,, | — | 14 ஆண்டுகள் |
| 7. | முதுமகன் | 30 க்கு மேல் | | | |

## வாதில் வெல்லும் வழி

129 தூக்கியல் வகை......பெறுமே

பொ-ள்: நல்லவையின் கண், ஓலை தாங்கி, ஒரு நூலை அரங் கேற்றுகையில், ஆடவரில் சிறந்த நம்பி, தன் மகன், மாணுக்கன், தன் ஆசிரியன் ஆகியோர் எழுப்பும் தடைகளுக்கு உடன்படாமல் பொருத்தமான விளக்கத்தைக் கூறுபவனே நல்லவையில் வெற்றி பெறுவான்.

வி-ரை: 'பாடவம் பேசிப் பலகால் நகைசெய்து பாங்குரைத்து
நாடகம் காட்டியோர் நாயகம் இன்றி நவிலுநன்னூல்
ஏடகம் நோக்காது இகலே பெருக்கி அறத்தைவிட்டுக்
கூடகம் செய்து போய்' (நவநீதப்பாட்டியல் 91)

கூறுவார் கூற்றைச் செவித்திறம் கொள்ளலாகாது. சினமின்றித் தன்னுல் கருதப்பட்ட மேற்கோளுக்குத் தக்கன எடுத்துக் கூறிச் சமன் செய்து உடன்பட்ட பிராமண நெறிகளான விதண்டை, வாதம், சற்பம் (நவநீதப்பாட்டியல் 93) என்னும் மூன்றில் வேண்டியது கொண்டு உரை நிகழ்த்தி வெல்லுபவனே சிறந்த வாதில் வல்லவன் ஆவான்.

## அவைபுகும் நெறி

130 அவை புகும்......என்ப

பொ-ள்: பொருளைத் தெளிவாகக் கண்டறியக் கூடவில்லை.

தன் பாவை அல்லது நூலை நல்லவையின்கண் அரங்கேற்றச் செல்லுவான், அவையில் அறிந்தவர் எழுப்பும் தடைகளுக்குத் தக்க விடை தரல் வேண்டும். தடை எழுப்பியவர்தம்

'சாதி நோக்கியும் தன்மை நோக்கியும்
வாதம் அழித்துரை'

(செய்யுள் வகைமை, நவநீதப்பாட்டியல் மேற்கோள், 96) யாது விஞவியவரும் ஒருங்குடன்படத் தெளிவாக விடையிறுத்து வெற்றி கொள்ளுதல் வேண்டும் என்பது பின் அடிகளின் கருத்துப் போலும்.

———

# அவிநயம்

## நூற்பா முதற்குறிப்பு அகராதி

[பு : புறத்திணைப் படலம்]